இதழாய் ஓர் எழுத்தியக்கம்

# கவிதாசரண்

பிப்ரவரி
மார்ச் 2009
விலை ரூ.20/-



## எனக்கான வரைபடம்

என் தோட்டத்து வேம்பில்
கட்டப்பட்டிருக்கும் கூட்டில்
குயில்குஞ்சுக்கு உணவூட்டும் காகத்தை
விரட்டியடிக்கிறாய்.

உன் சாதிக்கவண்களின் கேள்விக்கான
பதில்
என் கற்களிலும் உண்டு.



எனக்கும் உனக்கும்
நிழல்தரும் வேம்பு
என்னையும் உன்னையும்
நிறுத்திவிடும் இசைக்குயில்
என் உணவு உன் உணவு
நம் உணவாகும் காகத்திற்கு.

நமக்கானதாய் இருந்ததைப்
பிறகு
உனக்கானதென்கிறாய்.

என் பிள்ளைகளைப் போருக்கனுப்பி
பால் கட்டிய முலையைப்
பீய்ச்சியடிப்பேன்
எனக்கான எல்லையை
நீ
தொட்டால்
உடைபடும் மௌன நிட்சியில்
பிறக்கும்
எனக்கான தமிழீழ வரைபடம்.

■ அரங்கமல்லிகா

யாரங்கே
என் கல்லறையின் மீது
நின்றுகொண்டு—

எனக்காகக்
கண்ணீர் வடிக்கும் அந்த
மெழுகுவர்த்திகளை
அணைத்துவிடுங்கள்—

அழுகை
எனக்குப் பிடிக்காத ஒன்று!

கு.முத்துக்குமார்

**உள்ளே**

முத்துக்குமாரின் இறுதி அறிக்கையும்
அவரின் சில கவிதைகளும்

# அண்ணா நூற்றாண்டுத் திருவிழாக்கள்

**புதியமாதவி,** மும்பை

திருவிழாவில் தொலைந்துபோன
சிறுமியைப்போல
அறிஞர் அண்ணாவின்
நூற்றாண்டுவிழாக்
கொண்டாட்டங்களில்
தனித்து நின்று
தவித்துக்கொண்டிருக்கிறேன்.

தேடித்தேடிப் பார்க்கிறேன்
தொலைந்துபோன உறவுகளையல்ல
தொலைக்கப்பட்ட அண்ணாவை.

அண்ணாவின் எழுத்தும் பேச்சும்
எனக்கொன்றும்
விமர்சனத்திற்கு அப்பாற்பட்ட
வேதவாக்கல்ல.

வேதங்களையும் வேதவாக்குகளையும்
விமர்சிக்கும் வித்தையை
நான் கற்றுக்கொண்டதென்னவோ
அண்ணாவின் கம்பரசம் வழியாகத்தான்.

நான்
அண்ணா உருவாக்கிய
அமைச்சர்களின் வாரிசல்ல.
அண்ணாவை நம்பிய
தொண்டனின் கடைசி வாரிசு.
அதனால்தான்
இன்னும் என்னிடம்
ஒட்டிக்கொண்டிருக்கிறது
அண்ணாவின் கண்ணியமும் நாணயமும்.
என் கேள்விக்கணைகள்
உங்கள் கருத்துகளுடன்
மோதும்போதெல்லாம்
ஆத்திரப்படும் உங்களைக் கண்டு
பலவீனமாகிப்போன
உங்கள் பாசறையைக் கண்டு
வருத்தப்படுகிறேன்.

காங்கிரசு போட்ட
தடையுத்தரவு
அண்ணாவின் ஆரியமாயைக்கு
மட்டும்தான்.
தம்பிகளின்
அரசுக்கட்டில் விதித்த
தடையுத்தரவு!?

தம்பியுடையான்
படைக்கஞ்சான்.
அண்ணாவுக்குத்தான்
எத்தனையெத்தனை
தம்பியர்!
அவர் அத்துணைப் பேருக்கும்
பட்டா போட்டு
பாடிக்கொண்டிருக்கின்றன
தொலைக்காட்சிப் பெட்டிகள்.
24 மணி நேரமும்
அண்ணாவின்
நூற்றாண்டுத் திருவிழாக் கூட்டத்தில்
கவியரங்கம்
கருத்தரங்கம்
அமைச்சர்கள்
வருங்கால அமைச்சர்கள்
எல்லார் முகங்களும்
வருகின்றன
போகின்றன.
வாசிக்கிறார்கள்
பேசுகிறார்கள்
கை தட்டுகிறார்கள்.

காத்திருக்கிறேன்
எப்போதாவது
காட்டமாட்டார்களா
அண்ணா பேசுவதை?
இப்போதாவது
பார்க்க முடியுமா
அண்ணாவின் வேலைக்காரியை?
ஓரிரவு மட்டுமல்ல
அண்ணா நூற்றாண்டு விழாவின்
ஒவ்வொரு இரவிலும்
கண்ணிமைகள் மூடாமல் காத்திருக்கிறேன்...
நீங்கள் இலவசமாகத் தந்த
தொலைக்காட்சிப் பெட்டியின் முன்னால்.

●



## கண்ணீர்த் துளிகளின் கடைசிப் பக்கம்

இயல்தமிழ்த் தந்தை— தமிழர்
இதயத்து வேந்தன்
காஞ்சியின் கவிதை— தமிழர்
காத்திருந்த கனவு
நாடகச் சோலை— கூத்து
நடனமிடும் மின்னல்
அரசியல் வானம்— அவனுள்
ஆயிரம் சூரியன்

காவியம் படைக்காத
கம்பரசம்
வேலைக்காரி பார்க்காத
பணத்தோட்டம்
தீ பரவட்டும்
சந்திரோதயம்
ஆரிய மாயை
பிணி தீர்த்த
திராவிட மருந்து
பகுத்தறிவு விருந்து

இந்தியக் கோட்டையில்— இவன்
எழுந்து நின்றபோது
இமயம் இவனை
அண்ணாந்து பார்த்து
அதிசயித்துப் போனது
இவன்— உலகின்
எட்டாவது அதிசயம்

இந்து சாம்ராஜ்யம்— இவன்
எழுத்து முனையில்
பொடிப்பொடியானது என்றாலும்
திருமூலருக்கு
இவன்தான் தேர்ப்பாகன்
"ஒன்றே குலம் ஒருவனே தேவன்"
திருமந்திரம்
இவன் திருநா தொட்ட பின்னே
பொதுமந்திரமாகி
புதுமந்திரமானது
ஒரு புதிய சகாப்தம்

பூமி உருண்டையைப்
புரட்டிப்போடும்
வானம்பாடிக் கவிஞருக்கெல்லாம்
இவனே வாத்தியார்

'தம்பி' என்ற
ஒற்றைச் சொல்லால்— தமிழ்
உலகையே அளந்த
'வாமன' அவதாரம்
அடடா... மன்னியுங்கள்
இவன் அவதாரங்களை வென்ற
அதிசயப் பிறவி

ஈரோட்டுப் போர்முரசே— திராவிடர்
ஈடில்லாத் தமிழ்முரசே
நினைவிருக்கிறதா அண்ணா
அந்தக் கண்ணீர்த்துளிகளின்
கடைசிப்பக்கம்
'தலைவர் அவரே' என்றாய்
'பகை வெல்லும்
துப்பாக்கி ஒன்றே' என்றாய்
அண்ணா
ஈம் உலராத
கண்ணீர்த்துளிகளை
உன் இமைகளுக்குள்
புதைத்துவிடு.

இன்று
ஊரெல்லாம் தலைவர்கள்
ஒவ்வொரு நாளும்
புதிதுபுதிதாகப் பிறக்கும்
கழகக் கொடிகள்
இதயக் கனிகள்
அத்தனையும் உன்பெயரால்.

நித்தமும் தொடரும்
அறிக்கை யுத்தங்கள்
தொலைக்காட்சி சாம்ராஜ்ய
அடாவடிச் சண்டைகள்
வாரிசுகளின் பனிப்போர்
அண்ணா
காலம் எழுதாமல் விட்ட
கண்ணீர்த் துளிகளின்
கடைசிப் பக்கம்

அண்ணா...
'எதையும் தாங்கும் இதயம் உன்னிதயம்'
என்று
எவர் சொன்னாலும்
நம்ப வேண்டாம்
அந்தக் கண்ணீர்த்துளிகளின்
சாட்சியாய்
சத்தியமாய்ச் சொல்கிறேன்
'இதையும் தாங்க உன்னால் முடியாது
அண்ணா'

புறநானூறு படைத்த
சங்கத் தமிழனை
எத்தனை கடிதங்களில்
எழுதிஎழுதி வளர்த்தாய்
அத்தனையும் மொத்தமாக
கடல் தாண்டித் தெரிகிறது
தெற்கே 'தமிழன் படை'
எட்டிப் பார்
கடமை, கண்ணியம், கட்டுப்பாடு
அண்ணா
உன் கண்ணீர்த்துளிகளால்
மீண்டும் எழுது

'தம்பி உடையான் படைக்கு அஞ்சான்'
'வெற்றி நமதே' என்று

●



கு. முத்துக்குமார்
19.11.1982 – 29.01.2009

**ஆசிரியர் குறிப்பு:** *முத்துக்குமார் தன்னை மாய்த்துக் கொண்டான். இப்படிச் செய்திருக்க வேண்டாம். வேறெப்படித்தான் செய்திருக்க முடியும் அவன் ஆள்மையில்? தெரியவில்லை. அவனை நாங்கள் அறிவோம். வைராக்கியமான இளைஞன். சிறப்பாக வெளிப்பட வேண்டிய கவிஞன். தன் மரணத்தை இத்தனை மகத்தானதாக்கிக் கொள்ளக்கூடியவன் என்பதைத்தான் நாங்கள் அறிந்திருக்கவில்லை. அந்தப் பிள்ளைக்கு எங்கள் கண்மல்கும் அஞ்சலி. அவன் இந்த உலகத்துக்கு விட்டுச்சென்ற கடைசி அறிக்கையை இங்கு வெளியிடுகிறோம், அவனது சில கவிதைகளையும் சேர்த்து.*

# விதியே விதியே என்செய நினைத்திட்டாய் என்-தமிழ் சாதியை...

அன்பார்ந்த உழைக்கும் தமிழ்மக்களே...

வணக்கம். வேலைக்குப் போகும் அவசரத்திலிருந்து உங்களை இப்படி சந்திக்க நேர்ந்ததற்கு நான் வருந்துகிறேன். ஆனால் வேறு வழியில்லை. என் பெயர் முத்துக்குமார். பத்திரிகையாளர் மற்றும் உதவி இயக்குநர். தற்சமயம் சென்னையிலுள்ள பத்திரிகை ஒன்றில் வேலை செய்து வருகிறேன். உங்களைப் போல்தான் நானும். தினமும் செய்தித்தாளையும், இணையத்தையும் பார்த்துப் பார்த்து, தினம் தினம் கொல்லப்பட்டு வரும் எம் சக தமிழர்களைக் கண்டு சாப்பிட முடியாமல், தூங்கமுடியாமல், யோசிக்க முடியாமல் தவிக்கும் எத்தனையோ பேரில் ஒரு சாமானியன். வந்தாரை வாழ வைக்கும் செந்தமிழ் நாட்டில் சேட்டு என்றும், சேட்டனென்றும் வந்தவனெல்லாம் வாழ, சொந்த ரத்தம் ஈழத்தில் சாகிறது. அதைத் தடுத்து நிறுத்துங்கள் என்று குரல் கொடுத்தால், ஆம் என்றோ இல்லை என்றோ எந்த பதிலும் சொல்லாமல் கள்ள மௌனம் சாதிக்கிறது இந்திய ஏகாதிபத்தியம். இந்தியாவின் போர் ஞாயமானதென்றால் அதை வெளிப் படையாகச் செய்ய வேண்டியதுதானே. ஏன் திருட்டுத் தனமாக செய்யவேண்டும்?

ராஜீவ்காந்தியைக் கொன்றார்கள் என்ற சொத்தை வாதத்தை வைத்துக்கொண்டு, சில தனிநபர்களின் பலிவாங்கல் சுயநல நோக்கங்களுக்காக ஒரு பெரும் மக்கள் சமூகத்தையே கொன்று குவிக்கத் துடிக்கிறது இந்திய அதிகார வர்க்கம். ராஜீவ்காந்தி கொலையில் விடுதலைப்புலிகள் மட்டும் குற்றம் சாட்டப்பட வில்லை. தமிழக மக்களையும் குற்றவாளிகள் என்று குற்றம் சாட்டியது ஜெயின் கமிசன் அறிக்கை. அப்படியானால் நீங்களும் ராஜீவ்காந்தியைக் கொலைசெய்த கொலைகாரர்கள் தானா?

ஜாலியன் வாலாபாக்கில் வெள்ளையன் கொன்றான் என்றார்களே, இவர்கள் முல்லைத்தீவிலும் வன்னியிலும் செய்வதென்ன? அங்கு கொல்லப்படும் குழந்தைகளைப் பாருங்கள். உங்கள் குழந்தைகள் நினைவு வரவில்லையா? கற்பழிக்கப்படும் பெண்களைப் பாருங்கள். உங்களுக்கு அது போன்ற வயதில் ஒரு தங்கையோ, அக்காவோ இல்லையா? ராஜீவ் கொல்லப்பட்டபோது காங்கிரசின் முக்கிய தலைவர்கள் ஏன் அவருடன் இல்லை, கூட்டணிக் கட்சித் தலைவியான ஜெயலலிதா, தமிழ்நாட்டில் ராஜீவ் கலந்துகொள்ளும் ஆகப் பெரிய பொதுக்கூட்டத்தில் ஏன் பங்கெடுக்கப்போகவில்லை என்பதுபோன்ற கேள்விகள் கேட்கப்படாமலும் இவர்களால் பதில் சொல்லப்படாமலும் கிடக்கின்றன. மக்களே யோசியுங்கள். இவர்கள்தான் உங்கள் தலைவர்களா? பணம், அடியாள் பலம் ஆகியவற்றைக் கொண்டு மிரட்டல் அரசியல் நடத்தி வரும் இவர்கள் நாளை நம்மீதே பாயமாட்டார்கள் என்பதற்கு என்ன நிச்சயம்? அப்படி பாய்ந்தால் யார் நம் பக்கம் இருக்கிறார்கள்?

கலைஞரா? நாடாளுமன்ற உறுப்பினர்கள் ராஜினாமா செய்வார்கள் என்று அப்பொழுதும் அவர் அறிவிப்பார். பிறகு, மத்திய அரசைப் புரிந்துகொள்வார்(?) பிறகு மறுபடி சரியான முடிவை எடுக்கவேண்டி சட்ட மன்றத்தில் தீர்மானம் நிறைவேற்றுவார் – இந்த மாதம், இந்த வாரம், இதுவரைக்கும் என்ன எவனும் தொட்டதில்ல என்கிற வின்னர் பட வடிவேல் காமெடியைப்போல, காகிதம் எதையும் சாதிக்காது மக்களே! இப்பொழுது, உலகத் தமிழினத்தலைவர் என்ற பட்டப்பெயரைச் சூட்டிக்கொள்ளவும், தமிழ்நாட்டில் இருக்கும் பணத்தையெல்லாம் தன் குடும்பத்திற்கே உரித்தாக்கவும் விரும்புகிற தேர்தல்காலத் தமிழர் கலைஞர் மக்களின் கோபத்தை எதிர்கொள்ள பயந்து மருத்துவ மனையில் போய் ஒளிந்துகொண்டுள்ளார். தனது மந்திரிகளுக்கு அவசியப்பட்ட துறைகளுக்காக சண்டப் பிரசண்டம் செய்து சதிராடிய இந்த சூரப்புலி உண்மையில் தமிழுக்காகவோ, தமிழருக்காகவோ செய்ததென்ன? ஒருமுறை அவரே சொன்னார், தேனெடுத்தவன் புறங்கையை நக்காமலா இருப்பானென்று.இவருடைய பம்மலாட்டத்தையெல்லாம் பார்த்தால் ரொம்பவே நக்கியிருப்பார் போலிருக்கிறதே...

பட்டினிப் போராட்டத்தின் மூலம் களம் இறங்கியிருக்கும் சட்டக்கல்லூரி மாணவர்களே, உங்கள் போராட்டம் வெற்றிபெற சகதமிழனாக நின்று வாழ்த்துகிறேன். உங்களோடு களம் இறங்க முடியாமைக்கு வருந்துகிறேன். ஈழத்தமிழர் பிரச்சினை என்றில்லை, காவிரியில் தண்ணீர் விடச்சொல்லும் போராட்டமென்றாலும் சரி, தமிழ்நாட்டிற்காதரவான போராட்டம் எதுவாக இருந்தாலும் சரி, முதலில் களம் கண்பவர்கள் நீங்களும், வழக்கறிஞர்களும்தான். இந்த முறையும் நான்கு மாதங்களுக்கு முன்பாகவே களத்தில் இறங்கியவர்கள் இந்த இரண்டு தரப்பும்தான். உங்களுடைய இந்த உணர்வை மழுங்கடிக்கவே திட்டமிட்டு இந்திய உளவுத்துறை ஜாதிய உணர்வைத் தூண்டிவிட்டு, அம்பேத்கர் சட்டக்கல்லூரி அனர்த்தத்திற்கு வழிவகுத்திருக்கலாம் என்பது என் சந்தேகம். உலகம் முழுக்க மக்களுக்கான புரட்சிகரப்போராட்டங்களில் முன்கையெடுப்பவர்களாக இருந்தது மாணவர்கள் என்கிற ஜாதிதான். அதேபோல், தமிழ்நாட்டிலும் உங்களுக்கு முந்திய தலைமுறை யொன்று இதுபோன்ற ஒரு சூழலில், இதுபோல் குடியரசு தினத்திற்கு முன்பு களம் கண்டுதான் காங்கிரஸ் உள்ளிட்ட தேசியக்கட்சிகளைத் தமிழ் மண்ணிலிருந்து விரட்டியடித்தது.

ஆக, வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த ஒரு தருணம் உங்கள் கைகளுக்கு மறுபடியும் வந்து சேர்ந்திருக்கிறது. பொதுவாக உலக சரித்திரத்தில் இப்படியெல்லாம் நடப்பதில்லை. கடந்தமுறை நடந்ததுபோல், உங்கள் போராட்டத்தின் பலன்களை சுயநலமிகள் திருடிக்கொள்ள விட்டுவிடாதீர்கள். போராட்டத்தின் பலன்களை அபகரித்து ஆட்சிக்கு வந்த தி.மு.க. முதலில் செய்த விசயம் மாணவர்கள் அரசியல் ஈடுபாடு கொள்ளக்கூடாது என சட்டம் போட்டதுதான். ஆட்சிக்கு வந்த அது, தமிழின உணர்வுகளை மழுங்கடித்து, ஒட்டுமொத்த தமிழினத்தையும் மகஜர் கொடுக்கும் ஜாதியாக மாற்றியது. அந்த மரபை அடித்து உடையுங்கள். மனு கொடுக்கச் சொல்பவன் எவனாக இருந்தாலும், அவனை நம்பாதீர்கள். நமக்குள்ளிருக்கும் ஜாதி, மதம் போன்ற வேறுபாடுகளை எரித்துக்கொள்ள இதுதான் தருணம். உண்ணாவிரதத்தையெல்லாம் தூக்கியெறிந்துவிட்டு களம் காணுங்கள். உண்மையில், இலங்கை யில் இந்திய ராணுவ நடவடிக்கை என்பது தமிழர்களுக்கெதிரானது மட்டுமல்ல... ஒட்டுமொத்த இந்தியர்களுக்குமே எதிரானது. சிங்களச்சிப்பாய்களிடம் கற்றுக்கொள்கிற பாலியல் நுணுக்கங் களைத்தானே அவர்கள் அசாமில் அப்பாவிப் பெண்களிடம் பரிசோதித்துப் பார்த்தார்கள்! விடுதலைப்புலிகளை ஒடுக்குவதற்கான சிங்கள வன்முறை நுணுக்கங்களைக் கற்றுக்கொண்டு வடகிழக்கு மாநிலப் போராளிகளிடம் பயன்படுத்திக் கூர் பார்த்தார்கள்!! போதாதற்கு, ஹைட்டியில் சமாதானப் பணிக்காக அனுப்பப்பட்ட ஐ.நா.வின் ராணுவத்திலிருந்து இந்திய மற்றும் இலங்கை ராணுவம் அவரவர்களுடைய பாலியல் நடவடிக்கைகளுக்காக அடித்துத் துரத்தப்பட்டிருப்பதிலிருந்து என்ன தெரிகிறது – இந்தக் கூட்டணி கொள்கைக் கூட்டணியல்ல, பாலியல் கூட்டணி என்றல்லவா! ஆக, இந்திய–இலங்கை இராணுவக் கூட்டு என்பது இந்தியர்களின் அடிப்படை மனித உரிமைகளுக்கும்கூட எதிரானதாக இருப்பதால், அகில இந்திய அளவில் மாணவர்கள், ஜனநாயக அமைப்புகளையும் உங்கள் பின்னால் திரட்டுங்கள்.

இதையெல்லாம் மக்களே செய்ய முடியும். ஆனால், அவர்கள் சரியான தலைமை இல்லாமல் இருக்கிறார்கள். உங்கள் மத்தியிலிருந்து தலைவர்களை உருவாக்குங்கள். உங்கள் போராட்டத்தை சட்டக்கல்லூரி மாயவர்கள் என்ற இடத்திலிருந்து அனைத்து மாணவர்கள் என்று மாற்றுங்கள். உங்களிடமிருக்கும் வேகமும், மக்களிடமிருக்கும் கோபமும் இணைந்து தமிழக வரலாற்றை அடியோடு மாற்றட்டும். ஆள்பலம், பணபலம், அதிகார வெறியை உடைத்து எறியுங்கள். உங்களால் மட்டுமே இது முடியும். 'நாங்கள் தமிழ் மாணவர்கள், தமிழ்நாட்டின் உயிரானவர்கள், இங்கு தமிழினம் அமைதிகொண்டிருந்தால் ஏடுகள் தூக்கி படிப்போம். எங்கள் தமிழர்க்கின்னல் விளைந்தால் எரிமலையாகி வெடிப்போம்' என்ற காசி அனந்தனின் பாடலை ஓர் அறிவாயுதமாக ஏந்துங்கள். என் உடலைக் காவல்துறை அடக்கம் செய்துவிட முயலும். விடாதீர்கள் என் பிணத்தைக் கைப்பற்றி, அதைப் புதைக்காமல் ஒரு துருப்புச் சீட்டாக வைத்திருந்து போராட்டத்தைக் கூர்மைப் படுத்துங்கள். எனக்கு சிகிச்சையோ, போஸ்ட்மார்டமோ செய்யப் போகும் தமிழ்நாடு மருத்துவக் கல்லூரி மாணவர்களே – உங்கள் கைகளால் அறுபட நான் புண்ணியம் செய்திருக்க வேண்டும். காரணம், அகில இந்திய அளவில், மருத்துவக் கல்வியில் இட ஒதுக்கீட்டுக்கு எதிராக உயர்சாதி மாணவர்கள் போராடிக் கொண்டிருக்க, தன்னந்தனியாக நின்று, மருத்துவக் கல்வியில் இடஒதுக்கீட்டுக்கு ஆதரவாகப் போராடியவர்களல்லவா நீங்கள்! எனக்கு செய்வதெல்லாம் இருக்கட்டும். நம் சகோதர்களான ஈழத்தமிழர்களுக்கு உங்கள் பங்குக்கு என்ன செய்யப் போகிறீர்கள்?

தமிழீழம் என்பது தமிழீழத்தின் தேவை மட்டுமே அல்ல. அது தமிழகத்தின் தேவையும் கூட. காரணம், இராமேஸ்வரம் மீனவர்கள். உலகில் ஆடு, மாடுகளைப் பாதுகாப்பதற்குக் கூட சட்டமும், அமைப்புகளும் இருக்கின்றன. இராமேஸ்வரம் தமிழனும், ஈழத்தமிழனும் மாட்டைவிட, ஆட்டைவிடக் கேவலமானவர்களா? எல்லை தாண்டி போகும் மீனவர்கள், புலிகள் என்ற சந்தேகத்தின் பேரில் தாக்கப்பட்டு வருவதாக இந்திய மீடியா திட்டமிட்டு பிரச்சாரம் செய்து வருகிறது. இவர்களெல்லாம் செய்தித்தாளே படிப்பதில் லையா? சென்னையின் கடற்கரைகளில் அடிக்கடி தைவான் நாட்டைச் சேர்ந்த மீனவர்கள் வழிதெரியாமல் வந்தவர்கள் என்று கைது செய்யப்படுகிறார்கள். பல ஆயிரக்கணக்கான கிலோமீட்டர்கள் தூரத்திலிருக்கும் தைவான் மீனவன் வழிதவற முடியுமென்றால், வெறும் பன்னிரெண்டு மைல் தூரத்திற்குள் இராமேஸ்வரம் தமிழன் வழிதவறுவது நம்புவது மாதிரியில்லையாமா?

தமிழ்நாட்டில் வாழ்ந்து வரும் வெளிமாநிலங்களைச் சேர்ந்த சகோதரர்களே...

உங்கள் சொந்த மாநிலத்தில் கூட இல்லாத நிம்மதியோடும், பாதுகாப்போடும் வாழக்கூடிய மாநிலம் தமிழ்நாடுதான் என்பது உங்களுக்கு அனுபவத்தால் தெரிந்திருக்கும். நாங்கள் இன்று பெரும்ட இக்கட்டை எதிர்நோக்கியிருக்கிறோம். ஈழத்திலிருக்கும் எங்கள் சகோதரர்கள் இந்தியர் என்னும் நம் பெயரைப் பயன்படுத்தி தான் நம் அரசால் கொலை செய்யப்படுகிறார்கள். இந்தப் போராட்டத்தில் நாங்கள் தனித்துவிடப்படுவதை இந்திய அரசு விரும்புகிறது. அப்படி ஆகக்கூடாதென நாங்கள் விரும்புகிறோம். ஆகவே, போராடிக்கொண்டிருக்கும் எங்கள் சகோதரர்களுக்கு உங்கள் ஆதரவும் உள்ளதென மத்திய அரசுக்குத் தெரியப்படுத் துங்கள். அரசுகளில் அங்கம் வகிக்கக்கூடிய உங்கள் தேசிய இனங்களைச் சேர்ந்தவர்களை வற்புறுத்துங்கள். வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கப் போகும் உங்களுடைய அந்த நடவடிக்கை, எம் கரத்தை பலப்படுத்துவதோடு, எதிர்காலத்தில், ஒரு நவநிர்மாண் சேனாவோ, ஸ்ரீராம் சேனாவோ தமிழ்நாட்டில் உருவாகவிருக்கும் ஆபத்தைத் தவிர்க்கும் என்பது என் கருத்து.

தமிழ்நாடு காவல்துறையிலிருக்கும் இளைஞர்களே...

உங்கள் மீது எனக்கு மதிப்பு கொஞ்சம் நஞ்சமல்ல. காரணம், தமிழுக்காக மற்றவர்கள் என்ன செய்தார்களோ இல்லையோ, அலுவலர்களை ஐயா என அழைப்பது போன்ற நடைமுறை ரீதியில் தமிழை வாழ வைத்துக்கொண்டிருப்பவர்கள் நீங்கள்தான். மக்களுக்காகப் பாடுபட வேண்டும். சமூக விரோதிகளை ஒழித்துக்கட்ட வேண்டும் என்பதுபோன்ற உன்னத நோக்கங் களுக்காகத்தான் நீங்கள் காவல்துறையில் இணைந்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். ஆனால், அதை செய்ய விடுகிறதா ஆளும் வர்க்கம்? உங்களை சிறுசிறு தவறுகள் செய்ய விடுவதன் மூலம் தன்னுடைய பெருந் தவறுகளை மறைத்துக்கொள்ளும் அதிகார வர்க்கம், உங்களை, எந்த மக்களுக்காகப் பாடுபட நீங்கள் விரும்பினீர்களோ, எந்த மக்களுக்காக உயிரையும் கொடுக்கலாம் என்று தீர்மானித்தீர்களோ, அந்த மக்களுக்கெதிராகவே, பயிற்றுவிக்கப்பட்ட அடியாள்களாக மாற்றுகிறது. டெல்லி திகார் ஜெயிலைப் பாதுகாப்பது தமிழக போலிஸ்தான். இந்தியாவில் பழமையான காவல்துறையான தமிழக காவல்துறை சிறப்பாக செயல்பட்டு வரும் காவல்துறைகளில் ஒன்று. ஆனால், அந்த மதிப்பை உங்களுக்குக் கொடுக்கிறதா இந்திய அரசாங்கம்? மத்திய அமைச்சர் ப. சிதம்பரம் தமிழகம் வந்து திரும்பிப்போகையில், சென்னை விமான நிலையத்தில், அவருக்கான பாதுகாப்பை வழங்க அனுமதிக்க மறுத்திருக்கிறார்கள் மத்திய காவல் அதிகாரிகள். ஏனென்று கேட்டதற்கு, ராஜீவ் காந்தியை நீங்கள் பாதுகாத்த லட்சணம்தான் தெரியுமே என்று கிண்டல் செய்திருக் கிறார்கள். ராஜீவ்காந்தியைத் தமிழகக் காவல்துறையால் காப்பாற்ற

முடியவில்லை என்பது எவ்வளவு உண்மையோ, அதே அளவுக்கு உண்மை, ராஜீவோடு இறந்தவர்கள் பலர் அப்பாவி போலீஸ்காரர்கள் என்பது. உங்கள் அர்ப்பணிப்புணர்வு கேள்விக்கப்பாற்பட்டது. ஆனால் மேற்படி வெண்ணைய் வெட்டி வீரர்கள் – அதுதான், இந்திய உளவுத்துறை – ராஜீவின் உயிருக்கு ஆபத்து இருக்கிறது என்ற தகவலை அறிந்தபோதும் மெத்தனமாக இருந்தது என்பது பின்னர் அம்பலமானதல்லவா – இதுவரை காலமும் நீங்கள் அப்பாவி மக்களுக்கெதிராக இருந்தாலும் தமிழகத்தின் பெருமைகளில் ஒன்றாகத்தான் இருக்கிறீர்கள். வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இந்த தருணத்தில், நீங்கள் மக்கள் பக்கம் இருந்தால் மட்டுமே மக்களிடம் இழந்திருக்கிற பெருமையை மீட்டெடுக்க முடியும். ஒருமுறை சக தமிழர்களுக்காக அர்ப்பணித்துப் பாருங்கள். மக்கள் உங்களை தங்கத்தட்டில் வைத்து தாங்குவார்கள். தமிழனின் நன்றி உணர்ச்சி அளவிடற்க ரியது. தன்னுடைய சொந்தக்காசை வைத்து அணை கட்டிக்கொடுத்தான் என்பதற்காகவே அவனுக்குக் கோயில்கட்டி, தன் பிள்ளைகளுக்கு அவன் பெயர் வைத்துக் கொண்டாடிக் கொண்டிருக்கிறான் முல்லையாற்றின் மதுரை மாவட்டத்தமிழன். நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம், கொந்தளிக்கப்போகும் தமிழகத்தில், மத்திய அரசு அதிகாரிகளுக்கு ஒத்துழைக்க மறுப்பதும், ரா. சி.பி.ஐ. போன்ற அமைப்புகளைச் சேர்ந்தவர்களை உள்ளூர் மக்களுக்கு அடையாளம் காட்டுவதும்தான். இதை மட்டுமாவது செய்யுங்கள். மற்றதை மக்கள் பார்த்துக்கொள்வார்கள்.

களத்தில் நிற்கும் தமிழீழ மக்களே, விடுதலைப்புலிகளே...

அனைத்துக் கண்களும் இப்போது முல்லைத்தீவை நோக்கி. தாய்த்தமிழகம் உணர்வுபூர்வமாக உங்கள் பக்கம்தான் நிற்கிறது. வேறு ஏதாவது செய்ய வேண்டும் எனவும் விரும்புகிறது. ஆனால் என்ன செய்வது – உங்களுக்கு அமைந்தது போன்ற ஓர் உன்னதத் தலைவன் எங்களுக்கில்லையே... ஆனால், நம்பிக்கையை மட்டும் கைவிடாதீர்கள். இதுபோன்ற கையறுகாலங்கள்தான், கைவிடப்பட்ட நிலைமைக் காலங்கள்தான் சிறந்த மக்கள் தலைவர்களைக் கண்டுபிடித்திருக்கின்றன. தமிழகத்திலிருந்தும் அப்படி ஒருவர் இந்தக் காலத்தில் உருவாகலாம். அதுவரை, புலிகளின் கரங்களை பலப்படுத்துங்கள். 1965ல் நடந்த இந்தி எதிர்ப்புப் போரை சில சுயநலமிகளின் கையில் ஒப்படைத்ததால்தான் தமிழக வரலாறு கற்காலத்திற்கு இழுபட்டுள்ளது. அந்தத் தவறை நீங்கள் செய்துவிடாதீர்கள்.

அன்பிற்குரிய சர்வதேச சமூகமே, நம்பிக்கைக்குரிய ஒபாமாவே,

உங்கள் மீது, எங்களுக்கு இன்னும் நம்பிக்கை இருக்கிறது. ஆனால், இறையாண்மை கொண்ட ஒரு குடியரசு தன் குடிமக்களை இனஒதுக்கல் மூலமாகக் கொடுமைப்படுத்தாது என்பதற்கு எந்த உத்தரவாதமும் கிடையாது. வசதிக்காக அமெரிக்காவின் கடந்த காலத்தையே எடுத்துக்காட்டாக சொல்லலாம். உலகப் புகழ்பெற்ற குத்துச்சண்டை மாவீரன் முகமதலி சொன்னானே, என் சருமத்தி லிருக்கும் கொஞ்சம் வெண்மையும் கற்பழிப்பின் மூலமாகவே வந்திருக்குமென்று... நீங்கள் அமைதியாக இருக்கும்வரை இந்தியா வாயே திறக்காது. ஒட்டுமொத்த தமிழர்களும் அழிக்கப்பட்ட பிறகு வேண்டுமானால் அது நடக்கும். அதுவரை, இந்தியாவின் வாயைப் பார்த்துக்கொண்டிருக்கப் போகிறீர்களா? வன்னியில், விடுதலைப்புலிகளுக்கு எதிரான போர்தான் நடக்கிறது என்கிறார்கள். புலிகள் மக்களைக் கேடயமாகப் பயன்படுத் துகிறார்கள் என்கிறார்கள். அப்படியானால் அரசு சொன்ன பகுதிக்கு வந்த மக்களை ஏன் கொலை செய்தார்கள்? இது ஒன்று போதுமே, தமிழ்மக்கள் விடுதலைப்புலிகளைச் சார்ந்து நின்றாலும் சரி, இலங்கை அரசைச் சார்ந்து நின்றாலும் சரி, தமிழர்கள் என்ற காரணத்திற்காகவே அவர்கள் கொல்லப்படுவார்கள் என்பதற்கு. இது இனப்படுகொலை இல்லையா? இந்தியா, பாகிஸ்தான், சீனா ஆயுதம் கொடுத்தும், ஜப்பான் பணம் கொடுத்தும், கூடுதலாக இந்தியா நாட்டாமை செய்தும் தமிழர்களைக் கொல்கின்றனரென்றால், நீங்கள் உங்கள் மௌனத்தின் மூலமாகவும், பாராமுகத்தின் மூலமாகவும் அதே கொலையைத்தான் செய்துகொண்டிருக்கிறீர்கள் என்பதை ஏன் உணரவில்லை? ஆயுதம் தாங்கி போராடுவதால் மட்டுமே யாரும் தீவிரவாதியாகிவிட மாட்டார்கள். அறத்திற்கே அன்பு சார்பென்ப அறியார், மறத்திற்கும் அஃதே துணை என்று பாடியுள்ளான் எங்கள் திருவள்ளுவர்.

புலிகள் ஆயுதங்களைக் கீழே போட வேண்டும் என்கிறார் ஜெயலலிதா – என்னவோ பிரச்சினையே புலிகள் ஆயுதம் எடுத்ததால்தான் வந்தது என்பதைப் போல... உண்மையில் புலிகள் தமிழீழ இன அழிப்பிலிருந்து உருவாகி வந்தவர்களே தவிர, காரணகர்த்தாக்கள் அல்லர். (They are not the reason; just an outcome)

இந்திய அரசு இந்தப் பிரச்சினையில் ஈடுபட்டிருப்பது வெளிப்படையாகாத வரை, இலங்கைப் பிரச்சினை உள்நாட்டுப் பிரச்சினை. அதில் தலையிட முடியாது என்றது. பிறகு, சீனா, பாகிஸ்தான், அமெரிக்கா போன்ற நாடுகள் இலங்கையில் ஆதிக்கம் பெறுவதைத் தடுப்பதற்காக செய்வதாகச் சொன்னது. நாடாளு மன்றத்தில் தாக்குதல் நடத்தியது, மும்பை தொடர்வெடிகுண்டுகள், பிறகு அண்மையில் நடந்த தாக்குதல் எனப் பலவாறாக இந்திய மக்களைக் கொன்று குவித்த பாகிஸ்கானோடு இணைந்து கொண்டு தமிழர்களைக் கொன்று குவிக்கிறது. அப்படியானால், பாகிஸ்தானின் இந்தியா மீதான் பயங்கரவாதமென்பது இந்தியா – பாகிஸ்தான் இருதரப்பு அதிகார வர்க்கங்களும் தங்கள் மக்களைச் சுரண்ட பரஸ்பர புரிதலுடன் உருவாக்கிக் கொண்ட ஒன்று என்ற எம் சந்தேகம் ஒருபக்கம் இருக்க, இப்போது விடுதலைப்புலிகள் தீவிரவாதிகள், அதனால்தான் சண்டை என்கிறது. ராஜீவ் காந்தியைக் கொன்றார்கள் என்கிறது. ராஜீவ் காந்தி ஒரு கவுன்சிலரோ, மாவட்டச் செயலாளரோ அல்ல. அவரை ஏற்கனவே ஒருமுறை கொலைசெய்யும் முயற்சி இலங்கையில் நடைபெற்றிருந்தபோதும் அந்தக் கொலைகாரன் விசாரிக்கப்பட வில்லை. பலனடைந்தவர்களையும், இலங்கை உளவுத்துறை, ராஜீவ்காந்தியைக் கொல்ல முயன்ற அந்த சிங்கள வீரன் ஆகியோரையும் குற்றம் சாட்டப்பட்டவர்களாக இணைத்துக்கொண்டு மறுபடியும் விசாரிக்கப்பட வேண்டும் என்பது என் கோரிக்கைகளில் ஒன்று. ராஜீவ் மீது புலிகளுக்கு வருத்தம் இருந்திருக்கலாமே தவிர, கோபம் இருந்திருக்க வாய்ப்பில்லை. காரணம், ராஜீவ் இந்திராவின் புதல்வர். இந்திரா, தமிழீழத்தின் சிறுதெய்வங்களில் எம்.ஜி.ஆருக்குப் பக்கத்திலிருப்பவர்.

இந்தியா சொல்லும் காரணங்கள் அடிக்கடி மாறுவதிலிருந்தே இந்தியா நியாயத்திற்குப் புறம்பாகத்தான் இந்தப் போரில் ஈடுபட்டிருப்பது அம்பலமாகி இருக்கிறது. இப்படிப்பட்ட ஒரு சூழலில் நீங்கள் ஏன் நேரடியாகத் தலையிடக்கூடாது? புலிகள் போர் நிறுத்தத்தைப் பயன்படுத்தி ஆயுதம் குவிக்கிறார்கள் என்றது இலங்கை. சந்திரிகாவோ, ரணிலோ, மகிந்தவோ கடந்த காலங்களில் ஒரு கடவுளாக அல்ல, மனிதர்களாகக்கூட நடந்துகொண்டதில்லை. இவர்கள் ஒரு நிர்ப்பந்தத்தின் பெயரில் போர் நிறுத்தத்திற்கு ஒப்புக்கொண்டு விட்டார்கள் என்பதால் மட்டுமே போராளிகள் ஆயுதங்களை ஒப்படைத்துவிட வேண்டும், புனரமைப்புப் பணிகளில் ஈடுபடக்கூடாது என்று எதிர்பார்ப்பது என்னவகை நியாயம்? தாங்கள் நேர்மையாக நடந்துகொள்வோம் என்ற நம்பிக்கையை உண்டாக்குவது மூலமாக மட்டுமே போராளிகளை ஆயுதத்தைக் கீழே வைக்கச்செய்ய முடியும். கடந்த கால அரசுகள் எவையும்

அப்படி செயல்படவில்லை. உதாரணம் ரணில்–கருணா. ஆனால், புலிகள் போர்நிறுத்தத்தைப் பயன்படுத்திக்கொண்டு செய்தது ஆயுதம் வாங்கியது மட்டுமல்ல, அது காலாகாலமாக நடப்பதுதானே – ஓர் அரசு நிர்வாகத்தையே உருவாக்கியிருக்கிறார்கள். சர்வதேசத்தின் கண்களில் இது தீவிரவாதமா? அப்பாவித் தமிழர்களைக் காப்பதற்காகத்தான் போரிடுவதாக பசப்புகிறது இந்தியா. ஆயுத தளவாடங்களும், உளவு விமானங்களும்தான் இலங்கை போகின்றனவே தவிர, இந்தியாவால் அனுப்பப்பட்ட ஒரு பாராசெட்டமால் மாத்திரையைக் காட்டச் சொல்லுங்கள் பார்க்கலாம். இந்த லட்சணத்தில், தமிழீழ மக்களுக்கான வசதிகளை இலங்கை அரசு செய்யுமாம்; அதற்கு இந்தியா உதவுமாம்... வேலிக்கு ஓணான் சாட்சி! இப்போது சர்வதேச செஞ்சிலுவைச் சங்கத்தின் ஆம்புலன்ஸ்களைத் தாக்கினார்களே, அவர்களும் விடுதலைப்புலிகளா? ப்ரான்சின் 17 மனித உரிமையாளர் களைக் கொலை செய்தார்களே, அவர்களும் விடுதலைப் புலிகளா? சீனாவின் டாங்கிகள் இந்தியாவின் உளவு விமானங்கள் பாகிஸ்தானின் ஆர்டிலரிகள் மட்டுமல்ல.. இப்போது எம்மக்களைக் கொலைசெய்து வருவது சர்வதேச சமூகத்தின் மௌனமும்தான் என்பதை எப்போது உணர்வீர்கள் – நியாயத்தின்பால் பெருவிருப்பு கொண்ட ஒரு மக்கள் சமூகம் பூமியிலிருந்து முற்றாகத் துடைத்தழிக்கப் பட்ட பிறகா? அபாரிஜின்கள், மாயா, இன்கா வரிசையில் நாங்கள் சேர்க்கப்படுவது உங்கள் நோக்கமென்றால், எங்கள் பழங்கதைகள் ஒன்றின்படி ஒவ்வொருநாளும் ஏதேனும் ஒரு வீட்டிலிருந்து ஒருவர் வந்து உங்கள் முன்னால் தற் கொலை செய்து கொள்கிறோமே... எங்கள் சகோதரிகளையும், குழந்தைகளையும் விட்டுவிடச் சொல்லுங்கள். தாங்க முடியவில்லை. அவர்களெல்லாம் மனமார சிரிப்பதை ஒருநாள் பார்ப்போம் என்ற நம்பிக்கையில்தான் நாங்கள் போராடிக் கொண்டிருப்பதே. ஒரு பேச்சுக்கு ஒத்துக் கொள்வதென்றாலும்கூட, விடுதலைப்புலிகள் தண்டிக்கப்பட வேண்டியவர்கள் என்றாலும் அப்படி ஒரு தண்டனையை வழங்கும் யோக்கியதை இந்தியாவுக்கோ, இலங்கைக்கோ கிடையாது.

## காலம் கடந்து வழங்கப்படும் நீதி அநீதியைவிடக் கொடுமையானது

### – எனது பதினாக்கு அம்சக் கோரிக்கைகள் –

1. இந்தியா உடனடியாக தமிழீழத்தின் பகுதிகளிலிருந்து தன் துருப்புகளைத் திரும்பப் பெற்றுக்கொள்வதோடு, மேற்கொண்டு செயற்கைக்கோள் உதவிகள், ராடார் போன்ற உதவிகளைச் செய்யக்கூடாதென்று சர்வதேச சமூகத்தால் கண்டிக்கப்பட வேண்டும். இலங்கையோடு இந்திய அரசு நடத்தும் முக்கியத்துவமற்ற பேச்சுப்பரிமாற்றங்கள்கூட சர்வதேச சமூகம் மூலமாகவே நடக்கவேண்டும். தமிழக மக்களிடமும், உலககெங்கும் பரந்து வாழும் தமிழீழத் தாரிடமும் இந்தியா பகிரங்க மன்னிப்பு கோர வேண்டும்.
2. ஐ.நா. பொதுச்செயலாளரான பான் கி மூன், தொடர்ந்து தன் தாயகமான சீனாவிற்கு ஆதரவான நிலைப்பாட்டிலிருந்து, ஒருதலைப்பட்சமாக செயல்பட்டு வருவதால், ஈழம் தொடர்பான முடிவெடுக்கும் அதிகாரம் அவருக்கு வழங்கப் படக்கூடாது.
3. இலங்கை அரசு எந்தெந்த நாடுகளிடமெல்லாம் கோரப்பட்டு புலிகள் மீது தடை விதிக்கப்பட்டதோ அந்தந்த நாடுகளில் புலிகள் மீதான தடை நீக்கப்பட்டு, தடை செய்யப்பட்ட அமைப்பின் உறுப்பினர் என்ற குற்றத்திற்காக சிறையிலிருக்கும் அதன் உறுப்பினர்கள் எதுவித நிபந்தனையு மற்று உடனடியாக விடுதலை செய்ய வேண்டும்.
4. புலிகள் உறுப்பனர்கள் மீதான பாஸ்போர்ட் தொடர்பான குற்றங்கள் மன்னிக்கப்பட்டு அவர்கள் விடுதலை செய்யப்பட வேண்டும்.
5. புலிகளோடு தொடர்புடையது என்னும் குற்றச்சாட்டின் பேரில் தடை செய்யப்பட்ட தொழில் நிறுவனங்களின் உரிமம் மீண்டும் அளிக்கப்படுவதோடு, தக்க நட்ட ஈடும் வழங்கப்பட வேண்டும்.
6. ராஜீவ்காந்தி கொலை வழக்கு இண்டர்போலால் விசாரிக்கப்பட்டு, உண்மையான குற்றவாளிகள் இனம் காணப்பட வேண்டும்.
7. பிரணாப் முகர்ஜி, கோத்தபாய ராஜபக்ஷே, சந்திரிகா, உதயணகார, கேகலிய ரம்புக்வெல, பசில்ராஜப்க்ஷ, மகிந்த, பொன்சேகா போன்றோர் நார்கோ அனிலிசிஸ் சோதனைக்குட்பட வேண்டும்.
8. அமைக்கப்படப்போகிற தமிழீழத்தை அங்கீகரிக்கிற உரிமையை மட்டுமே சர்வதேசம் மேற்கொள்ளலாமே தவிர, அது யாரின் தலைமையில் அமையவேண்டும் என்பதை தமிழீழ மக்கள்தான் முடிவுசெய்வார்கள்.
9. புலிகள் கை பலவீனமான நேரத்தில், மலையக மக்கள் மீது நடந்த வன்தாக்குதல், எதிர்காலத்தில் அப்பகுதிகளில் மீண்டும் ஒரு பாரிய இன அழிவு ஏற்படுத்தப்படுமோ என்ற அச்சத்தை ஏற்படுத்தியிருப்பதால் மழையக மக்கள் தமிழீழத்தோடு இணைய விரும்புகிறார்களா என்பதை வாக்கெடுப்பு மூலம் அறிந்து அதன்படி செயல்பட வேண்டும். இந்த விசயத்தில் மலையக மக்களின் முடிவே இறுதியானது.
10. சென்னையில் குடிபோதையில் அப்பாவித் தமிழர்கள் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்து, நீதிமன்றத்தால் தண்டிக்கப்பட்ட டக்ளஸ் தேவானந்தாவின் தண்டனைக்காலம் பூர்த்தியாகும் காலத்திற்கு முன் இலங்கைக்குத் தப்பிச்சென்று விட்டதால், அவர் கைது செய்யப்பட்டு, தமிழக போலிசார் வசம் ஒப்படைக்கப்பட வேண்டும்.
11. பத்திரிகையாளரான லசந்தவின் கொலைக்குக் காரணமான அனைவரும் தண்டிக்கப்பட வேண்டும்.
12. தமிழ்நாட்டில் தஞ்சம் புகுந்திருக்கும் சிங்கள பத்திரிகை யாளர்களுக்கு தகுந்த பாதுகாப்பு வழங்கப்பட வேண்டும்.
13. தமிழ்நாட்டிற்கு அகதிகளோடு அகதியாக வந்த சிங்களத் தம்பதியர் மீதான பாஸ்போர்ட் குற்றச்சாட்டு நீக்கப்பட்டு, அவர்களும் அகதிகளாக அங்கீகரிக்கப்பட வேண்டும்.
14. சுட்டுக் கொலை செய்யப்பட்ட தமிழக மீனவர்களின் குடும்பங்களுக்கான வாழ்வாதாரங்கள் உறுதி செய்யப்பட வேண்டும்.

என்றும் அன்புடன்,
அநீதிகளுக்கெதிரான உங்கள் சகோதரன்.

**கு. முத்துக்குமார்,**
67/191, திருவள்ளுவர் தெரு, மக்காரம் தோட்டம்,
கொளத்தூர், சென்னை – 99.

அருமைத் தமிழ் மக்களே, அநீதிகளுக்கெதிரான போராட்டத்தில் நம் சகோதரர்களும், பிள்ளைகளும் அறிவாயுதம் ஏந்தியிருக் கிறார்கள். நான் உயிராயுதம் ஏந்தியிருக்கிறேன். நீங்கள் நகலாயுதம் ஏந்துங்கள். ஆம். உங்கள் கையில் கிடைத்திருக்கும் இந்த துண்டறிக்கையை நகலெடுத்து, உங்கள் நண்பர்கள், உறவினர்கள், மாணவர்கள் வசம் கொடுத்து போராட்டத்திற்கான ஆதரவைப் பெருகப் பண்ணுங்கள். நன்றி.

# புதியவன் கு.முத்துக்குமரனின் நெஞ்சத்து ‘நெருப்புத் துணுக்கு’கள்

## சாதிப்பன

என்
கண்ணைத் தோண்டி,
அமிலம் ஊற்றி,
காலை வெட்டி,
கையை உடைத்து,
குடலைக் கிழித்து,
சதையை அறுத்து,
என்னைக்
கொன்றுவிட்டதாக
எகத்தாளம் செய்யும்
என் எதிரணியில் உள்ள
நண்பனே, நீ
அறிவாயா?
போராளியின் வாழ்வைவிட
மரணம்
அதிகமாகவே சாதிக்கும்!
●

## வாஸ்து

குளியலறையில் சமையல்–
கழிவறையில் சாப்பாடு–
பரணில் படுக்கை–
நடுவீட்டில் கிணறு–
கூரையில் வாசல்–

குழம்ப வேண்டாம்– இது
‘வாஸ்து’ சாஸ்திர நிபுணரின்
வீடாகவும் இருக்கலாம்.
●

## காகிதக் கூழ்

கல்லணை கட்ட
கரிகாலனுக்குப்
போரடிமைகளும்
கற்களும்
தேவைப்பட்டனவாம்.

நாம்தான்
முன்னறிவிட்டோமல்லவா
அறிவியலில்?

இனி
காவிரியில் இன்னொரு
அணை கட்ட
கற்கள் தேவையில்லை.

கொஞ்சம்
போதும்
காகிதக் கழிவுகளும்
காகிதக் கூழும்.

## மே

உழைப்பதற்குக்
கைகள் மட்டுமே
கொண்டிருந்த
தொழிலாள வர்க்கத்திற்கு
உரிமைகளை
உரக்கக் கேட்க
வாய் புதிதாக
வாய்த்த திருநாள்.
●

## என் தேசம்

மேகம் ஓர் ஓவியன்.
சாரலெனும்
தூரிகையெடுத்து
பூமியின் பூமேனியில்
பசுமையெனும்
வண்ணக்கவி தீட்டும்.

மழை கண்டு
தலை நீட்டும்
இளஞ்சிவப்பு அரும்புகள்.

தலைமீது
பனிசுமந்து
தரைமீது கண்பதித்து
வில்லென வளைந்து
பசும் புல்.

இந்த தேசம் இனியது
இதுவே என்றும் எனது.
●

## மனிதாபிமான உதவி

தீராத வழக்கொன்று
தினம்தினம் சண்டைக்கென்று
திரள்கிறான்
பக்கத்து வீட்டான்.

அவன்
பேச்சை மட்டுமல்ல
மூச்சையே நிறுத்திக்
கொலை செய்தாலும்கூட
நல்லதுதான்.

கழுத்தைச் சுற்றிக்
கயிறு போட்டு இறுக்கக்
கையில் தெம்பு இல்லை.

கத்தி வாங்கக்
கைவசம்
காசும் இல்லை.

அணுகுண்டு கிடைத்தால்
நலம்.

தயவுசெய்து
எந்த நாடாவது
செய்யுங்களேன் எனக்கு
மனிதாபிமான உதவி.

**பின் குறிப்பு:** இந்தக் கவிதையில் வரும் மனிதாபிமான உதவிக்கும் இலங்கை அரசுக்கு இந்திய அரசு செய்த மனிதாபி மான உதவிக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அப்படி இருப்பதாக யாராவது கருதினால் அது நம் தவறல்ல.
●

## மாலை நேர ஓவியம்

மாலை நேரக்
கடற்கரை.
சங்கு பொறுக்கலில்
சிறுவர்கள்.

காதலியின் முத்தப்
பொறுக்கலில் வாலிபச் சிறுவர்கள்.

மனக்கவலைகளில் மனிதர்கள்.

வானவில்லை நோக்கி
பறவைகளும் படகுகளும்.

இருண்ட பின்னே
விடியும் சில மனுஷிகள்.

அலைக்கரங்களில் நான்.

யாரங்கே?
வரையச்சொல்லுங்கள் இரவிவர்மாவிடம்
இப்படி ஓர் ஓவியத்தை.
●

## உனக்கென ஓர் உலகம்

நண்பனே!
உலகம் உன்னை
உயர்வாக மதிக்கத்
தயாராகவே உள்ளது–

நீ மட்டும் ஏன்
உன்னையே நிந்திக்கிறாய்?

தூக்கத்தைத்
தெருவில் நிறுத்து.

உன்துக்கங்களை
நெஞ்சில் நிறுத்து.

உழைப்பைக்
கைகளில் நிறுத்து.

உலகம்
உன்னை
உச்சியில் நிறுத்தும்.
●

## சுயமரியாதை

மீண்டும்
மீண்டும்
மிதிக்கிறேன் குரூரமாய்.
ஆனாலும்
உயிரது
பனியாய்த் துளிர்க்க
மீண்டும்
மீண்டும்
தலைநிமிர்கிறது— புல்!
●

## வைத்தியப் பரிணாமம்

உள்ளங்கை மட்டுமே
உடைமையாக
இருந்த காலத்தில்
பாட்டி வைத்தியம்.

இழப்பதற்குக்
குடிசையொன்று
கிடைத்துவிட்ட பிறகு
வைத்தியரிடம் வந்தான்,
சொஸ்தமானது.

கையில் கொஞ்சம்
காசு சேர்ந்தபோது
சர்க்கார் வைத்தியம்— (!)
சடுதியில் அல்ல—
சாவகாசமாகச் சரியானது.

காசின் பரிணாமம்
கொஞ்சமே கொஞ்சம்
கூடிவிட்ட பின்பு
தனியார் வைத்தியம்
வாடிக்கையாளன் ஆனான்.

காசுகள் காக்க
பணப் பைகள்
கிடைத்த பிறகு
ஸ்பெஷலிஸ்டிடம் போனான்.

ஸ்பெஷலிஸ்ட்
வேற்றிகரமாக
முடித்துவைத்தார்
அவன் கதையை.
●

## தனி வழி

நாலு பக்கம்
கடலிருந்தால்
தீவு.

மூனு பக்கம்
கடலிருந்தால்
தீபகற்பம்.

மூனு பக்கம் கடல்
நாலாவது பக்கம்
மலை
எட்டுப் பக்கமும்
கடன்—
நம் தேசம்.
●

## நம் அரசியல்

குளத்துநீரில்
நான்
தத்தளித்திருந்தேன்.

காப்பாற்றுபவர்கள்
வந்தார்கள்.

குளத்தின்
ஆழத்தை,
அகலத்தை,
என் வயதை,
எடையை,
பெயரை,
முக்கியமாக
வீட்டு முகவரியைக்
கேட்டுக்கொண்டு
விடை பெற்றார்கள்.

அலறினேன்—
உயிர்தான் எனக்கு
வெல்லக்கட்டியாயிற்றே.

அடக்கமுடன் ஓர்
அதிகாரி
அறிவித்துச் சென்றார்,
'அமைச்சரின் வருகிற
பிறந்தநாளில்
உம் குடும்பத்துக்கு
நிச்சயம் இழப்பீடு உண்டு.'
●

## ஒரு வீடு இரு திருடர்கள்

அது
அவர்களுடைய தொழில்,
கொள்ளையடிப்பதும்
கொலை செய்வதும்.

நாய்களுக்கு சிறுநீரால் ஆன
எல்லைக்கோடு போல
அவர்களுக்குத்
தொழில் தர்மம்.

ஒருவர் தொழிலில்
மற்றவர் குறுக்கிட்டால்
குறுக்கிடும் தொழில் தர்மம்.

ஒரு வீட்டின் புறவாசல் வழியே
ஒருவனும்,
கூரை வழியே ஒருவனும்
தொழில் செய்யப் போனார்கள்.
அந்தோ பரிதாபம்
குறுக்கிட்டது தொழில் தர்மம்.

யார் தொழில் செய்வது?
யார் பின்வாங்குவது?
முடிவு காண
முடியவில்லை திருடர்களால்.

முதல் திருடன் சொன்னான்,
'மக்கள் தீர்ப்பே
மகேசன் தீர்ப்பு.'

இரண்டாம் திருடன்
சொன்னான்,
'திருடுவது நம் உரிமை
அதைத்
தீர்மானிப்பது
வீட்டுக்காரனின் கடமை.'

ஆகவே,
எழுப்பப்பட்டான் அந்த
வீட்டுக்காரன்.
அவன் முன்
வாக்குப் பெட்டி.

யார் திருடவேண்டுமெனத்
தீர்மானிக்கும்படி
வீட்டுக்காரன்
வேண்டப்பட்டான்.

அவனுக்கு
ஜனநாயக முறை
பற்றிய அறிவு
புகட்டப்பட்டது.

இங்கு
திருடர்களுக்கு
வீட்டுக்காரனே எஜமானன்.

அவன்
சொல்லும் நபரே
திருட முடியும்.

கடைசில்
ஜனநாயகம் வென்றது.
ஆம்—
வீட்டுக்காரனைப் புதைத்தார்கள்.

**பின் குறிப்பு:** கவிதையில் 'திருடர்கள்' என்ற வார்த்தை 'திருடர்கள்' என்ற பொருளில் மட்டும்தான் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. அதை 'அரசியல்வாதிகள்' என்று யாராவது பொருள் கொண்டால் அது நம் தவறல்ல.
●

**ஆசிரியர் குறிப்பு:** 'புதியவன் கு. முத்துக்குமரன் என்பது கவிதையில் அடையாளப்பட விரும்பிய பெயர். இக்கவிதைகள் ஐந்தாண்டுகளுக்கு முன் எழுதப்பட்டவையாகலாம். ●

கவிதாசரண்

இதழாய் ஓர் எழுத்தியக்கம்

அக்டோபர் 2008 - மார்ச் 2009

ஆசிரியர்:

**கவிதாசரண்**

இதழ் விலை: ரூ.20

சந்தா விவரம்

10 இதழ்கள் -------- ரூ. 200

25 இதழ்கள் -------- ரூ. 500

50 இதழ்கள் ------- ரூ. 1000

வெளிநாடு தனி இதழ் ----- $ 2



தொடர்பு முகவரி:

**கவிதாசரண்**
*31, டி.கே.எஸ். நகர்,*
*சென்னை - 600 019*
*தொலைபேசி: 044-2574 01 99/*
*98849 50541*

**Kavithaasaran**
31,T.K.S. Nagar,
Chennai - 600 019.
Tamilnadu, India.
**Phone: 044 -2574 01 99 / 98849 50541**

**E-mail:**
kavithaasaran@yahoo.com

**Website:**
http://www.geocities.com/kavithaasaran
http://www.keetru.com


**நூல் மதிப்புரைக்கு இரண்டு படிகள் அனுப்புக. ஓர் ஆண்டுக்குள் வெளிவந்த புதிய நூல்களை அனுப்புக.**


Printed by Mrs.Kavithasaran at
Allwell Press, 31, T.K.S. Nagar, Chennai-600 019.
Edited & Published by Kavithaasaran.


# எத்தனைமுறை சாவீர்கள்?

கடைசியில்
கருணாநிதியும் ஜெயலலிதாவும்
கைகுலுக்கிக்கொண்டனர்
ராஜபக்சேவின்
மரியாதைக்குரிய விருந்தினர்களாய்.
கர்னல் கருணா
விமானத்தளத்துக்கே வந்து
தமிழ்வணக்கம் கூறி
அவர்களை வரவேற்றார்:
'உலகத் தமிழர்களின்
தமிழீனத்தலைமைகளே
நீவிர் நீடூழி வாழ்க!'
என்று முகமன்கூறி.

இந்த உலகம்
இத்தனை மரமா
இந்தியா— சீனா— பாகிஸ்தானின்
முந்நூறுகோடி ஆள்மையை
தன்னந்தனி நின்று
தகர்த்துக் களமாடும்
ஈழச் சீற்றத்தைப்
பார்த்து ரசிக்க
ஒரு வீரன்கூடவா இல்லை?
அவமானமாயிருக்கிறது
மனிதனாய்ப் பிறந்ததற்கு.
வெள்ளைத்தோல் அன்னையின்
கள்ள வன்மத்தின் கீழ்
அருவருப்பாய் இருக்கிறது
இந்தியனாய் இருப்பதற்கு.

# தொல்காப்பியம்:
# ஐந்திரத்தின் அத்துமீறல்கள்

தொல்காப்பியத்தை நான் முதன்முதலில் 'படித்த' கதையைக் கொஞ்சம் சொல்லியாகவேண்டும். எனக்கான அரசியல் இழை அந்தக் கதையினூடாகத்தான் தட்டுப்பட்டிருக்கவேண்டும்.

எனக்கப்போது பள்ளிப்பருவம். நான் எழுத்துக் கூட்டிப் படிக்கக் கற்றுக்கொண்ட காலத்திலிருந்தே எங்கள் வீட்டு மரப் பேழைக்குள் வெட்டிவேர் மணக்க மணக்க அடுக்கி வைக்கப்பட்டிருந்த பழந்தமிழ் நூல்கள் எனக்கான நட்புக் கரங்களாயிருந்தன. அவை என் தந்தையார் சேமித்து வைத்துச் சென்றவை. நான் அவற்றால் ஈர்க்கப்பட்டமைக்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று, என் தாயார் அவற்றைப் படிக்க அனுமதிக்கவில்லை. எனது தந்தையார் இலங்கைக்குச் சென்று, காணாமல் போய், சாமியாராக இந்த நூல்களோடு திரும்பி வந்தவர். நானும் சாமியாராகிவிடக் கூடாதென்பதற்காக அனுமதி மறுக்கப் பட்டது. இரண்டு, எங்கள் வளவில் பள்ளிக்குச் செல்லும் ஒற்றைப் பிள்ளையாய், தோழமையற்று, அப்போது நான் தனித்து விடப்பட்டிருந்தேன். ஆகவே ஒரு வேட்கையோடு அவற்றை நாடிச் செல்லும்படியாயிற்று. கூடுதலாக, எங்கள் வீட்டிலிருந்த 'சூடாமணி நிகண்டு' என்னிடம் ஓர் ஆவலை வளர்த்துவிட்டது. தமிழின் செழுமைமிக்க சொல்திரட்சியை எவ்வளவு முடியுமோ அவ்வளவு பழக்கப்படுத்திக்கொள்ள வேண்டும் என்னும் ஆவல் அது. பொருள் தெரிந்தோ தெரியாமலோ, கூட்டுச் சொற்றொடர்களைச் சந்தம் மாறாமல் படித்துக்கொண்டு போவேன். எனக்குப் பாட வந்ததும் கவிதை எழுத வந்ததும், அப்படியொரு விடாப்பிடியான முயற்சியின் வடிகாலாகத்தான் படுகிறது. (இன்று இரண்டையும் ஏறக்குறைய ஏறக்கட்டியாயிற்று.) நான் அவ்வாறு படித்துக்கொண்டு போகும்போது ஒவ்வொரு நூலும் அல்லது பாடலும்கூட சில காட்சிப் படிமங்களை என்னுள் ஈனும். அது ஒருவகையில் நூலை ஊடுருவிச் செல்லும் அர்த்தமும் அனுபவமுமாகத் திரளும். அது ஒரு வினோதமான அனுபவம். நூல்களும் நானுமாகச் சேர்ந்தாடிய மாய விளையாட்டு. புற உலகத் தாக்கங்களைப் பச்சைப் புண்ணாக உணர்ந்து உள்வாங்கிக் கொள்ள அவகாசமில்லாத காலவெளிப் பயணம் அது. இப்போது நினைத்தால் அது ஓர் இழப்பாகப் பட்டாலும், அன்று பேசப்படாமலும் பிரிக்கப்படாமலுமே என்னுள் படிந்தூறிய புற உலகத் தாக்கம்தான் இன்று என் அழுத்தமான எழுத்தரசியலாகப் பெருக்கெடுக்கிறது என்று தோன்றுகிறது.

புல் முற்றினால் பொடித்துச் சிதறும். மரம் முற்றினால் வைரமாய்த் திரளும், இல்லையா?

நான் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்த சிறிது காலத்தில் பள்ளி நூலகமே என் கைவசத்தில் வந்தது. நூலகப் பொறுப்பாளராயிருந்த ஓவிய ஆசிரியர் என் படிப்பார்வத்தைப் பார்த்து, என்னைத் தன் உதவியாளனாக ஏற்று, நூலகச் சாவியையே என்னிடம் தந்துவிட்டார். என்னைத் தனது நம்பகமான பிள்ளையாகவே ஏற்றுக்கொண்டிருந்தார். படிப்பு முடிந்து நான் பள்ளியை விட்டு வெளியேறியபோது என்னைக் கட்டித் தழுவிக் கண்ணீரோடு வாழ்த்தியனுப்பியவர் அவர். பள்ளி நூலகத்தில்தான் என் தந்தையாரின் சேமிப்பையும் கடந்து மேலும் பல பழந்தமிழ் நூல்களோடு எனக்கு அறிமுகம் ஏற்பட்டது. கூடவே காண்டேகர், சரத்சந்திரர், தாகூர், மு.வ. போன்றவர்கள் சொட்டச் சொட்ட நனைத்தெடுக்கும் அடர்மழையைப் போல் அப்போதுதான் எனக்கு அறிமுகமானார்கள்.

அதே காலகட்டத்தில், திராவிட இயக்கப் படைவீரர்களாய் வெளிப்பட்டுப் பின்னர் திராவிடக் கட்சிக்காரர்களாய் நங்கூரம் பாய்ச்சியவர்களின் தொடக்ககால ஏடுகளோடும் தொடர்பு ஏற்பட்டது. குறிப்பாக, 'போர்வாள்', 'திராவிடநாடு' என்னும் இரு இதழ்களோடும் அவையொத்த சிறுவெளியீடுகள், கதைகள், பாலு சகோதரர்களின் அட்டைப்படம் தாங்கிய பொங்கல் மலர்கள் ஆகியவற்றோடும் எனக்கு உள்ளார்ந்த வாசிப்புத் தொடர்பு வளர்ந்தது. 'திராவிடம், திராவிடர்' என்னும் பெயரில் அவர்கள் மீட்டெழுதிய பழந்தமிழ்ப் பெருமைகளும், பார்ப்பன எதிர்ப்பும் இளந்தமிழ் மனங்களில் புதிய அலைகளாய் ஆர்ப்பரித்த காலம் அது.

அப்படியொரு சந்தர்ப்பத்தில்தான் பள்ளி நூலகத்திலிருந்த தொல்காப்பியத்தை நான் படிக்க எடுத்துக்கொண்டேன். வெகுகாலமாகத் தமிழாசிரியரிடமே பிரிக்கப்படாமல் தேங்கிக் கிடந்த நூல் அது. "உனக்காகத்தான் இதைச் சண்டை போட்டுத் திருப்பி வாங்கினேன். எடுத்துப்போ," என்றார் ஓவிய ஆசிரியர்.

பழந்தமிழ் நூல்களை அறிமுகம் செய்துகொண்டதில் எனக்கு யாருடைய வழிகாட்டலும் கிடைக்கவில்லை. சொல்லப்போனால் தோன்றாத் துணையாயிருந்து என் தந்தையார்தான் வழி நடத்தினார் என்பது பொருத்தமாயிருக்கும். தொல்காப்பியத்தை அந்த வயதில் ஒரு விடலைத்தனமான படிப்பார்வத்தில் நான் வாசித்தது ஒரு கற்றுக்குட்டித் தனமான முயற்சி என்றுதான் சொல்ல வேண்டும். பழம்பெரும் நூல்களை வாசிப்பதற்குக்கூட ஒரு மரபுவழிப் பின்புலம், புலமைத்தனம், சமூக அங்கீகாரம், தொழில்முறை செக்குமாட்டுத்தனம் யாவும் தேவைப்பட்டன. என் தந்தையார் இருந்திருந்தால் எனக்கும் சிலபலத் தகுதிகள் வாய்த்திருக்கும். நானாக முயன்ற ஒவ்வொன்றும் தான்தோன்றித் தனமாகவே வகைப்படுத்தப்பட வேண்டும். தொல்காப்பியத்தைத் தவிர வேறொன்றைத் 'தீண்டியறியேன், தெளிந்தறியேன்' என்று சொல்லு மளவுக்கு அதில் தோய்ந்து தோய்ந்து அதுவாகவே வாழ்ந்திருந்த– அண்மையில் மறைந்த பாவலர் பாலசுந்தரம் போன்றவர்கள் விரல்விட்டெண்ணும் படியாகவேனும் இருக்கவே செய்கிறார்கள். எனக்கு அந்த நூலோடு உள்ள தொடர்பு அது என் பாட்டன் விட்டுச்சென்ற சொத்து என்னும் அளவில்தான். அதற்குமேலும் ஒன்றைச் சொல்லவேண்டும். தொல்காப்பியமாகவே வாழ்ந்த, வாழும் புலமையாளர்களின் தரிசனப் பார்வையைவிட மறுகட்டு மானத்தைக் கோரும் கருத்தியல் சார்ந்த என்னுடைய விமர்சனப் பார்வை மிகுந்த எதார்த்தமானதும் உயிர்ப்புள்ளதும் விழிப்புள்ளதும் என்பதில் எனக்கு எப்போதும் நம்பிக்கையுண்டு.

இன்றைக்கு ஐம்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன் அந்த நூலை அறிமுகம் செய்துகொண்டபோது எனக்கேற்பட்ட சிற்சில ஐயங்களை அண்மையில்தான் பேரசிரியர் வீ. அரசு அவர்களிடம் பகிர்ந்து கொண்டு தெளிவு பெறத் தோன்றியது. அவ்வய்யங்கள் மேலதிகத் தகவல்களுக்கும் புரிதல்களைச் சரிபார்த்துக்கொள்ளவுமானவை. ஆனால் அந்த முதல்

*தொல்காப்பியமாகவே வாழ்ந்த, வாழும் புலமையாளர்களின் தரிசனப் பார்வையைவிட மறுகட்டு மானத்தைக் கோரும் கருத்தியல் சார்ந்த என்னுடைய விமர்சனப் பார்வை மிகுந்த எதார்த்தமானதும் உயிர்ப்புள்ளதும் விழிப்புள்ளதும் என்பதில் எனக்கு எப்போதும் நம்பிக்கையுண்டு.*

*பார்ப்பனர்களையும் பார்ப்பனப் பொருண்மைகளையும் அப்படியே தாங்கி ஏற்றுக்கொண்டு, அவர்களை மதித்தும் அவர்களூடாகவும் வாழச் சம்மதித்த தமிழ் வாழ்வின் வரைவிலக்கணம்தான் தொல்காப்பியம்.*

வாசிப்பில் என்னுள் விரிந்த காட்சிப் படிமங்கள் இன்றும் நிறம் மாறாமல் அப்படியே இருக்கின்றன. இடையில் என் களமும் மொழியும் ஒத்த சிந்தனைகளோடு கனம் பெற்றிருக்கின்றன என்பதுதான் கூடுதல் அம்சம்.

அன்றைய தொல்காப்பிய வாசிப்பு பிற படைப்பாக்கங்களைப் போல எனக்குள் புதிய காட்சிப் படிமங்களை ஈனுவதற்கு மாறாக, ஏற்கனவே என் நினைவுப் புலனில் சேமிக்கப்பட்ட இரண்டு காட்சி யனுபவங்களையே மீட்டுருவாக்கியது எதிர்பாராத ஒன்று. திராவிடப் புரிந்துணர்வின் பின்புலத்தில் அக்காட்சிகளுக்கான பொருள் திரட்சிகளை எதிர்கொண்ட போது எனக்கு மட்டுமீறிய திகைப்பும் அவநம்பிக்கையுமே மேலிட்டன. என் அறிதலின் பரிமாணங்கள் ஒரு கோரக் கொலைக் கனவைப்போலப் பொய்த்து விடாதா, பொய்ப்பித்து விடுவதற்குத் தமிழின் எல்லையற்ற மொழியடுக்குகள் ஏதேனும் ஒரு வகையில் கை கொடுக்காவா என்னும் பரிதவிப்பு இன்னும் என்னுள் தளும்பிக்கொண்டிருக்கிறது.

என் முதல் காட்சி அனுபவம் தற்செயலாக எனக்கு வாய்த்த உதகை மலைப் பயணத்தில் பெற்றதாகும். தொல்காப்பிய வாசிப்புக்கு இரண்டாண்டுகளுக்குமுன் அது நிகழ்ந்தது. பேருந்து குன்னூரைக் கடந்து மலையேறிக்கொண்டிருந்தது. ஓரிடத்தில் நான் வெளியே பார்த்தபோது சாலையை ஒட்டினாற்போல் 200, 300 அடி பள்ளத்திலிருந்து மேலேறி வந்த ஒரு தைலமரம் என்னைப் பார்த்து இன்னும் எட்டிப் பார் என்றது. ஏற்கனவே குளிரில் சிலிர்த்திருந்த நான் மேலும் சிலிர்ப்புற்று எட்டியவரை பார்வையைச் செலுத்தினேன். சாலையின் திருப்பத்தில் கீழே பெரும் பள்ளத்தாக்கு விரிந்துகிடந்தது. கண்ணுக்கெட்டிய தூரம் வரை செழும் பச்சை நிரத்தில் தேயிலைத் தோட்டம் பரந்து கிடக்க, அதனூடாக ஆங்காங்கே கண்காணிப்புக் கோபுரங்கள் போலத் தைல மரங்கள் ஓங்கி நின்றன. சில இடங்களில் இரண்டொரு மரங்கள் பட்டுப்போய் மொட்டையாகவும் காட்சியளித்தன. அந்தக் காட்சி ஒரு கச்சிதமான சித்திரமாக என்னைக் கட்டிப்போட்டது.

மற்றொரு காட்சியனுபவம் நான் துவக்கப்பள்ளியில் சேர்ந்த சில நாட்களிலேயே கிடைத்தது. பள்ளிக்குப் பின்புறம் ஒரு குளம் இருந்தது. கசிவு நீர்க் குளம். ஆனால் அப்போது பாசி மூடிக் கிடந்தது. அதன் கரையில் கிளுவை மரங்கள் சிலுப்பிக்கொண்டு நின்றன. இடைவேளையின்போது சிறுவர்கள் அங்குச்சென்று குளத்தில் தெற்றுக்கல் எறிந்து, பாசி சிதறி நீர்க்கோடு தோன்றுவதைக் கண்டு மகிழ்வார்கள். தெற்றுக்கல் எறியத் தெரியாதவர்கள் கரைமீது நின்றுகொண்டு வேடிக்கை பார்ப்பார்கள். அப்போது ஒரு சிறுவன் காய்ந்துபோன கிளுவை முள்ளை ஒடித்து அடிமரத்தில் குத்தினான். குத்துவாயில் பால் கசிந்தது. அதில் முள்முனையை நன்றாகத் தோய்த்து, கல்பட்டுப் பாசி விலகித் தெரிந்த நீரில் வீசினான். வீசிய வேகத்தில் முள் நீந்திச் சென்றது. திரும்ப மூடிக்கொள்ள நெருங்கிய பாசிப்படலம் அதைக் கண்டு விலகிப் பின்வாங்கியது. சடுகுடு விளையாட்டில் எதிராளியை எட்டி எட்டித் தொடப் பாயும் சிறுவனைப்போல் முள்ளானது பாசியை நெருங்கி நெருங்கி ஓடியது. சிறுவர்கள் கைதட்டி ஆரவாரித்தார்கள். ஆயினும் அதன் வீரியம் மெல்லமெல்லக் குறைவதைக் கண்டு, சிறிது நேரத்தில் அந்தப் பாசிப்படலம் திரும்பிவந்து அந்த முள்ளையும் சேர்த்து மூடிக் கொள்ளும் என்று தோன்றியது. இடைவேளை முடிந்து மணியடித்ததால் அதைப் பார்க்காமலே வகுப்புக்குத் திரும்பிவிட்டேன். அன்று இரவு, கனவா மீள்நினைவா என்று தெரியவில்லை, அந்த முள் நீரிலும் நான் கரையிலுமாகப் பாசிப்படலத்தை ஓடஓட விரட்டிக்கொண்டிருந்தோம்.

தொல்காப்பிய வாசிப்பு எனக்களித்த மிகக் குறைந்த புரிதலில் இவ்விரு காட்சிகளும் மனத்தைப் பிசையும்படியான அர்த்த வெளிப்பாடுகளைத் தோற்றுவித்தன. எளிமையும் செழிப்பும் மிக்க தமிழ்ச் சமூகத்தின் நுட்ப வெளியைக் கண்காணித்துக்கொண்டும் கட்டுப்படுத்திக்கொண்டும் கோபுரக் கலசங்களில் பார்ப்பனர்கள் ரெட்டணைக்கால் போட்டு அமர்ந்திருப்பதாக அந்தக் காட்சி விரிந்தது. தமிழ் வாழ்வு என்னும் நன்னீர்க் குளத்தை மூடிக்கொண்டு அடர்ந்தழுகும் பச்சைப் பாசியாய்ப் பார்ப்பனக் கலாச்சாரம் சூழ்ந்து கிடந்தது. பாசியின் பச்சை நிறம் அழுக்காற்றின் ஒட்டுமொத்த தற்குறிப்பேற்றமாய் அடையாளப்பட்டது. தமிழ் வாழ்வு, தமிழ்ச் சமூகம் என்பனவெல்லாம் திராவிடம் பேசிய இதழ்கள் எனக்களித்த வளமார்ந்த காட்சிப் படிமங்கள்தாம். செல்லப்போனால் அது ஒன்றுதான் அவை வளர்த்தெடுத்த பொய்க்கலப்பில்லாத அறிவுநெறி என்று தோன்றுகிறது. என்னையொத்த சமகாலத் தமிழர்களையும் எங்களது புதுக்கணுக்களாய் மேலெழுகின்ற — புனிதங்களைக் கட்டுடைத்துச் சரிபார்ப்புகளை மறுவாசிப்புச் செய்கின்ற இளந்தமிழ் அறிவுப்புலமைகளையும் சுயமரியாதையோடு வாழவைப்பதும் அது ஒன்றுதான்.

தொல்காப்பியத்தில் உள்ள சொல்லச் சொல்லப் பெருகும் செந்தமிழ்ச் செழுமைகள் நம்மைப் பெருமிதங்கொள்ள வைப்பவை என்பதில் ஐயமில்லை. அதே சமயம் கன்னங்கரிய கட்டுடலில் பூத்த அம்மைக் கொப்புளங்கள் போலத் தூவிக் கிடக்கும் பார்ப்பனக் குறியீடுகளைக் கண்டு நாம் பரவசம் கொள்ள முடியாது. ஒரு மாணவனாக அப்போது தோன்றிய கருத்தை இன்றைய மொழியில் சொல்வதானால், பார்ப்பனர்களையும் பார்ப்பனப் பொருண்மைகளையும் அப்படியே தாங்கி ஏற்றுக்கொண்டு, அவர்களை மதித்தும் அவர்களூடாகவும் வாழச் சம்மதித்த தமிழ் வாழ்வின் வரைவிலக்கணம்தான் தொல்காப்பியம். இப்போது இன்னும் பல துணையம்சங்கள் கூடிவந்து என்னைத் தெளிவு படுத்தியிருந்தாலும் அடிப்படையான அம்சம் அப்படியேதான் உள்ளது.

இந்தக் கணத்தில், 'பார்ப்பான் மேன்மையானவன்' என்னும் ஒரு அம்சத்தை — ஒற்றை அம்சத்தை மட்டும்— கை கழுவிட முடியும் என்றால், பார்ப்பனர்களோடும் பார்ப்பன மொழியோடும் நமக்கென்ன பகை? ஆனால் அது இருக்கும் வரை என் தன்மானம் என்பது தமிழனாய் இருப்பதுதான். என் உடன்பிறந்த கன்னடன், தெலுங்கன், மலையாளி யாவரும் முற்றாகத் தின்று செறிக்கப்பட்ட பின்னும் இன்னும் நான் அடையாளம் காக்கிறேனே, அதுதான் என் தமிழ் மானம். இந்தப் பேச்சுகளெல்லாம் அந்த என் இருப்பின் நீட்சிதான்.

பனம்பாரனார் தொல்காப்பியருடன் பயின்ற மாணவராம். அவர்தான் தொல்காப்பியத்துக்குச் சிறப்புப்பாயிரம் எழுதியுள்ளார். அதுவே நமக்குச் சில நுட்பமான அதிர்ச்சி மதிப்பீடுகளை அறிமுகம் செய்துவைத்து விடுகிறது. தொல்காப்பிய நூலாசிரியர் மிகப்பெரும் புலமையாளர்; அறிஞர்; தமிழ் முன்னோடிகளின் படைப்புகளைக் கற்றறிந்தவர். இவை யாவும் அவருக்கு இயல்பாய்ப் பொருந்தும் திறமைகள். கூடுதலாக, அவர் ஐந்திரம் கற்றவர் என்று சொல்லப்படுகிறது. ஐந்திரம் என்பது இன்று வரை கண்டெடுக்கப்படாத வடமொழி இலக்கண நூல். பாணினியின் இலக்கணத்துக்கு முற்பட்டதாயிருக்கலாம். அதைக் கற்றவர் என்று கூட அல்ல, ஐந்திரமாகவே தன்னை நிறைத்துக்கொண்டவர் என்பது அவர் பெற்ற சிறப்புத் தகுதி.

தொல்காப்பியம் கடைச்சங்க கால நூலெனின் சங்கப் பலகையில் வைத்து அரங்கேற்றப்பட்டிருக்கும். மாறாக, மன்னன் நிலந்தரு திருவின் பாண்டியன் கூட்டிய புலவர் பேரவையில் அறிமுகப்படுத்தப்படுகிறது. அந்த அவைக்குத் தலைமை ஏற்றவர் அதங்கோட்டு ஆசான் என்பவர். அறம் போதித்து நாத்தழும்பேறியவர். அதற்கும் மேலாக அவர் பார்ப்பன வேதங்கள் நான்கையும் முற்றக் கற்றவர் என்றும் சொல்லப்படுகிறது. அதுதான் அவரது தனிப்பெருஞ்சிறப்பு. வேறு விதமாகச் சொல்வதெனில் அவர் 'வேதங்களின் சாரத்தையே அறமாகப் போதித்த பெருமகன்' என்றாகிறது. அது அவருக்கான அரும்பெருஞ்சிறப்பு. இவ்வாறாக நூலாசிரியர் வடமொழி இலக்கண விற்பன்னர் என்றும், நூல் தகுதியை உறுதிப்படுத்தத் தலைமை ஏற்றவர் நான்மறைகளால் முற்றி நெற்றானவர் என்றும், ஆகவே இத்தகுதிகளே நூலின் தகுதிக்குச் சிறப்பு சேர்ப்பவை என்பது போலவும் ஒரு கற்பிதம் ஊதிக்காட்டப்படுகிறது.

நூலாசிரியர் வடமொழி இலக்கண வல்லுநர் அல்லவா? எடுத்த எடுப்பிலேயே அதை நமக்குத் துலக்கிக் காட்டி விடுகிறார். தமிழில் ஒருமை, பன்மை என்று வகைப்படுத்துவது மரபு. வடமொழியிலோ

*உலகத் தொன்மை இலக்கியங்கள் ஏதொன்றிலும் காணக்கிடைக்காத அளவுக்கு ‘உலகு’ என்னும் சுட்டலை அதிகம் பெற்றவை பழந்தமிழ் இலக்கியங்கள். புலவன் சுட்டும் ‘உலகம்’ ஒரு நாடாக, அல்லது ஓர் ஊராகக்கூட இருக்கலாம். ஆனால் அந்தச் சொல்மூலம் அவன் தன் இயங்குவெளியை உலகளாவியதாக விரித்துப் பார்த்த பரந்த மனத்தைப் பெற்றிருந்தான் என்பது இங்கு முக்கியமாகிறது.*

ஒருமை, இருமை, பன்மை என்பது வழக்கு. அந்த வழக்கைத் தமிழுக்குக் கொண்டு சேர்த்து, ‘ஓர் எழுத்துச் சொல், ஈரெழுத்துச் சொல், இரண்டுக்கு மேற்பட்ட பல எழுத்துச் சொல்’ எனச் சொற்கள் மூவகைப்படும் எனச் சுட்டிச் செல்கிறார். இது அப்படியல்ல என்று யாரேனும் விளக்க முற்பட்டாலும் வேறு எப்படியிருப்பதற்கும் அவருக்கு உதவியது ஐந்திரம் என்பதுதான் பொருத்தமாயிருக்கும்.

மிகுந்த தன்னடக்கமுள்ள பார்ப்பனப் போற்றிபோலத் தென்படும் தொல்காப்பியரைப் ‘பிறப்பால்’ ஒரு பார்ப்பனராகவே அடையாளங் காண்கிறார் கனகசபை(ப்பிள்ளை)! தமிழ்ச் சமூகத்தை நான்கு வகையாகப் பகுத்து அதில் முதல் பகுப்பாகப் பார்ப்பனரைக் குறிப்பிட்டது பற்றிய கோபம் அவருக்கு. தொல்காப்பியர் முன்வைக்கும் பகுப்புமுறை: பார்ப்பனர், அரசர், வணிகர், வேளாளர் என்பது. போதாததற்கு வேளாளர் ‘இழிந்தோர்’ என்னும் குறிப்பும் நூலில் வருகிறது. கனகசபை வேறொரு முக்கியமான செய்தியையும் முன்வைக்கிறார். நானும் அதற்கு விடை தேடித் தொல்காப்பியத்தைத் துழாவியதுண்டு. அதாவது அரசரும் வணிகரும் பூணூல் அணிந்திருந்தார்களா என்பதைத் தொல்காப்பியர் தெளிவுபடுத்தாமல் விட்டுவிட்டார் என்கிறார். இந்த ஒன்றைக் கொண்டே தொல்காப்பிய ஆசிரியன் பார்ப்பனன் இல்லை என்று உறுதிப்படுத்திக் கொள்ளலாம். பூணூலை மறந்தவன்— தான் இரு பிறப்பாளன் என்பதை மறந்து தொலைத்தவன் பார்ப்பனனாயிருக்க முடியாது.

தொல்காப்பியரின் வகைப்படுத்தல் பார்ப்பன வகைப்படுத்தலான பிராமணன், சத்திரியன், வைசியன், சூத்திரன் என்னும் பெயர்களின் மொழிபெயர்ப்பாகவே தோன்றுகிறது. வடஇந்தியாவில் முதல் மூன்று பிரிவினரும் பூணூல் பேர் வழிகள். இந்தியாவில், வரலாறு எழுதப்படத் தொடங்கிய காலத்திலிருந்து பார்ப்பன மதிப்பீடு களிலேயே அது பதிவு செய்யப்படுகிறது. அரசியல் ரீதியாக இந்தியா முழுமையும் ஒரு குடைக்குள் வந்தபோதும் தமிழ்நாடு மட்டும் தனித்தீவாய் ஒதுங்கிக் கிடந்தது. இப்படி ஒதுக்கப் பட்டுக்கிடப்பதற்கு வருத்தம் தெரிவிக்கும் விதமாகவோ என்னவோ, இலக்கிய ரீதியிலான தமிழக வரலாற்றெழுதியலைப் பார்ப்பன மதிப்பீடுகளுக்குக் கைமாற்றி, ஒட்டு மொத்த இந்தியாவின் கலாச்சார ஒருமைப்பாட்டைத் தொல்காப்பியர் இலக்கணப்படுத்தினார் என்பதாக இதை வரையறை செய்யலாம். சங்க இலக்கியங்கள் ஏதொன்றிலும் இல்லாத அளவுக்கு தொல்காப் பியத்தில் வடசொற்கள் மிதமிஞ்சி ஊடாடுவதையும் நாம் இவ்வாறே மதிப்பிடலாம்.

உலகத் தொன்மை இலக்கியங்கள் ஏதொன்றிலும் காணக் கிடைக்காத அளவுக்கு ‘உலகு’ என்னும் சுட்டலை அதிகம் பெற்றவை பழந்தமிழ் இலக்கியங்கள். புலவன் சுட்டும் ‘உலகம்’ ஒரு நாடாக, அல்லது ஓர் ஊராகக்கூட இருக்கலாம். ஆனால் அந்தச் சொல் மூலம் அவன் இயங்கு வெளியை உலகளாவியதாக விரித்துப் பார்த்த பரந்த மனத்தைப் பெற்றிருந்தான் என்பது இங்கு முக்கியமாகிறது. காரணம், அப்போது அவன் மனத்தில் நாகரிக நுட்பங்கள் என்னும் பெயரில் தன்னை ஊதிக்காட்டிக்கொள்ளும் அறிவுமைய அடைசல்கள் வந்து சேரவில்லை. சிறிய அறையே எனினும் அடைசலற்றிருந்தால் விசாலமாகத் தெரிவதில்லையா? அது போன்றதொரு விரிவை உருவகிக்கும் மனம் அவனுக் கிருந்தது. அந்த மனம்தான் பகிர்ந்துண்டு வாழ்வதை இருத்தலின் அடிப்படையாகப் போற்றிக்கொண்டது. பிற்காலத்தில் தோன்றிய சாதிச் சழக்குகளுக்கும் பார்ப்பனத் தாக்கங்களுக்கும் மௌனமாகவே முகங்கொடுத்த — ‘மூதுரை’ எழுதிய ஔவைகூட, ஒரு கட்டத்தில் சாதி வேற்றுமையின் கோரப் பிணவாடையைச் சகித்துக்கொள்ள முடியாதவராய், தன்னுள் உயிர்ச் சரடாக இழையோடித் தொடர்ந்து வந்த பகிர்ந்துண்ணலின் அடுத்தகட்ட வளர்ச்சியாக உடைமைச் சமுதாயம் கடைபிடித்த ‘ஈகை’ என்னும் அலகைத் தூக்கிவைத்துக் கொண்டாடும் முகமாக, “சாதி இரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்... இட்டார் பெரியோர் இடாதார் இழி குலத்தோர் பட்டாங்கில் உள்ளபடி” என்று ஓங்கிக் குரல் கொடுக்கிறார். ‘இடுதல்— ஈகை’ என்பது பெறுகிறவர்களைப் பிச்சைக்காரர்களாகக் கொச்சைப்படுத்திக் கொடுத்தல் அல்ல. தனக்கு நல்லறம் செய்ய வாய்ப்பளித்தார்களே என்று நன்றி பாராட்டும் விதமாகக் கொடுப்பதாம். இந்தத் தொடர் இழைதான் இல்லாதாரிடத்தில் என்ன மலினப்பட்டுப் போனாலும் உயிர் வாழ்தலை இன்னும் இனிமைப்படுத்திக் கொண்டிருக்கும் பண்பு. இந்த எதார்த்தத்தின் ஊடாகவே நாகரிகத்தின் உயர்ந்தபட்சத் தேடலாகத் தொல்காப்பியம் தமிழ் வாழ்வை இந்திய ஒருமைப்பாட்டுக்குள் புதைக்கிறது.

‘அந்தணர், அரசர்...’ என்று தொடரும் இந்த நாற்பால் பகுப்புமுறை தமிழுக்கே உரியது என்று காப்புரிமை கோரும் தீவிரத் தமிழ்க் குரல்கள் அதிகமுண்டு. தமிழ்ப் பகுப்புமுறை அச்சு அசலானது; ஐந்திணை வாழ்வைச் சிறப்பிக்கும் தரம் சார்ந்தது. அதைப் ‘போல’ச் செய்துதான் வடமொழியில் சேர்த்துக்கொண்டார்கள் என்பது அவர்கள் வாதம். அதற்குப் பாவாணரும் விதிவிலக்கில்லை. அடிப்படையில் அவரும் ஒரு வேளாளர்தான் அல்லவா? உழுதுண்ணும் வேளாளர் அவர். மற்றவர்கள் வரப்பில் ஏறிக்கொண்ட உழுவித்துண்ணும் வேளாளர்கள். உழைப்பை இழிவுபடுத்துவதில் எவன் தீவிரம் காட்டுகிறானோ அவன்தான் சமூக மதிப்பீட்டில் உயர்ந்தவனாகப் போற்றப்படுகிறான். அதுதான் பார்ப்பனியத்தின் இன்னொரு பெயர்.

பகுப்புமுறை விஷயத்தில் மறைமலையடிகள் இன்னும் ஒருபடி மேலே சென்று, ‘இவ்வாறு பார்ப்பானுக்கு உயர்வு கற்பித்து ரிக் வேதத்தில் நுழைத்தவர்கள் வடநாட்டுப் பார்ப்பனர்களாயிருக்க முடியாது. ஏனெனில் அவர்கள் நுட்பமாக வேற்றுமை பார்க்கிறவர்கள் அல்லர். ஆகவே இதைச் செய்தவர்கள் தென்னாட்டுக்கு வந்து தமிழர்களோடு இனக்கலப்புற்ற திராவிட ஆரியப் பார்ப்பனர்கள்தாம்’ என்று அடித்துச் சொல்கிறார். அவருடைய கூர் நோக்கிலும் ஒரு நியாயம் இருக்கிறது. பாம்பின் கால் பாம்பறியும் என்பார்கள். நுட்பமாக வேற்றுமைப் படுத்துவதில் திராவிட ஆரியப் பார்ப்பனர்களுக்குச் சற்றும் சளைத்தவர்களல்லர் வெள்ளாளச் சூத்திரச் சாதியினர். இதிலுள்ள புறம்போக்குத்தனம் என்னவென்றால் பிறர் தன்னைக் கீழ்மைப் படுத்துவதுதான் பூதாகாரமாகத் தெரியுமே தவிர பிறரைத் தான் கீழ்மைப்படுத்துவது தன் சுரணைக்கே எட்டுவதில்லை என்பதுதான்.

வடநாட்டுப் பார்ப்பனர்கள் புலால் உண்பவர்கள்; பிறர் பார்த்திருக்க உணவு கொள்வதில் வேற்றுமை பாராட்டாதவர்கள்; பிறரை இழிவுபடுத்த முனைப்பு காட்டாதவர்கள் என்பதை மறைமலையடிகளே நேரில் கண்டறிந்ததாகச் சொல்கிறார். ஆனால் தென்னாட்டுப் பார்ப்பனர்களோ பிறரை இழிவுபடுத்துவதிலும் தங்களைப் பூசுரர்களாக உயர்த்திப் பேசுவதிலும் தங்களுக்கான மறைவிடத்தில் தனித்து உண்பதிலும் பெருமையடைகிறவர்கள் என்று மனம் வெதும்புகிறார்.

*மனிதனை மனிதன் அவமதிக்கும் சாதி நுட்பங் களைப் பேணுவதில் ஆச்சாரத் தமிழுக்கும் தமிழ்ச் சமூக வெளிக்கும் தனித்த இடமுண்டு. மனித உடம்பிலேயே இடுப்புக்கு மேலே உயர்ந்ததாகவும் கீழே இழிந்ததாகவும், இடப்பக்கம் தாழ்ந்ததாகவும் வலப்பக்கம் சிறந்ததாகவும் பாகுபடுத்துவது ஒட்டுமொத்த ‘இந்தி’யர்களுக்குமான மேட்டிமைக் கலாச்சாரம் எனினும், அது தமிழ் மண்ணில்போல பிற பகுதிகளில் அவ்வளவு நுட்பமாகப் பேணப் படுவதில்லை.*

*பார்ப்பனர்கள் காற்றுப் புகமுடியாத இடத்திலேயும் கலக உணர்வாய்ப் புகுந்து, பறவை எச்சத்தில் விழுந்து பாறையைப் பிளக்கும் விதையைப்போல முளைத்தெழுகிறவர்கள். எதிர்ப்புகள் மூர்க்கம் பெறும்போது பின்வாங்கவும் அடங்கியிருக்கவும் கற்றவர்கள். எதிர்ப்பவர்கள் அசரும்போது புதுவியூகத்தோடும் புதுவேகத்தோடும் தாக்குதல் தொடுத்துத் தங்களை நிலைநிறுத்திக் கொள்ளக்கூடியவர்கள்.*

இங்கே வெள்ளாளனும் பார்ப்பானும் ஏற்றத்தாழ்வை அனுசரிப்பதில் தனித்தனியாகவும் பொதுவாகவும் மூன்றுமுறை கூர் தீட்டுகிறார்கள். அதுதான் சாதி ஆச்சாரத்தின் நுட்ப வெளிப்பாடாகிறது. பார்ப்பனர்கள் சூத்திரர்களை அவமதித்ததை ஒப்பிடும்போது சூத்திரர்கள் தலித்துகளை அவமதிப்பது குருதி ஒழுகும் பச்சைப் புண்ணாய்த் தொடர்கிறது. சூத்திரன் பார்ப்பானிடம் இழந்த மரியாதையை வட்டியும் முதலுமாகத் திருப்பிப் பெறுவதற்குத் தலித்துகளைப் பலி கொள்கிறான்.

இந்தப் போட்டிமிக்க சாதி வெளியில் கொழுத்த விளைச்சல் தரும் ஊடுபயிர் ஒன்று வளர்த்தெடுக்கப்பட்டிருக்கிறது. அதுதான் தலித்துகள் தலித்துகளையே அவமதித்து இழிவுபடுத்திக்கொள்ளும் சாதி மூர்க்கம். முதல் பயிரின் விளைச்சல்கூட ஒருநாள் சாவியாகப் போகலாம். ஆனால் இந்த ஊடுபயிரின் விளைச்சல் ஒருபோதும் பொய்க்காது என்பது சூத்திரர்களின் திடமான நம்பிக்கை. "பறையன் எவ்வளவு கல்வியும் ஒழுக்கமும் உள்ளோனாயினும் எத்தனை செல்வனாயினும் ராசாதி ராசனாகிவிடினும் (அவன்) பள்ளனாகவும்கூட முடியாது," என்பது அந்த நம்பிக்கையின் வெளிப்பாடு. (இந்த மேற்கோளை இன்னொரு முறையும் பயன்படுத்துவேன்.)

சாதி ஏற்றத்தாழ்வை இந்தியாவின் வேறு எந்த மொழிக்கும் இல்லாத சொல்திறனோடு தமிழ் வெகு நுணுக்கமாகச் சேமித்துக் கொள்கிறது. உதாரணமாக, தலித் சாதியினரை பறையன், பள்ளன், சக்கிலியன் என்று 'அன்' விகுதி போட்டு அழைப்பதே பொதுவாகப் பிற சாதியாட்களின் இயல்பாயிருக்கிறது. தலித் எழுச்சி பற்றிய தீவிரப் பேச்சுகளின் காரணமாக பறையர், பள்ளர், சக்கிலியர் என்று 'அர்' விகுதி போட்டு அழைப்பது சாத்தியப்பட்டிருப்பினும் வெகுமக்களில் பெரும்பாலோருக்கு அப்படி அழைப்பது நக்கல் தொனியாகவே ஒலிக்கிறது. ஆனால் அதையே வெள்ளாளன், செட்டியான், முதலியான், நாடான், வன்னியன், மறவன் என்று சொல்லிப் பாருங்கள். (கோபம் கொண்ட தலித்துகள் தவிர மற்றவர்களுக்கு) எவ்வளவு அந்நியமாய், அவமதிப்பாய், அருவருப்பாய் ஒலிக்கிறது! இது எப்படி? சுட்டுப் பெயர்களில்கூட ஏற்றத்தாழ்வுகளைக் காலங்காலமாய் அவர்கள் பழக்கிவைத்துக் கொண்டுள்ள நுட்பம் அப்படி. இழிவை ஒரு சொல்லின் விகுதியைக் கொண்டே எளிதில் நிறுவிவிடும் நுட்பம். வடக்கே உள்ளவர்கள் இழிவைப் பேச முழுதாகச் சொற்களை உருவாக்கிக் கொள்வார்களே தவிர சொல்லின் விகுதிக்குள் சேமித்துக்கொள்வதை மொழியில் தவிர்த்துவிட்டார்கள். தமிழில் வயதில் மூத்தோரை 'அவர்' என்றும் இளையவரை 'அவன்' என்றும் குறிக்கும் பொதுச் சுட்டலைக்கூட, சாதிப்பாகுபாட்டைக் குறிக்கும் சிறப்புச் சுட்டலாக மாற்றிக்கொண்டு விட்டார்கள். 'மேல்'சாதியைச் சேர்ந்த சிறுவன் 'கீழ்'ச்சாதியைச் சேர்ந்த கிழவரைக்கூட 'டே...' போட்டு அழைக்கிறான். ஆனால் அந்தக் கிழவர் மறுமொழியாக "என்ன சாமி?" என்றுதான் அழைக்கவேண்டும். பார்ப்பன அவமதிப்பை விட இது எந்த வகையில் குறைந்ததாம்? குடிகாரத் தெருப்பொறுக்கி அப்பனைக்கூட 'அவர்' என்று சுட்டுகிற மகன், குடும்பத்தையே காத்துக் கரையேற்றும் தாயை 'அவள்' என்றுதான் சுட்டுகிறான். பெற்றவளேயானாலும் அவள் பெண்தானல்லவா? இவற்றையெல்லாம் மறுபரிசீலனைக்கு உட்படுத்தாமல், பார்ப்பனக் கலாச்சாரத்திலிருந்து விடுபட முயலாமல் தொடர்ந்து கொண்டிருப் பதுதான் அப்பழுக்கற்ற தமிழ்க்கலாச்சாரமாக இன்றும் பேணப்படுகிறது. இவற்றைப் பற்றியெல்லாம் மறைமலை அடிகளாரைப் போன்றவர்கள் மறையவர்களைக் குறைகூறும் வாயாலேயே பேசியிருக்க வேண்டும். ஆனால் அவர்கள் பேசுவதில்லை என்பதால் நாம் பேசும்படியாகிறது.

சூத்திர–தலித் சாதிகளுக்கூடாக நிலவும் சாதிப் பாகுபாட்டு நுட்பங்களையும் விஞ்சும்படியான சாதியாச்சாரத்தைத் திராவிட ஆரியப் பார்ப்பனர்கள் மேற்கொள்ள வேண்டியிருந்தது. காரணம், அவர்கள் திராவிட ஆரியப் பார்ப்பனர்களாகத் தரம் தாழ்ந்து போனதுதான்.

*பார்ப்பனர்களே புனைவுகளால் தங்களைத் தூக்கி நிறுத்திக் கொண்டவர்கள் என்னும்போது தென்னாட்டுப் பார்ப்பனர்களுக்குத் தமிழ்ப் பின்புலத்தில் இருமடங்கு புனைவுகள் தேவைப்பட்டன. அதனால்தான் தொட்டால் மட்டும் அல்ல, பார்த்தாலே தீட்டு என்னும் எல்லைக்கும் சென்று தங்களை மேலேற்றிக்கொள்ள முயன்றார்கள்.*

தென்னாட்டில்போல பார்ப்பனர் வாழும் சேரிகளை – அதாவது அக்ரஹாரங்களை நீங்கள் வேறெங்கும் காணமுடியாது என்பதுகூட இந்த உளவியலின் வரலாற்று வெளிப்பாடுதான். ஒதுக்குவதும் ஒதுங்குவதும் தென்னாட்டுப் பார்ப்பனர்களுக்கு மூச்சுக்காற்றுப்போல.

நாம் ஒன்றைத் தெளிவாக மனத்திலிருத்த வேண்டும். நாற்பால் பகுப்புக்கு யார் சொந்தக்காரராயிருப்பினும் பார்ப்பானின் மேலேற்றத்தை ஏற்றுக்கொண்டு தமிழன் தாழ்வுற்றுப் போனவன்தானே? பார்ப்பனர்கள் தங்களுக்குத் தேவையான எதையும் எங்கிருந்தும் தங்களுடையதாக அபகரித்துக்கொள்வார்கள்; 'போலி' செய்து கொள்வார்கள். காலப்போக்கில் அதைத் தங்களுடைய சரக்காகவே நிறுவிக் கொள்வார்கள். அவர்கள் பெயரிலான அறிவுச் சொத்துகள் பலவும் இப்படித்தான் அவர்களால் சேகரம் செய்யப்பட்டன. அவர்களுடைய திறமை எல்லாம் தங்களுக்கு உகந்ததை அடையாளம் கண்டு அபகரிப்பதில்தான் இருக்கிறது.

தொல்காப்பியத்தையும் அதை எழுதியவரையும் புனிதப்படுத்துவதில் இன்னொரு வீரியம் மிக்க குழுவும் உண்டு. அவர்களுடைய பலம், தமிழின் அழகுகளையெல்லாம் துருவித் துருவித் திரட்டி எடுப்பது. பலவீனம், அறிவியல்வாதிகளாய்க் கடக்க முடியாத தூரத்தை அரசியல்வாதிகளாய்க் கடந்து சென்றுவிடுவது. ஆயினும் ஆய்வுத் துணிபுகளோடு தமிழ்மானம் காக்க வந்த அறிவார்ந்த புலமைக் குழுவாகவே தங்களை அடையாளப்படுத்திக் கொண்டவர்கள். அந்தக் குழுவின் முடிந்த முடிவு என்னவெனில் தொல்காப்பியத்தில் தென்படும் பார்ப்பனச் சார்புநிலையைப் பேசும் பாடல்கள் அனைத்தும் பிற்கால இடைச்செருகல்களே என்பதாகும். அந்த முடிவை அவ்வளவு எளிதாக, போகிற போக்கில் யாராலும் புறந்தள்ளிவிட முடியாது என்பது உண்மையிலும் உண்மை. ஆனால் அதை முழுமையாக ஏற்பதிலுள்ள சிக்கல்களையும் நாம் எதிர்கொள்ள வேண்டும். இதற்கொரு தீர்வு காண எளிய வழி, அவர்கள் எங்கெங்கெல்லாம் தங்களை அரசியல்வாதி களாகச் சுருக்கிக் கொண்டார்கள் என்பதை ஆராய்வதுதான்.

பழந்தமிழ்ப் படைப்பாக்கங்களில் ஏறக்குறைய எல்லாமே தமிழர்களால் எழுதப்பட்டவை – அதாவது பார்ப்பனர்களுக்காகக் காத்திருந்து பெறப்பட்டவையல்ல – என்பது தமிழுக்குக் கிடைத்த பேறு. தொகை நூல்களில் பல பாடல்கள் பார்ப்பனர்களால் எழுதப் பட்டவையாக அறியப்படுகின்றன. இந்தக் கண்டடைதலில் கறார் தன்மை இருக்க முடியாது. காரணம் புலவர்களின் பெயர்த் தன்மைகளைக் கொண்டும் வெகுசில பாடல்களின் உள்ளுறை பொருள்களைக் கொண்டுமே அவை அவ்வாறு பட்டியலிடப் படுகின்றன. பார்ப்பனர்கள் எழுதிய பல பாடல்கள் தமிழர்கள் முன்னெடுத்த மைய நீரோட்டப் போக்கிலேயே படிமானப் பட்டிருப்பதால் ஆசிரியன் பற்றிய நம் முடிவுகள் வெறும் யூக அடிப்படையிலேயே அமைந்திருக்க வாய்ப்புகளுண்டு. தமிழ்ச் சமூகத்தில்

பார்ப்பன ஊடாட்டம் தொடங்கி 3000 ஆண்டுகளைக் கடந்திருக்கலாம். ஆனால், அதற்கு முன்பாகவே பார்ப்பனர்களால் மொழிப்புலத்தையும் படைப்புலகத்தையும் வென்றெடுக்க முடியாதபடி தமிழ் உலகம் தன் செழுமையின் எல்லைகளை விரிவு செய்திருந்தது. ஒரு நீரோட்டம் புதிதாக வெட்டித் திசை திருப்பிவிட முடியாத அளவுக்கு ஆழக் காலூன்றிப் பாயும் ஆற்றோட்டமாகத் தமிழ்ப் புலமை உலகம் தன் வாழ்வியல் பதிவுகளை நிறுவிக்கொண்டு விட்டது. சங்கத் தொகை நூல்களின் பாடல்கள் ஒரே காலகட்டத்தில் எழுதப்பட்டவையல்ல என்பதை மறந்துவிடக் கூடாது. 500 முதல் 1000 ஆண்டுகால இடைவெளியில் எழுதப்பட்டவைதான் பின்னர் ஒன்றாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அதாவது, பார்ப்பன வருகையின் போதே தமிழ் இலக்கியத் தோட்டம் பூத்துச் செழித்திருந்தது என்பதே உண்மை. ஆகவே, பிற திராவிட மொழிப்புலங்களைப் பார்ப்பனர்கள் மிக எளிதாகக் கைப்பற்றிக்கொண்டதைப்போல் தமிழில் முடியாது போயிற்று. அதற்காக அவர்கள் ஒன்றும் சும்மா இருந்துவிடவில்லை. தங்கள் கலாச்சார வலையை எல்லாச் சுருக்கு முடிச்சுகளோடும் பரவலாக விரித்து வைப்பதிலும், உரையாடல் மூலம் பொதுவாழ்வில் பல உடைப்புகளை நிகழ்த்துவதிலும், தங்கள் மேலாதிக்கத்தை மெல்ல மெல்ல ஆனால் உறுதியோடு வென்றெடுப்பதிலும் அவர்கள் படிப்படியாகக் காலூன்றவே செய்தனர்.

இதிலுள்ள ஒரே குறைபாடு, அவர்களது வெற்றியானது எந்தக் காலத்திலும் ஒட்டுமொத்தமாகக் கேள்விக்கப்பாற்பட்டதாய் இருக்க வில்லை என்பதுதான். எத்தனைமுறை உழுதுப்போட்டு அருகம்புல்லைக் களைந்தெடுத்தாலும் அதன் ஏதோ ஒரு கணு எங்கோ மண்ணுக்குள் தப்பி நின்று முளைத்துவிடுவதில்லையா? பார்ப்பன எதிர்ப்பும் அவ்வாறே ஒற்றையாய், பலவாய், இயக்கமாய், சிதறலாய், முணுமுணுப்பாய், கூக்குரலாய் கேட்டுக்கொண்டே இருக்கிறது. ஆனால் பார்ப்பன முயற்சி அதனினும் தீவிரமாய், வஞ்சகமாய், நைச்சியமாய் தொடர்ந்துகொண்டே இருக்கிறது. அவர்கள் சந்தித்த எதிர்ப்புகள் பிறருக்கு நேர்ந்திருக்கு மெனில் அவர்களைப் புதைத்த இடத்தில் புல் முளைத்திருக்கும். ஆனால், பார்ப்பனர்கள் காற்றுப் புகமுடியாத இடத்திலேயும் கலக உணர்வாய்ப் புகுந்து, பறவை எச்சத்தில் விழுந்து பாறையைப் பிளக்கும் விதையைப்போல முளைத்தெழுகிறவர்கள். எதிர்ப்புகள் மூர்க்கம் பெறும்போது பின்வாங்கவும் அடங்கியிருக்கவும் கற்றவர்கள். எதிர்ப்பவர்கள் அசரும்போது புதுவியூகத்தோடும் புதுவேகத்தோடும் தாக்குதல் தொடுத்துத் தங்களை நிலைநிறுத்திக்கொள்ளக் கூடியவர்கள். ஒரு 350 ஆண்டுகால களப்பிரர் ஆட்சியும், தொடர்ந்து நிகழ்ந்த ஜைன, பௌத்தத் தாக்கங்களும் தமிழ்ச் சமூகத்தைப் பார்ப்பனத் தாக்கங்களின் கோரப் பிடிக்குள் வீழ்ந்துவிடாமல் காக்கப் போராடிக் கொண்டிருந்தபோதுதான் பக்தி இயக்கம் தலைதூக்குகிறது. பார்ப்பனனும் வெள்ளாளனும் கூட்டுச் சேர்ந்த இயக்கம் அது. இது நடந்தது எட்டாம் நூற்றாண்டில்.

இருபதாம் நூற்றாண்டில் இதே வரலாறு திருப்பி எழுதப்படுகிறது ராஜகோபாலாச்சாரி – அண்ணாதுரை கூட்டுச் சேர்க்கையில். அந்தக் கூட்டு வென்றதும் ஆச்சாரி சொன்னார்: “இராமன் சொன்னான் – ‘சீதா, நான் உன்னை மீட்பதற்காகப் போரிடவில்லை; இராவணனை அவமானப்படுத்தவே போரிட்டேன்,’ என்று. அதுபோல, நான் தி.மு.க.வை ஆட்சியில் அமர்த்தப் பாடுபடவில்லை; காங்கிரசை ஒழித்து அவமானப்படுத்தவே பாடுபட்டேன். அதில் ஜெயித்தேன்.”

ஆக, அப்போது காமராசர் தோற்றதும் அண்ணாதுரை ஜெயித்ததாகக் கருதிக்கொண்டதும் பார்ப்பன இருப்பின் கொண்டாட்டத்தைத்தான். இதே கதைதான் பக்தி இயக்கத்திலும் நிகழ்ந்தேறியது.

ஜைனமும் பௌத்தமும் ‘கடின உழைப்புக்கு மாற்று ஏதுமில்லை’ என்னும் உண்மையைப் போதித்த மதங்கள். வாழும்போது துன்பப்பட்டாலும் செத்த பிறகு சொர்க்கம் புகலாம் என்று கவர்ச்சி காட்டாத மதங்கள். உன் சுமையைக் கடவுள் கைமாற்றிக் கொள்வார் என்று பொய்யைப் புனையத் தெரியாதவை. இவற்றுக்கு நேர் எதிரானதுதான் பக்தி இயக்கம். ‘இந்தச் சீட்டை வாங்கு. நீதான் இலட்சாதிபதி’ என்று விற்பவன் சொன்னால் அதையே நல்வாக்காக நம்பி மந்தைமந்தையாக மக்கள் பரிசுச் சீட்டு வாங்கவில்லையா? பக்தி இயக்கத்துக்கும் அதுதான் சூத்திரம்.

*‘பக்தி செய், கடவுள் உன் பக்கம். கடவுளைத் துதி, சொர்க்கம் நிச்சயம்’ என்று மோசடித்தனமான எளிய சூத்திரத்தை பக்தி இயக்கம் மக்களிடம் நீட்டியது. அவ்வளவுதான். சரசரவென, சடசடவெனத் தமிழ்ச் சமூகம் சூறைக்காற்றில் சிக்கிய வெற்றிப் பதாகைகள் போல நாரும் தோலுமாய்க் கிழிசலுற்று, அந்தக் கிழிசலையே புதிய ஒப்பனையாக்கிக்கொண்டு கேள்விகளற்றுக் கொண்டாடிக் களித்தது.*

ஏற்கனவே பார்ப்பன அலையேற்றத்தின் பதிவிறக்கமாய்த் தொல்காப்பியம் தொட்டுக்காட்டிய ஊற்றுக் கண்ணிலிருந்து அதன் தொடர்ச்சியாக வடமொழிச் சாரத்தை வடித்துவைத்த இலக்கண நூல்கள் பெருவாரியாக அரங்கேற்றப்பட்டன.

இத்தனைக்கும் பிறகு சங்க காலத்துக்கு முன்னும் பின்னுமான தமிழ்வாழ்வும் அறமும் இலக்கியச் சுவடிகளில் அழுக்குப்படாத பூத்திரட்சியாகவே தனித்துத் தெரிந்தன. அவற்றை அவ்வாறு விட்டு வைப்பது பார்ப்பன வரலாற்றுப் புனைவைத் தகர்க்கும் சான்றாக நின்றது. அங்கேதான் இடைச்செருகல் படைப்பாளிகளும் உரையாசிரியர்களும் தோன்றுகிறார்கள். அவர்கள் அனைவருமே பார்ப்பனர்கள், அல்லது பார்ப்பன அறங்களுக்குத் தங்களைத் தத்தம் செய்தவர்கள் என்பது சொல்லாமலே விளங்கிக்கொள்ள வேண்டிய ஒன்று. அவர்களால் பழந்தமிழ் நூல்கள் யாவும் பார்ப்பனச் சார்புப் பிரதிகளாக உருமாற்றப் படுகின்றன. போதாக்குறைக்கு நூற்றுக்கணக்கான ஜைன–பௌத்த இலக்கியச் சுவடிகள் நீரிலும் நெருப்பிலும் போட்டு அழிக்கப்பட்டன. இந்த அழி வேலையில் பார்ப்பனர்களுக்கு இணையாக அல்லது அதிகமாகவே பங்காற்றிய ‘பெருமை’ சைவர்களையும் சைவ மடங்களையும் சாரும். ஆக, எஞ்சிய பிரதிகள் யாவும் வலிந்து புகுத்திய இடைச் செருகல்களோடோ, உரை விளக்கங்களோடோ அழுக்கேற்றப்பட்டே உயிர்வாழ அனுமதிக்கப்பட்டிருக்கின்றன. தமிழுக்கும் தமிழ் வாழ்வுக்கும் வடமொழியையும் பார்ப்பனக் கலாச்சாரத்தையும் மூலப் பொருள்களாக்கும் வலுக்கட்டாய முயற்சி இது.

இங்கே நாம் ஒன்றைச் சொல்லியாக வேண்டும். ஜைன–பௌத்தப் பிரதிகள் என்றால் அவை ஏதோ அந்நியர்களால் எழுதப்பட்டவை போன்ற ஒரு பாமர எண்ணம் தன்னிச்சையாகப் பலருக்கும் தோன்றுகிறது. இன்னும் சொல்லப்போனால் சைவம் தவிர (இதில் வைணவம்கூட ஒரு எல்லைக்குள் கட்டுப்படுத்தப்பட்டதுதான்.) மற்ற அனைத்து மதங்களும் தமிழுக்கு அந்நியம்போல் ஒரு தோற்றம் கட்டமைக்கப் பட்டுள்ளது. இது சைவர்களால் வெற்றிகரமாகக் கட்டமைக்கப்பட்ட கன்னங்கரிய பொய்த் தோற்றம். இதற்குக் காரணம் ஒருவேளை, தமிழுக்கும் தமிழ் வாழ்வுக்கும் மூல மதங்களாயிருந்து பணியாற்றிய ஜைனத்தையும் பௌத்தத் தையும் முற்றாகத் துடைத்து அழித்ததில் பெரும் கொலைப்பழியைத் தன்னகங்காரத்தோடு ஏற்றுக்கொண்டவர்கள் சைவர்கள் என்பதாயிருக்கலாம். எப்படியிருப்பினும் தமிழைப் பொறுத்தவரை சைவத்தை விடவும் வைணவம் ஒரு கணு சாரம் கூடியதென்றே சொல்லலாம். கன்னலும் தேனும் கலந்துருகி வாயொழுகும் இன்னறுங்கனிகளென்ன இனித்த செழும் தமிழ்ச் சொற்களை வைணவப் பாடல்களிலும் பெருமாள் சேவையிலும்போல வேறெங்கும் கண்டதில்லை. தொல்காப்பியத்தையே சான்றாதாரமாகக் கொண்டாலும் மாயோனும் சேயோனுமே (திருமாலும் முருகனும்) தமிழின் பழம்பெருந் தெய்வங்கள். சைவம் தமிழ்நாட்டில் மிகப் பிற்காலத்தில்தான் உரம் பெற்றது என்பதாகக் கால்டுவெல் கட்டுரை எழுதியதும் சைவர்களுக்கு மிகுந்த மன உளைச்சலைத் தந்திருக்கிறது. (அந்தக் கட்டுரையையும் சேர்த்துத்தான் நீக்கிவிட்டார்கள்.) உண்மையில் தமிழில் எழுதிய பிற மதங்களைச் சேர்ந்த மிகப் பெரும்பாலோரும் தமிழ் மண்ணில் பிறந்த தமிழர்களே. பௌத்தம் தழுவிய அத்தகைய தமிழ்ப் பெருமக்களே சீனம், ஜப்பான், தென்கிழக்காசிய நாடுகள் எங்கும் சென்று பௌத்தத்தோடு தமிழ்க் கலைகளையும் பரப்பிய பேரறிவாளர்கள். தமிழில் முதல் சிறுகதைகளை எழுதியவர்கள் மலேயாவையும் இலங்கையையும் சேர்ந்த இஸ்லாமியத் தமிழர்கள்தாம் என்பது போன்ற உண்மைகளை நாம் இனியாவது தேடித் தொகுத்து மனத்தடைகளற்ற தமிழர்களாய் வளரவேண்டிய

தேவையை உணரும் நேரம் இது.

பழந்தமிழ் நூல்களுக்குப் பார்ப்பனர்கள் எவ்வாறு உரை எழுதினார்கள் என்பதற்குத் தொல்காப்பியத்திலிருந்தே ஒரு சான்று:

*"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்*
*ஐயர் யாத்தனர் கரணம் என்ப"*

என்பது தொல்காப்பியத்தில் வரும் பாடல். திருமணம் பற்றிச் சொல்லும் பாடல். களவொழுக்கத்தில் பரிமாறிக்கொள்ளப்படும் உறுதிமொழிகள் காப்பாற்றப்படாமல் பொய்யும் ஏமாற்றும் மேலெழுந்தபோது மூத்தோர் கற்பொழுக்கத்தை மேற்கொள்வதற்கான கரணத்தை உண்டாக்கினர் என்பது அது சொல்லும் செய்தி. கரணம் என்னும் வடசொல்லுக்கு சடங்கு என்பது பொருள். அதை நாம் இன்றைய வழமைப்படி திருமணச் சடங்கு என்று நீட்டித்துக்கொள்கிறோம். களவொழுக்கம் நசிவுக்குள்ளாகி வந்த நிலையில் கற்பொழுக்கம் மேற்கொள்வதை ஊர்கூடி உறுதி செய்ய வேண்டிய கட்டத்தை எய்திய காலமாய் அதைப் புரிந்து கொள்ளலாம். ஏறக்குறைய சிலப்பதிகாரத்திற்கு முற்பட்ட காலகட்டமாய் இருக்க வேண்டும். இப்பாடலில் வரும் 'என்ப' என்னும் சொல்லுக்கு 'என்று கூறுவர்' என்பதாகப் பொருள். அதற்கடுத்த பாடல்,

*"கரணத்தின் அமைந்து முடிந்த காலை*
*நெஞ்சுதனை அவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணும்..."*

என்று நீள்கிறது. அதாவது, "மணம் முடிந்த கையோடு நெஞ்சம் மலர்ந்து புணர்ந்தனர்,'' என்று நேர்பட விவரிக்கப்படுகிறது. இந்த இருபாடல்களுக்கிடையே உரையாசிரியர் நச்சினார்க்கினியர் (எவ்வளவு அழகான பெயர்! விரும்பி அணுகுகிறவர்களுக்கு இனியராம்.) மேலும் சில விவரங்களை நுழைக்கிறார். இது வரம்பு மீறிய செயல். இதை முன்பாடலில் உள்ள 'என்ப' என்னும் சொல்லை வைத்துக்கொண்டு செய்கிறார். அவர் புகுத்தும் விவரம் மிகவும் வினோதமானது மட்டுமல்ல, அதிர்ச்சியும் அருவருப்பும் தரக்கூடியது. அதாவது திருமணம் முடிந்து மூன்று இரவுகள் விட்டு நான்காம் இரவுதான் தலைவன் தலைவியைப் புணர்கிறான் என்கிறார். மூன்று இரவுகள் ஏன் வீணடிக்கப்படுகின்றன? தலைவனுக்கு ஏதேனும் நீர்சுளுக்கா என்ன? அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. சந்திரன், கந்தர்வர், அக்னி என்னும் மூன்று கடவுளர்களும் ஆளுக்கு ஓர் இரவாக அவளைப் புணரவிட்டு (மானசீகமாகத்தான்) அதன் பின் நாலாம் இரவு தலைவன் புணர்கிறானாம்!

இதுதான் பார்ப்பனர்கள் 'வேலை மெனக்கிட்டு' உரையெழுதிய அழகு. இப்படியோர் விளக்கம் தர அவர் துணிந்ததற்குக் காரணம் ஒருவகையில் தொல்காப்பியர்தான். களவொழுக்கத்தை விளக்க வந்த தொல்காப்பியர்,

*"மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்*
*துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே"*

என்று பார்ப்பனரின் எண்வகை மணமுறையைச் சுட்டுகிறார். அந்த எண்வகை மன்றல் பற்றி நச்சினார்க்கினியர்தான் நன்றாக விளக்குவார் எனில், அந்த மூன்று இரவுகள் விவகாரத்தையும் தமிழ் வாழ்வில் ஏற்றிச் சொல்ல அவருக்கு வாய்க்கும்தானே?

தொல்காப்பியரும் இலேசுப்பட்டவரில்லை. ஆணும் பெண்ணும் காதல் புரிய பத்துப் பொருத்தங்கள் இருந்தால் நல்லது என்கிறார். இருப்பது நல்லதுதான். ஆனால் இந்தப் 'பொருத்தம் பார்த்தல்' என்பது ஒரு வழக்கமாக, வழக்காக மாறுவது அல்லது மாற்றுவது தமிழின் களவியல் – கற்பியலுக்கு முற்றுப்புள்ளி வைக்கிறது என்பதையும், தொல்காப்பியரின் ஐந்திர அறிவு அதற்கு இழையெடுத்துக் கொடுக்கிறது என்பதையும் நாம் புரிந்துகொள்ள வேண்டும். " யாயும் ஞாயும் யாரா கியரோ, எந்தையும் நுந்தையும் எம்முறை கேளிர்... அன்புடை நெஞ்சம் தாம்கலந்தனவே,'' என்னும் பாடல் காட்டும் தமிழ் வாழ்வுக்குத் தொல்காப்பியர் எந்த அளவு அறம் சேர்த்தார் என்னும் கேள்வியும் கூடவே எழ வேண்டும்.

ஒன்று செய்தால் நன்று. வடமொழி இலக்கணத்தையும் தமிழ் வாழ்வையும் வகைபிரித்துக் கற்றுணர்ந்த, தமிழ்ப் பார்வையுள்ள தொல்காப்பியப் புலமையாளர் ஒருவர் 'தொல்காப்பியம் காட்டும் ஐந்திரத்தின் அழகுகளும் அத்துமீறல்களும்' என்றொரு ஆய்வை மேற்கொள்ளலாம். ஐந்திரம் கிடைக்காவிட்டால் என்ன? பாணினி அதிலிருந்து பெரிதாக வேறுபட்டிருக்கமாட்டான். ஏனெனில், தமிழர்களின் நாகரிகப் பற்றாக்குறையை ஈடுகட்ட தொல்காப்பியர் பிறந்தது போல் வடமொழிக்கு வாய்ப்பில்லை. காரணம், அதுதான் கனவுகளையும் கற்பிதங்களையும் தவிர எதார்த்தத்தை எப்போதும் பேசியதில்லையே. மக்களும் மொழியும் ஒன்றுக்குள் ஒன்றாய் வாழும் போதுதான் எதார்த்தம் பற்றிய பேச்செழும். புனிதப்படுத்தப்பட்டு பெட்டிக்குள் வைத்துப் பூட்டப்பட்ட மொழிக்கு மனவுணர்வே ஒரு கனவுதானல்லவா. புனைவுகளை மாற்றிமாற்றி எழுதத் தேவையில்லை. வேண்டுமானால் புதுப்புனைவுகளை அவர்கள் பெருக்கிக்கொள்ளலாம்.

அண்மையில் 'வாழும் கவிஞர்கள்' பற்றிய ஒய்.எம்.சி.ஏ. பட்டிமன்றத் தொடர் சொற்பொழிவில் எனது 'கவிதை மலர்கள்' தொகுப்பைப் பற்றி வியந்து பேசி நெகிழ்ந்து பாராட்டிய பேராசிரியர் மறைமலை அவர்கள் தமது தந்தையார் பேராசிரியர் சி. இலக்குவனார் அவர்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த தொல்காப்பியப் பிரதியொன்றை எனக்கு அன்பளிப்பாக வழங்கினார். "நான் இதை ஏற்கனவே படித்திருக்கிறேன்," என்று சொல்லி வாங்கிக்கொண்டேன். உண்மையில் அந்த நூலினை இலக்குவனாரின் வாழ்நாள் சாதனையாகக் கொள்ளலாம். அது வெறும் தொல்காப்பிய மொழிபெயர்ப்பு மட்டுமல்ல. அரிதின் முயன்று கண்டடைந்த நுட்பங்கள் நிறைந்த ஆய்வுத்திரட்டையும் உள்ளடக்கிய நூல்.

தொல்காப்பியத்தை அவர் நுணுகி நுணுகிக் கற்றறிந்தவர் என்பதை நூலை மேலோட்டமாகப் புரட்டும்போதே புரிந்துகொள்ளலாம். நீண்ட காலம் அவர் தொல்காப்பியத்தை மாணவர்களுக்குப் பயிற்றுவித்திருப்பார் என்பதை பிசிறில்லாத அவரது ஒருகோட்டுத் தன்மையிலான மொழி யாடல் மூலமும் உறுதி செய்யலாம். ஆயினும் அவர் தொல்காப்பியரை இவ்வளவு தீவிரமாக நேசித்திருக்க வேண்டாமோ என்று தோன்றுகிறது. விழிகளில் படரும் வியன்நீர்ப்படலம் ஆய்வாளனின் சுழன்று துருவும் பார்வையை மட்டுப்படுத்திவிடுகிறது. அறிவியல் பார்வை அந்த மட்டுப் படுத்தப்பட்ட எல்லையைத் தாண்ட முயலும்போது அரசியல்சார் பார்வையாகத் தன்னை அணி செய்துகொள்கிறது.

அவருடன் நான் பெரிதும் உடன்படுவது ஒரு குறுக்கு வெட்டுப் பார்வையில் முரண்படுவதன் மூலமாகத்தான் என்று படுகிறது. அவருடைய ஆய்வுகள் பல புள்ளிகளில் எனக்குப் புதிய வெளிச்சங்களைப் பாய்ச்சியமைகூட இந்த என் முரண்படும் உடன்பாட்டுக்குக் காரணமாயிருந்திருக்கும்.

இலக்குவனார் தொல்காப்பியரைப் பார்ப்பனத் தாக்கங்களுக்கு அப்பாற்பட்டவராகக் கட்டமைக்கிறார். அவை சார்ந்த குற்றங் குறைகளுக்காட்படாத செழுந்தமிழ்ச் சிற்பத் திரட்சியாக அவரை அண்ணாந்து பார்க்கிறார். இலக்குவனாரின் அகன்றறியாத் தமிழ்ப் பற்றுக்கு இதை ஓர் அரிய உரைகல்லாகக் கொள்வதே பொருத்தம். அன்றைய திராவிட அரசியற் புலமையாளர்களுக்கு இலக்குவனாரின் ஆக்கம் எத்தனை பெரிய கிளர்ச்சியை அளித்தது என்பதற்கு நூலுக்கு அண்ணாதுரை எழுதிய அணிந்துரையின் முதல் வாக்கியமே சான்று: "Stupendous is the word that arises spontaneously as one goes through this work an achievement worthy of the erudite scholar, Dr.Ilakkuvanar."

நாம் இந்த அரசியல் எழுச்சியுரைகளுக்கப்பால் சென்று சில அடிப்படைகளை ஆய்வோம்.

பார்ப்பார், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நாற்பால் வேற்றுமையை அசல் தமிழ்ப் பகுப்புமுறையாக அடித்துச் சொல்லும் புலமைக் குழுவைச் சேர்ந்தவர்தாம் இலக்குவனார் அவர்கள். அதைத் தாண்டியும் இரண்டு மேல் எல்லைகளைத் தொட்டுப் பேசுகிறார். அதில் ஒன்று, தொல்காப்பியம் பார்ப்பன அம்சங்களுக்கு முற்றும் முகங் கொடுக்காதது, அப்பாற்பட்டது என்பது. மற்றொன்று, 'அந்தணர், பார்ப்பார், உயர்ந்தோர், மேலோர்' போன்ற ஏதொரு சொல்லும் ஆரியப் பார்ப்பனரைக் குறிப்பதாகாது என்பது. மீள் எல்லையைத் தாண்டிவிட்ட மேல் எல்லைகள் இவை. "மாமுது பார்ப்பான் மறைவழி காட்ட..." என்பது சிலப்பதிகார வரி. பார்ப்பனர் வாழுமிடம் 'பார்ப்பனர் சேரி' என்னும் சுட்டலும் உண்டு. இவற்றில் ஆரியப் பார்ப்பனர்களே சுட்டப்படுகின்றனர். இது தொல்காப்பியர் காலத்துக்குப் பின் வந்த சுட்டல்கள் என்று சொல்லிவிடக்கூடும்.

*இந்துமதத்தில் வேதங்களும் ஆகமங்களும் ஒன்றல்ல. கிறித்தவத்தில் அவை வேறல்ல என்பதாகத் தங்கள் விவிலியத்தை 'வேதாகமம்' என்று மொழிபெயர்த்துக்கொண்டார்கள். சில கிறுக்குப் பாதிரிகள், சமஸ்கிருதம், சந்தனம், கட்டுக்குடுமி, பூணூலோடு பார்ப்பன வேடமிட்டே கிறித்தவம் பரப்ப முயன்றதும் உண்டு. இந்தியாவில் ஏதொன்றும் பார்ப்பனத் தாக்கத்தைப் புறந்தள்ளி நிலைத்துவிட முடியாது என்னும் புரிதலின் வெளிப்பாடு இது.*

எனில், இலக்குவனார் கூற்றை நாம் ஏற்றுக்கொண்டே அப்போது நிலவி வந்த எதார்த்தத்தையும் சற்று நிதானமாகப் பரிசீலிப்போம்.

தமிழ்ச் சமூகத்தில் பார்ப்பனர்களும் பறையர்களும் ஏதோ ஒரு விதத்தில் காலங்காலமாக இணைத்துப் பேசப்பட்டு வந்துள்ளனர். பார்ப்பனர்களை மேல் எல்லையாகவும் பறையர்களைக் கீழ் எல்லையாகவும் வரையறை செய்து கட்டமைப்புச் செய்யப்பட்ட காலத்திலிருந்து இந்தப் பேச்சு கைகூடி வந்திருக்கலாம். இதில் தோற்றப்படும் காலத்திலிருந்தே தங்களை மேலானவர்களாக அடையாளப்படுத்திக்கொள்வதை வாழ்வியல் கோட்பாடாகக் கொண்டவர்கள் பார்ப்பனர்கள். வடமொழியில் 'பிராமணன்' என்பது (இந்தப் பெயரே பிரஹ்மன் என்பதன் தமிழ் வடிவமைதிதான்.) படைப்புக் கடவுளாகப் புனையப்பட்ட பிரம்மனின் அம்சமாக மீள்புனைவு செய்யப்பட்ட பெயர்தான். தமிழில் அப்படி அழைப்பதை அல்லது குறிப்பதைத் தொல்காப்பியமே ஊக்குவிக்கவில்லை. ஆகவே, அதனை ஈடுசெய்யும் முகமாகத் தமிழில் 'உயர்வான', 'மேன்மையான' என்னும் பொருளில் வரும் எல்லாப் பண்புப் பெயர் களையும் தங்களைக் குறிப்பதற்கெனவே அவர்கள் உரிமைப்படுத்திக் கொள்கிறார்கள். அடுத்த கட்டமாகத் தங்களைக் குறித்தே அப்பெயர்கள் படைக்கப்பட்டன என்று காப்புரிமையும் பெற்று விடுகிறார்கள். 'ஐயர்' என்றால் மூத்தோர், மதிப்புக்குரியோர் என்று பொருள். நல்ல தமிழ்ச் சொல். அதைத் தங்கள் சாதிப் பெயராகவே மாற்றிக்கொண்டு விட்டார்கள். (ஐயர்களுக்கு இளைத்தவர்களா நாங்கள் என்று அதனினும் தூக்கலான பெயர்த்தோற்றம் கொண்டவர்கள்தாம் ஐயங்கார்கள்.) கிறித்தவப் பாதிரிமார்கள் 'ஐயர்' என்று அழைக்கப்பட்டதும் பார்ப்பனர் களுக்கு இணையாகச் சிறப்பிக்கப்படுவதற்கான இந்தப் பொருளில்தான். இந்துமதத்தில் வேதங்களும் ஆகமங்களும் ஒன்றல்ல. கிறித்தவத்தில் அவை வேறல்ல என்பதாகத் தங்கள் விவிலியத்தை 'வேதாகமம்' என்று மொழிபெயர்த்துக்கொண்டார்கள். சில கிறுக்குப் பாதிரிகள், சமஸ்கிருதம், சந்தனம், கட்டுக்குடுமி, பூணூலோடு பார்ப்பன வேடமிட்டே கிறித்தவம் பரப்ப முயன்றதும் உண்டு. இந்தியாவில் ஏதொன்றும் பார்ப்பனத் தாக்கத்தைப் புறந்தள்ளி நிலைத்துவிட முடியாது என்னும் புரிதலின் வெளிப்பாடு இது.

பார்ப்பனர்களின் மேல்நிலையாக்க முயற்சி இத்தோடு முற்றுப்பெற்று விடவில்லை. அதற்கு இன்னொரு பரிமாணமும் இருந்தது. தொழில் முறையில் யாருக்குப் பங்காளிகளானார்களோ அவர்களை மீண்டெழ முடியாமல் கீழ்மைப்படுத்தும் முயற்சியாகவும் அது ஆழப்பட்டது.

பார்ப்பார் என்பது தமிழர்கள் அவர்களுக்கிட்ட பெயர். பார்ப்பனச் சேரி என்பது அவர்கள் சேர்ந்து வாழுமிடம். இது போலவே பறையர்கள் சேர்ந்து வாழும் இடம் பறைச்சேரியாகத் திகழ்ந்திருக்கிறது. தமிழ் இலக்கியத்தில் பல சேரிகள் குறிக்கப்பட்டிருந்தாலும் இவ்விரு சேரிகளுமே ஒத்திசைவாகச் சிறப்புக் கவனத்தைப் பெற்றவை. ஏனெனில் பார்ப்பனர்கள் முதன்முதலில் பறையர்களின் சடங்கு முறைப்பணிகளைப் பகிர்ந்து கொண்டதன் மூலமாகத்தான் தமிழ் வாழ்வின் ஓர் அங்கமாக மாறுகின்றனர். தொழில் முறையில் இவ்வாறாகத்தான் 'பார்ப்பானுக்கு மூத்த பறையன்' என்ற சொல்வழக்கு தோன்றும்படியாக இருவரும் பங்காளிச் சாதிகளாகின்றனர். தங்களை ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவர்களாக உயர்த்திக் காட்டிக்கொள்வதையே வாழ்தலின் ஒற்றை வேலைத் திட்டமாகக் கொண்ட பார்ப்பனர்கள் இந்த நிகர்நிலையை ஏற்பார்களா? வெகு நுட்பமாக இந்தச் சிக்கலிலிருந்து தங்களை மீட்டேற்றிக் கொள்கின்றனர்.

மனிதன் சடங்குகளால் தன்னை அலங்கரித்துக் கொள்கிறவன்; உயிரும் உடலும் சேர்ந்த கூட்டுப்பொருள். அவனது மரணத்தில் அவை இரண்டும் ஒன்றையொன்று பிரிகின்றன. இதில் உயிரை (சொர்க்கத்தில்) அடக்கம் செய்யும் பணியைப் பார்ப்பனர்கள் எடுத்துக் கொண்டு, உடலை (மண்ணில்) அடக்கம் செய்யும் பணியைப் பறையர்களுக்குத் தள்ளிவிட்டார்கள். அடுத்த கட்டமாக, பிணத்தை அடக்கம் செய்யும் பணியை இழி தொழிலாக்கி அதைச் செய்யும் பறையர்களை இழிந்தவர்களாகக் கட்டம் கட்டும் சமூகக் கருத்தியல்வாதிகளாகத் தங்களை உயர்த்திக்கொண்டனர். 'பறையன்' என்றால் துப்புரவற்ற பணியைச் செய்கிறவன் என்பதையும் கடந்து மனித குலத்திலேயே ஆகக் கீழானவன், கீழ்மையின் ஒட்டுமொத்த சின்னம் என்பதாகத் தாழ்த்திவிட்டனர். இப்படியாகப் பார்ப்பனர்கள் இரண்டு மடங்கு உயரத்தை எட்டிப் பிடித்துவிட்டனர் – ஒன்று, தாங்களே கட்டமைத்த பீடத்தில் ஏறிக்கொண்டும் மற்றொன்று தரைக்கும் கீழாகப் பாதாளம் வெட்டி அங்கே பறையர்களை இறக்கி வைத்தும். உண்மையில் அவர்களின் உயரத்தை அளக்கும் அடிப்படை அலகாகப் பறையர்களே இருக்கிறார்கள் என்பது தமிழினம் சார்ந்த மறுகட்டமைப்பு. அந்தக் கோபம்தானோ என்னவோ பறையர்கள் மேலேறிவருவதில் இன்னமும் மூர்க்கம் காட்டவில்லை. ஏறிவந்து இந்தப் பார்ப்பனர்களோடு சமமாக நிற்கவா என்னும் அருவருப்போ என்னவோ. இன்னமும் தொலைதூரச் சிற்றூர்களில் பறைத்தெருவில் பார்ப்பான் நுழைந்து விட்டால், தெருவை சாணி தெளித்துப் பெருக்கித் தீட்டு கழிக்கும் பழக்கம் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது. பறையர்களோடு 'சேரி' என்னும் சொல்லும் சிறுமைப்பட்டுவிட்டதாகக் கருதப்பட்டதால் பார்ப்பனச் சேரி என்னும் வழக்கே முற்றாகக் கைவிடப்பட்டுவிட்டது. அவர்கள் தங்கள் இருப்பிடத்தை 'அக்ரஹாரம்' என்று பெயர்மாற்றம் செய்துகொண்டு விட்டனர்.(ஆயினும் சேரி என்னும் அந்தப் பொருள் மிகுந்த தமிழ்ச்சொல் அவ்வளவு எளிதாகப் பிற துறைகளில் புறக்கணிக்கப்படவில்லை என்பது ஆறுதலான அம்சம்.) தமிழ் மண்ணில் பெருங்கோயில் வழிபாடு தோன்றியபோது கோயிலைச் சுற்றியும் அருகிலேயும் இந்த அக்ரஹாரங்கள் இடம் பெயர்ந்தன. பறைச்சேரியோ ஊரின் (பெரும்பாலும்) தென் கிழக்குத் திசையில் ஊன்றப்பட்டுவிட்டது. தமிழ் நாட்டில் தெற்குத் திசையும் கிழக்குத் திசையும் தாழ்நிலப் பகுதிகள். தென்கிழக்குத் திசை தாழ்மைகளின் சங்கமம். சாதிக் குடியமர்த்தலில் நிலவும் இத்தகைய நுட்பங்கள் நினைக்க நினைக்க மலைப்பையும் அருவருப்பையும் தரக்கூடியவை.

நாம் ஒன்றை நேர்மையாகப் பதிவு செய்ய வேண்டும். அன்றைய சமகாலத் தேவையை நிறைவு செய்துகொள்ளும் பொருட்டு தமிழும் சமஸ்கிருதமும் நீரும் நீரும் கலந்தாற்போல் ஒன்றையொன்று இட்டு நிரப்பிக்கொண்டன. சமகாலத் தேவை என்பது மிகுதியும் பார்ப்பன மேலாதிக்கத்தின் விரிவாக்கம்தான். அதன் ஒரு கூறாகவே பார்ப்பனர்கள் தங்களைச் சுட்டுவனவாக அந்தணர், மறையோர், மேலோர், நூலோர், உயர்ந்தோர் போலும் பெயர்களையெல்லாம் (ஆன்றோர், சான்றோர், அறிவர், அறவோர் என்னும் பெயர்கள் தவிர்க்கப்பட்டதையும் கவனத்தில் கொள்ளவேண்டும்) தங்களுடையதாக்கிக்கொண்டுவிட்டதற்கு சங்கப் பனுவல்களே சாட்சியங்களாகின்றன. தொல்காப்பியம் அவற்றுக்கெல்லாம் முற்பட்ட நூலா என்பது தெளிவுபடுத்திக்கொள்ளவேண்டிய கேள்வி. மேலும் தொல்காப்பியரின் ஐந்திர அறிவு பாயிரத்திலேயே சிறப்பிக்கப் பட்டது எதற்காக என்பதும் விளக்கப்பட வேண்டும். பார்ப்பனப் பகுப்புமுறை பிறப்பை அடிப்படையாகக் கொண்டது, தமிழ்ப் பகுப்புமுறையோ தொழிலை அடிப்படையாகக் கொண்டது என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறோம். இந்தத் தொழில் முறைப் பகுப்பினூடாகவே மேற்பிறப்பு x கீழ்ப்பிறப்பு, உயர்ந்தகுடி x தாழ்ந்தகுடி, மேல்குலம் x இழிகுலம், மேற்பால் x கீழ்ப்பால் போன்ற தமிழ்ச் சமூக ஏற்றத்தாழ்வுகளையெல்லாம் நிர்ணயித்தது தொழிலா, பண்பா, பிறப்பா என்பதை உறுதிப்படுத்த வேண்டும். இவற்றினூடாக பார்ப்பனப் பகுப்பும் தமிழ்ப் பகுப்பும் ஒன்றையொன்று நிறைவுசெய்து கொண்டனவா, அல்லது

ஒன்றையொன்று மொழிபெயர்த்துக் கொண்டனவா என்பதையும் நாம் அறுதியிட வேண்டும். தமிழில் 'அறம், பொருள், இன்பம்' என்றால் வடமொழியில் 'வீடு' என்னும் நான்காவது கூறு கூடியிருக்கிறது. தொல்காப்பியம் மொழியை 'எழுத்து, சொல், பொருள்' என்று வகைப்படுத்தினால், தொல்காப்பியத்தைத் தொடர்ந்துவந்த அடுத்தகட்டத் தமிழ் இலக்கணவாதிகள் 'அணி' என்னும் கூறை வடமொழியின் ஆதரவோடே செழிக்க வைத்துள்ளனர். இவை போன்ற பலவும் ஒன்றையொன்று இட்டு நிரப்பிக் கொள்வதாகவே ஊடாடியுள்ளன. இதில் வடமொழிக்கு எந்த இழப்பும் இல்லை. காரணம், அது எதனையும் தன்னுடையதாக்கிக்கொண்டு தன் ஆளுமையை மேல் கையாகவே நிறுவிக்கொள்கிறது. குறைந்தபட்சம் பிற மொழிச் சொற்களை எவ்விதம் ஏற்பது என்பதற்கு இலக்கண வரம்புகூட வகுத்துக்கொள்ளவில்லை. ஆனால் தமிழ் அப்படியல்ல. அது இழந்தது தன் எளிமையை, அறிவுக்கும் உழைப்புக்கும் உள்ள சமநிலையை, கடவுளையும் மதத்தையும் குறுக்கீடுகளாக்கிக் கொள்ளாத சமூக மனவெளியை, நிகழ் பற்றிய அரிதான தன்னாளுமையை. தொல்காப்பியம் இந்த இழப்புகளை பின் தேதியிட்டு நிறைவு செய்துகொள்வதற்கான அதிகாரபூர்வமான ஒப்பாவணம். இதை ஒப்புக்கொள்ளாமை என்பது ஒருவகையில் பின்னால் சேர்ந்த சமூக அழுக்குகளை வலுத்த கைகள் தங்கள் சுயமைதுனத் துக்காகத் தக்கவைத்துக்கொள்ளும் சறுக்கல்களாகவே நிலைபெற்றுப் போகும்.

இலக்குவனார் தம் நிலைப்பாட்டை உறுதிசெய்யும் ஆய்வுத் தீர்வாகத் தொல்காப்பியத்தில் விரவிக் கிடக்கும் பார்ப்பனத் தாக்கங்களையும் நலன்களையும் அப்பட்டமாக எதிரொலிக்கும் 40 பாடல்களை இடைச்செருகல் என்று கட்டம் கட்டுகிறார். உண்மையில் அவை இடைச் செருகல்களாய் இருக்க முற்றும் தகுதியுள்ள பாடல்கள். அவற்றை நீக்கிவிட்டுப் படித்தால் மனத்துக்கு இதமாயிருப்பதென்னவோ உண்மை. ஆனால் முழுமையாகத் தொல்காப்பியரை மீட்டெடுத்துவிட முடியும் என்று தோன்றவில்லை. மேலும் சில முட்கூறுகள் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால், அவற்றைத் தம் விளக்கத்தால் சரிசெய்து கொள்கிறார். அவர் கட்டம் கட்டும் பாடல்கள் இடைச்செருகல் என்பதற்கான காரணங்களையும் சொல்கிறார். ஓரிடத்தில் தொல்காப்பியர் மரங்கள், விலங்குகள் பற்றிய வழக்குச் சொற்களைக் கூறிக்கொண்டு வரும்போது குறுக்கே 'சாதிகள், தொழில்கள்' பற்றிப் பேசும் 15 பாடல்கள் வருகின்றன. அவற்றைப் பேசுவது தொல்காப்பியரின் நோக்கமெனில் 'புறத்திணையியலில்' வைத்துப் பேசியிருக்கலாமே என்கிறார். நியாயமான கேள்வி. இதுபோலும் கேள்வியில்லாமல் அவர் ஏதொன்றையும் நிர்ணயம் செய்யவில்லை என்பது முக்கியம்.

ஓரிடத்தில் வணிகரை 'வைசியர்' என்று வடமொழிப் பகுப்புப் பெயரால் குறிப்பிடும் பாடல் ஒன்று வருகிறது. (*'வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை'* – பொருள் – மரபியல்.) தமிழில் வணிகம் – வாணிகம் – வாணிபம் – வாணியம் என்றும், அதைச் செய்பவர்கள் வாணியச் செட்டியார் – வைசியக் குலம் என்றும் வெகு இயல்பாகத் திரிந்து கொள்வதையும் நாம் பார்க்கிறோம். பார்ப்பன மேலாதிக்கம் என்னும் அம்சம் குறுக்கிடாவிட்டால் இவ்வகையான மொழிகளின் நெகிழ்வும் நீட்சியும் மகிழ்ச்சிதரக்கூடிய அம்சமாகவே இருந்திருக்கும். தொல்காப்பியம் வேளாளனைச் 'சூத்திரன்' என்று அழைக்காவிட்டாலும் 'இழிந்தோர்' என சூத்திரப்பதத்தின் பொருளில் சுட்டுகிறது. இதனை இடைச்செருகல் என்று நீக்கிவிட்டால் மேலும் சில இடங்களில் வரும் 'இழிந்தோர்', 'கீழோர்' என்னும் பதங்கள் நாற்பால் பகுப்பில் கடைசி வகையினரைச் சுட்டாமல் வேறு யாரைச் சுட்டுவதாக நிலைப்படுத்துவது என்னும் கேள்வி எழுகிறது.

"பள்ளு பறை பதினெட்டு சாதிகள்..." என்று தமிழில் சாதித் தொகுப்பைக் குறிக்கும் சொல்வழக்கு ஒன்று உண்டு. தாழ்த்தப்பட்ட சாதிகள் வலுவாக அடையாளப்பட்ட பத்து– பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப் பிறகு தோன்றிய தொழில்முறை வழக்காகக்கூட இருக்கலாம். இச்சாதிகள் அனைத்தும் தாழ்த்தப்பட்டவர்களைக் குறிப்பன அல்ல. மாறாக, சமூகத்துக்கு இன்றியமையாத பதினெட்டுத் தொழில்களைச் செய்வோரின் பெயர்ப் பட்டியல். சமூக வாழ்க்கை தோன்றிய காலத்திலிருந்து, அல்லது நாகரிகம் பெற்ற காலத்திலிருந்து தொழிற்படுபவர்கள் இந்தப் பெருந்திரள் மக்கள். இவர்கள் – ஏன் நாற்பால் பகுப்பில் இடம் பெறவில்லை? இடம் பெறவில்லை எனில் அந்தப் பகுப்புமுறை எதார்த்தத்தைப் பிரதிபலிக்காத வெறும் அதிகாரத் தேவைக்கான கருத்தியல் பகுப்புதானே? சமஸ்கிருதப் பகுப்பும் இதே அளவுகோலையே பின்பற்றுகிறது. மாறாக, எதார்த்தத்துக்கு நெருக்கமான பௌத்தப் பகுப்புமுறைப் பெயர்கள் அரசர், பார்ப்பார், ககபதிகள் என்பதாகின்றன. மேலும் பார்ப்பனப் பிரிவுகளான வர்ணம், சாதிக்கு மாறாக சாதி, குலம், கம்மா, சிப்பா என்னும் பிரிவுகளின்கீழ் உயர்ந்தவை, தாழ்ந்தவை எனப் பகுக்கப்படுகின்றன. தொல்காப்பியர் 'சாதி' என்னும் சொல்லை இருமுறை பயன்படுத்துகிறார். (*1. "நீர் வாழ் சாதியுள் அறுபிறப்புரிய," 2. "நீர் வாழ் சாதியுள் நந்தும் நாகே"* – பொருள், மரபியல்.) இவ்விரு இடங்களிலும் பார்ப்பனப் பகுப்பில் உள்ள சாதியின் பொருளில் அல்லாது, பாலி மொழிக்குரிய 'கூட்டம், அணி' என்னும் பொருளிலேயே பயன்படுத்துகிறார். இவற்றை தொல்காப்பியர் அறியாமல் செய்யவில்லை. பௌத்தப் பகுப்பில் பார்ப்பார் முதன்மை பெறவில்லை என்பது முக்கியம். பார்ப்பனர்களும் பார்ப்பன அரசியலும் மலிந்து கிடந்த நிலத்தில் இந்தப் பகுப்பு. ஆனால் தமிழில் 'பார்ப்பார்' என்பதற்கு 'மேற்பார்வையிடுகிறவர்கள்', 'கண்காணிக்கிறவர்கள்', 'அறிவுப் பரம்பரையினர்' எனத் தமிழர்களாக்கிப் பொருள் கொண்டாலும் அதிகாரப் படிநிலையில் அரசர்களைவிட மேலானவர்களா அவர்கள்? எப்படி அவர்கள் முதல் இடத்தைப் பிடித்துக்கொண்டார்கள்?

ஒரு தொல்காப்பியப் பாடல் *"அந்தணாளர்க்கு அரசுவரைவின்றே"* (பொருள், மரபியல்) என்று சொல்கிறது. அதாவது 'அந்தணர்கள் அரசராவது விலக்கப்படவில்லை' என்பது பொருள். உண்மையிலேயே மிகுந்த மனச்சோர்வைக் கொடுக்கும் வரி. முனைவர் ச.வே. சுப்பிரமணியன் அவர்களது உரையுடன் தொகுத்து மணிவாசகர் பதிப்பகம் வெளியிட்ட "தொல்காப்பியம் தெளிவுரை" என்னும் நூலில் இந்த வரிக்கு "அந்தணர் அரசராக முடியாது" என்று பொருள் தரப்பட்டிருக்கிறது. பாடலில் 'அந்தணாளர்' என்பது 'அந்தணர்' என்று பிழைபட அச்சிடப்பட்டதோடு, பொருள் விளக்கமும் தவறாகத் தரப்பட்டுள்ளது என்றாலும், அது அப்படித்தான் இருந்திருக்கவேண்டும் அல்லது தொல்காப்பியர் அப்படித்தான் சொல்லியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இது ஒன்றும் நமது ஆசையல்ல; மாறாக, மெய்மையின் எதிரொலிப்பு. அரச பதவியானது வழிவழியாக வரும் வாரிசுரிமைப்

---

*என்னுள் ஒரு விந்தையான உருவெளித்தோற்றம் ஒளிர்ந்தாடுகிறது:. சைவம், சிவன், லிங்கம், ஐந்தெழுத்து யாவும் என் மனவெளியின் புழங்குபொருள்களாகி, நானோ தமிழன் என்னும் பிறவிப்பிணியிலிருந்து விடுபட முடியாது கிடந்துழலும் பட்சத்தில், அவை யாவும் தமிழ் எனக்கு வழங்கிய மூலமந்திரப் பொருள்களாகிவிடத்தானே வேண்டும்? இந்தச் சுதந்திரம்கூட மறுக்கப்படும் எனில், மதத்தினால் எனக்கு ஆகப்போவதென்ன? இப்பொய்மைகளை மெய்மையாக்குவதற்கான காப்புக்கடனாகத்தான் சைவ மடத் தலைமைகள் ஸ்மார்த்த பார்ப்பனத் தலைமைகளோடு வீற்றிருக்க நேரும்போது ஒரு படி தாழ்வாக அமர்வதும், குடமுழுக்கு போன்ற சமய வழக்காறுகளை நிகழ்த்தும்போது தமிழை மேடையேற்ற மறுப்பதும், ஒப்பீட்டளவில் சமஸ்கிருதத்துக்கு இரண்டாம் பட்சமாகவே தமிழைத் தழையப் பிடிப்பதும் இழிவென்னும் உணர்வில்லாத செயல்பாடுகளாகின்றன.*

---

பதவி. நமக்குத் தெரிந்த 2000 ஆண்டுகால வரலாற்றில் எந்த அந்தணனும் அது வடமொழிப் பொருளிலாயினும் தமிழ்ப் பொருளிலாயினும் தமிழ்நாட்டை ஆண்டதில்லை. அதாவது இறந்த காலத்தில் தமிழர்கள் பார்ப்பனரை மேன்மக்களாக ஏற்றுக்கொண்டாலும் அவர்களை ஆள அனுமதித்ததில்லை. 20ஆம் நூற்றாண்டில் முதல் அமைச்சர்களாக மாநில ஆட்சியை வழிநடத்திய ராஜாஜி, ஜெயலலிதா என்னும் பார்ப்பனர்கள்கூட முதலமைச்சர்கள்தாமே தவிர அரசர்கள் அல்லர். 'என்ப', 'என்மனார்', 'என்மனார் புலவர்' என்று 287 முறை (இதை எண்ணிச் சொல்லியுள்ளவர் இலக்குவனாரே) சொல்லித் தனக்கு முற்பட்டவர்களின் கருத்தைப் பதிவு செய்யும் தொல்காப்பியர் இந்தப் பாடல் வரியை என்ன ஆதாரம் கொண்டு பதிவு செய்திருக்க முடியும்? எனவே, இது போன்ற பாடல்கள் இடைச்செருகலாயிருப்பதே பொருத்தம்.

பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை தொல்காப்பியத்தில் 78 வட சொற்கள் 94 முறை பயன்பட்டுள்ளன என்று பட்டியலிடுகிறார். அந்தப் பட்டியலை அப்படியே வெளியிட்டு இலக்குவனார் ஆய்கிறார். கால்டுவெல் வழிகாட்டலையும் பயன்படுத்தியதாகச் சொல்லித் தன் தீர்ப்பை வழங்குகிறார். அதாவது, ஒன்றிரண்டு ஐயத்திற்கிடமான சொற்களைத் தவிர அனைத்தும் தமிழ்ச் சொற்களே என்பது அவரது தீர்ப்பு. இதை வாசக நண்பர்கள் ஒன்றும் குழப்பிக்கொள்ள வேண்டியதில்லை. நீங்கள் தீவிரத் தமிழ்ப் பற்றாளர் எனில் இலக்குவனாரை அப்படியே வழிமொழிவீர்கள். எதார்த்தத் தமிழர் என்றால் பல வடசொற்கள் இருக்க வாய்ப்பிருக்கலாம் என்பீர்கள். அல்லாமல், நீங்கள் தீவிர இந்து ஒருமைப்பாட்டாளராய் இருப்பின், இன்னும் சில நூறு வடசொற்களேனும் தேறும்; வையாபுரிப்பிள்ளை 'பார்ப்பான் தமிழன் இல்லை' என்று நம்புகிற அழுக்கு வெள்ளாளன் என்பதால் அச்சொற்களை முழுமையாகப் பட்டியலிடாமல் கொஞ்சமாகக் காட்டி நழுவிவிட்டார் என்று சொல்வீர்கள். தமிழ்–சமஸ்கிருதக் கூட்டில் எல்லாருக்கும் பொருத்தமான உண்மைகள் பெரும்பாலும் அபூர்வமாகத்தான் காணக் கிடைக்கும்.

மற்றோரிடத்தில் 'சூத்திரம்' 'உத்தி' என்னும் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் குறிப்பிட்டு, இவை தொல்காப்பியர் காலத்துக்குப் பொருத்தமற்றவை என்று அப்பாடல்களை விலக்குகிறார். இதன் மூலம் அவரது உள்ளக்கிடக்கை ஒருவாறு விளங்குகிறது.

இடைச்செருகலை அடையாளம் காண ஒன்றுக்கு மேற்பட்ட காரணங்கள் இருப்பினும் இலக்குவனாருக்கு அடிப்படைக் காரணமாகத் தொல்காப்பியரின் காலத்தை கி.மு.5ஆம் நூற்றாண்டுக்குக் கொண்டு செல்வதாகவே அமைகிறது. இடைச்செருகல்களை மூலப்பிரதியின் அங்கமாக ஏற்றுக் கொள்வதெனில் அவரது காலம் கி.பி. 5ஆம் நூற்றாண்டு என முடிவு செய்ய வேண்டி வரும்.

வையாபுரிப் பிள்ளை தொல்காப்பியத்தின் காலத்தை கி.பி.5ஆம் நூற்றாண்டு என நிர்ணயிக்கிறார். சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காப்பியங்களின் காலத்தையும் அவ்வாறே பின் நகர்த்துகிறார். ஆனால் சங்க இலக்கியங்கள் பற்றிய காலக்கணக்கில் அவருக்குப் பெரிதாகத் தர்க்கமுரண்கள் எழவில்லை என்பதைப் பலரும் கவனம் கொள்வதில்லை. அதனால் கால ஆராய்ச்சியில் அவர் ஏறக்குறைய தீவிரத் தமிழினப் பகைவராகவே இன்றுவரை புறக்கணிக்கப்படுகிறார் என்பது தமிழுக்குக் கிடைத்த வரமா, சாபமா என்று தெரியவில்லை. இந்த விஷயத்தில், ஒரு நூற்றைம்பது ஆண்டுகாலக் காஞ்சி சங்கர மடத்தை 2500 ஆண்டுப் பழமை வாய்ந்ததாகவும், 8ஆம் நூற்றாண்டில் பிறந்த ஆதிசங்கரனை 25 நூற்றாண்டுகளுக்கு முன் பிறந்த, அதாவது புத்தனுக்கு முன் பிறந்தவ னாகவும் பழமை ஏற்றி, காலஞ்சென்ற சந்திரசேகரேந்திர சரஸ்வதி உலகளாவிய தன் பக்தர்களைக்கொண்டு நம்ப வைத்ததொன்றும் அர்த்த மற்றதல்ல என்பதாகத்தான் தமிழ்ப் பற்றாளர்கள் அவரை முன்னுதாரண மாகப் பின்பற்றுகிறார்கள் என்று படுகிறது. பழந்தமிழ் இலக்கியங்களில் இடைச்செருகல்களையும் அத்துமீறிய உரைவிளக்கங்களையும் புகுத்தி, அவற்றுக்குப் பிற்காலத் தமிழினத்தையே சாட்சியமாக்கிய பரம்பரையைச் சேர்ந்தவர் அவர். சொன்னால் செல்லுபடியாகும். ஆனால் அடிமைத் தமிழ்ச் சமூகமும் அந்த ஏணி வழியாகவே மேலேற எத்தனிக்கிறது.

இலக்குவனாரின் நூலுக்கு அணிந்துரை வழங்கிய கருமுத்து தியாகராஜன் அவர்கள், 'சட்டப் பட்டதாரியான பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையின் கால ஆராய்ச்சியை மறுப்பதற்கு இலக்குவனார் இத்தனை சிரமம் எடுத்துக்கொண்டிருக்க வேண்டாம். ஒதுக்கித் தள்ளிவிட்டுப் போயிருக்கலாம். அதற்குள்ள தகுதி அவ்வளவுதான்' என்கிறார். உலகின் நக்கீர விஞ்ஞானிகள் சிலரைத் தவிர மற்ற அத்தனை கோடி மக்கள் திரளும் சேர்ந்து 'உலகம் தட்டையானதே' என்று சொல்லியும் நம்பியுமே அப்படி ஆக்கிவிட முடிந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!

வையாபுரிப் பிள்ளை, தெ.பொ.மீ. போன்றவர்கள் கால ஆய்வில் தவறே செய்யாத அறிவியல் மேதாவிகள் என்பதல்ல உண்மை. பிறவியிலேயே அவர்களுக்குத் தமிழ் பற்றிய சில சுயாபிமானமற்ற தடித்தனங்கள் கூட வாய்த்திருக்கலாம். ஆயினும் காது கொடுத்துக் கேட்கவே அவர்கள் தகுதியற்றவர்கள் என்று ஒட்டுமொத்தமாகப் புறக்கணிப்ப தெனில் எம்மவர்களது அறியாமையின் சிம்மாசனம் எத்தனை வைரம் பாய்ந்ததாகவும் வன்மம் நிறைந்ததாகவும் இருக்க வேண்டும்! முதல்முறையாகத் தான் திரட்டிய தகவல்களைக் கொண்டு கால்டுவெல்லும் இப்படித்தான் கால நிர்ணயம் செய்தார். திருக்குறளைப் பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த நூல் என்று வரையறுத்தாலும் அதுபோன்றதொரு நூலை ஈன்றெடுப்பதற்கு இந்தத் தமிழ்மொழி எத்துணை தொன்மையும் செழுமையும் மிக்க வரலாற்றைக் கொண்டிருக்க வேண்டும் என்று பூரிக்கிறாரே, அந்தப் பூரிப்புதான் அவருக்கான அறிவியல் நேர்மை. ஆனால் அவரை முறைப்படி எதிர்கொள்வதை விடுத்து இந்தத் தமிழ் மேனாமினுக்கிகள்தாம் இருட்டடிப்புச் செய்தவர்கள். பூனை கண்ணை மூடிக்கொண்டால் பூலோகம் அதற்கு மாத்திரமே இருட்டாயிருக்கும் என்பதை அறியாத மேதாவிகள் அவர்கள்.

தொல்காப்பியம் ஓர் இலக்கண நூல் என்னும் முறையில், நமக்குக் கிடைத்த நூல்களிலெல்லாம் அதுவே மூத்ததாகவும் முதன்மை யானதாகவும் இருக்க வேண்டுமென்று இயல்பு மீறிய ஆசையால் முன்முடிவு செய்து கொண்டது எதற்காக?

நமக்குக் கிடைத்துள்ள சங்ககாலம் தழுவிய பாடல்களின் அதிக பட்சத் தொன்மை என்பது ஒரு மூவாயிரம் ஆண்டுகளுக்கு உட்பட்டதாய் இருக்கக் கூடும். தொகை நூல்களின் பாடல்கள் ஒன்றுக்கொன்று மிக நீண்ட இடைவெளியிலானவை என்பதை அவை முன்வைக்கும் வாழ்வியல் பதிவுகளைக்கொண்டே உய்த்தறியக்கூடும். அப்பாடல்களில் கடவுள் பற்றியோ மதம் பற்றியோ எந்தக் குறிப்பும் இல்லை. மனித வாழ்வின் அச்சாணி கடவுள்நம்பிக்கை என்பதாக ஒரு பாடலும் நமக்கு வலியுறுத்தவில்லை. மரஞ்செடிகொடிகளைத் தங்கள் உடன் பிறப்புகளாகவும், மக்களைக் காக்கும் பணியில் மரணமுற்றவர்களை நடுகல்களாகவும் பெருமைப்படுத்திய வாழ்வு அது. கடவுள்பற்றிப் பேசாமை அல்லது மறுதலித்தமைதான் தமிழ்வாழ்வில் ஜைன, பௌத்த மதங்கள் உடன்இருப்பாய்ப் பொருந்திப் பரவத் தன்னெழுச்சியான காரணங்களாய் இருந்திருக்கக் கூடும். அப்படிப்பட்ட நிலையில் அடிமேல் அடி அடித்தாற்போன்ற நெடுங்காலப் பார்ப்பனத் தாக்கமும் அவைதிக மதங்களுக்கு மறுப்பான, நிரூபணங்களற்ற விஷயங்களைத் தகவமைத்துக் கொள்ளப் போதுமான மனப்படிமானமும் கூடிவந்த ஒரு காலகட்டத்தில்

*இடைச்செருகலை அடையாளம் காண ஒன்றுக்கு மேற்பட்ட காரணங்கள் இருப்பினும் இலக்குவனாருக்கு அடிப்படைக் காரணமாகத் தொல்காப்பியரின் காலத்தை கி.மு.5ஆம் நூற்றாண்டுக்குக் கொண்டு செல்வதாகவே அமைகிறது. இடைச்செருகல்களை மூலப் பிரதியின் அங்கமாக ஏற்றுக்கொள்வதெனில் அவரது காலம் கி.பி. 5ஆம் நூற்றாண்டு என முடிவு செய்ய வேண்டி வரும்.*

*பிறக்கும்போதே ஜைனனாகப் பிறந்து, அப்பர் என்று பெயர் சூட்டிக்கொண்டு, நிகரற்ற ஆளுமைத் திறத்தோடு வெளிப்பட்ட ஒரு அமைச்சன் பாடுகிறான்: "நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்," என்று. ஆனால் அதை எப்போது பாடுகிறான்? நாவுக்கரசன் என்று பெயர் மாற்றம் செய்துகொண்டு சைவனாகத் தொண்டூழியம் செய்யத் தன்னைத் தத்தம் செய்துகொண்ட பின்னர். இவன் சைவனானது என்னத்துக்கு? சம்பந்தனைத் தூக்கிச் சுமக்கத்தானே? தூக்கலாம், சுமக்கலாம். ஆனால் ஒரு தந்தையின் பெருமிதத்தோடல்ல. மாறாக, ஒரு தொழும்பனின் அடிவருடித்தனத்தோடு.*

தான் இறைக் கருத்தியலும் அதுபற்றிய உணர்வும் எழுந்திருக்கும். தொல்காப்பியம் அப்படியொரு கால கட்டத்தை முன்வைக்கும் நூல்.

அகத்திணையியலில் முதற்பொருளுக்கப்பால் கருப்பொருள் கூறவந்த தொல்காப்பியர், "தெய்வம், உணாவே, மா, மரம் புள், பறை,..." என்று தெய்வத்தை முதல் இடத்தில் வைக்கிறார். இதனை இலக்குவனார் அவர்கள் மிகவும் சிலாகித்து 'உணவைக்கூடத் தவிர்த்துவிடலாம். ஆனால், இறையுணர்வைத் தவிர்க்கவே முடியாது என்பதால் அதைத் தொல்காப்பியர் முதன்மைப்படுத்தினார்' என்று அழுத்தம் தருகிறார். நமக்கென்ன தோன்றுகிறதெனில், 'என்மனார் புலவர்' என்று புலவர்கள் இதுவரை என்ன சொன்னார்கள் என்பதை மட்டும் தொல்காப்பியர் தொகுக்கவில்லை; இனி என்ன சொல்ல வேண்டும் என்பதையும் சேர்த்தே தொகுத்தார் என்பதுதான் பொருத்தம்.

தெய்வம் என்பது தூய தமிழ்ச் சொல்தான் என்பது இலக்குவனாரின் பொருள்கோள் ஆய்வு. ஆனால், தெய்வம் என்றால் பாரசீக மொழியில் 'திருடர்கள், முரடர்கள்' என்று பொருள். அது வேறொன்றுமில்லை. ஒருகாலத்தில் தங்கள் விளைபொருள்களைத் திருடித் தின்றவர்களும் பின்னர் கீழ்த்திசை நோக்கிச் சென்றவர்களுமான ஆரியர்களுக்கு அவர்கள் வைத்த பெயர். ஆரிய மொழியில் அதே சொல்லுக்கு 'தேவர்கள், மேற்கிலிருந்து– மேல்உலகிலிருந்து வந்த தங்கள் மூதாதையர்கள்' என்று பொருள். அந்தச் சொல்தான் கடவுளைக் குறிக்கும் தூய தமிழ்ச்சொல்லாக உள்வாங்கப்படுகிறது.

என்னுள் ஒரு விந்தையான உருவெளித்தோற்றம் ஒளிர்ந்தாடுகிறது: சைவம், சிவன், லிங்கம், ஐந்தெழுத்து யாவும் என் மனவெளியின் புழங்குபொருள்களாகி, நானோ தமிழன் என்னும் பிறவிப் பிணியிலிருந்து விடுபட முடியாது கிடந்துழலும் பட்சத்தில், அவை யாவும் தமிழ் எனக்கு வழங்கிய மூலமந்திரப் பொருள்களாகி விடத்தானே வேண்டும்? இந்தச் சுதந்திரம்கூட மறுக்கப்படும் எனில், மதத்தினால் எனக்கு ஆகப்போவ தென்ன? இப்பொய்மைகளை மெய்மையாக்குவதற்கான காப்புக்கடனாகத்தான் சைவ மடத் தலைமைகள் ஸ்மார்த்த பார்ப்பனத் தலைமைகளோடு வீற்றிருக்க நேரும்போது ஒரு படி தாழ்வாக அமர்வதும், குடமுழுக்கு போன்ற சமய வழக்காறுகளை நிகழ்த்தும்போது தமிழை மேடையேற்ற மறுப்பதும், ஒப்பீட்டளவில் சமஸ்கிருதத்துக்கு இரண்டாம் பட்சமாகவே தமிழைத் தழையப் பிடிப்பதும் இழிவென்னும் உணர்வில்லாத செயல்பாடுகளாகின்றன.

கால்டுவெல் சரியாகத்தான் சொன்னார்: 'சமஸ்கிருதத்தை முற்றாக நீக்கிவிட்டால் தமிழ் தனித்து நிற்கும்; கூடவே செழித்தும் வளரும்' என்று. அதைப்போலவே சைவத்திலிருந்து சமஸ்கிருதத்தை முற்றாக நீக்கிவிட்டால் என்னாகும்? நான் முற்றாக மதமற்ற மனிதனாக, தொல்காப் பியத்திற்கு முற்பட்ட தமிழனாகக் கடைந்தெடுக்கப்படுவேனோ?

அது ஒருவேளை மனித நாகரிகத்தை முன்னெடுத்துச் செல்லாத ஒருவகை காட்டுமிராண்டித்தனமாகக்கூடக் கணிக்கப்படலாம். இருக்கட்டுமே? மதக் காட்டுமிராண்டித்தனத்தைவிட அந்த வகை மதமற்ற காட்டுமிராண்டித்தனத்தில் மானுட மீட்சி இருக்கும். ஆனாலும் நீறு பூசிகள் அதை ஏற்க மாட்டார்கள். நீருக்குள் நூறுவகை சுவையும் வண்ணமும் நோக்குத்தான் எனினும் அறிவின் மெய்யியல் நாகரிகமும் அதில்தான் எதிரலையாய்ச் சிதறி வழிகிறது.

நமக்கு இன்னும் ஒரேயொரு கேள்விதான் எஞ்சுகிறது. தொல்காப்பியர் ஐந்திரம் நிறைந்தவர், அதங்கோட்டாசான் நான்மறையில் கரைகண்டவர் என்றெல்லாம் பெருமைப்பட்டுக் கொண்டார்களே; வடபுலத்து சமஸ்கிருதப் புலமையாளன் எவனாவது தன்னைத் தமிழறிந்தவன், திராவிடமொழி விற்பன்னன் என்று பெருமை பேசிக் கொண்டதுண்டா? குறைந்தபட்சம் தகவலுக்காக வேனும் பொருட்படுத்திக் கூறிக்கொண்டதுண்டா? இந்த அம்மணமான உண்மை ஒன்றே பார்ப்பானைக் கண்டதும் தன்வயமிழந்து தாசியாகிவிட்டான் தமிழன் என்று காட்டவில்லையா? (தாசி= தாய்+சி, அகமுடையானுக்கு அன்னையாயிருந்து அருள் சுரக்கிறவள்.) தாசி என்னும் சொல் தொந்தரவு தருகிறதெனில் பெண்டாட்டி என்று வைத்துக்கொள்வோம். இந்திய வைதிக சமூகத்தில் பெண்களைப் பொறுத்தவரை திருமணத்திற்குப் பிறகுதான் வாழ்க்கையே தொடங்குகிறது; வரலாறே எழுதப்படுகிறது. ராஜீவ் காந்தி ஒருமுறை சொன்னார்: "இந்தியக் கலாச்சாரத்தையும் சம்பிரதாயங்களையும் எனக்குக் கற்றுக்கொடுப்பவர் சோனியா காந்திதான்," என்று. பெண்டாட்டி யாயிருப்பதன் வைதிக லட்சணம் இதுதான். இதை வேறுவிதமாகச் சொன்னால் பார்ப்பன மதத்தையும் பார்ப்பன மேலாதிக்கத்தையும் பேணிப் பாதுகாக்கும் பெட்டகமாய்ச் செயல்பட்டவர்கள் தமிழகத்தின் ஆளும் பரம்பரையினர். அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி என்பது முடியாட்சியின் சமூகத் தத்துவம். இதிலுள்ள சேவக தர்மம் என்னவெனில் பெண்ணுக்கென்று தனித்த அலகு ஒன்றும் கிடையாது. அப்படியே இருக்குமெனில் அது அகமுடையானை முன் வைத்துத்தான் வெளிப்பட வேண்டும். (இந்த விஷயத்தில் பார்ப்பனப் பெண்களும் இன்றுவரை சூத்திரச்சிகளாகத்தான் பாவிக்கப்படுகிறார்கள் என்பது கூடுதல் தகவல்.)

பிறக்கும்போதே ஜைனனாகப் பிறந்து, அப்பர் என்று பெயர் சூட்டிக்கொண்டு, நிகரற்ற ஆளுமைத் திறத்தோடு வெளிப்பட்ட ஒரு அமைச்சன் பாடுகிறான்: "நாமார்க்கும் குடியல்லோம், நமனை அஞ்சோம்," என்று. ஆனால் அதை எப்போது பாடுகிறான்? நாவுக்கரசன் என்று பெயர் மாற்றம் செய்துகொண்டு சைவனாகத் தொண்டூழியம் செய்யத் தன்னைத் தத்தம் செய்துகொண்ட பின்னர். இவன் சைவனானது என்னத்துக்கு? சம்பந்தனைத் தூக்கிச் சுமக்கத்தானே? தூக்கலாம், சுமக்கலாம். ஆனால் ஒரு தந்தையின் பெருமிதத்தோடல்ல. மாறாக, ஒரு தொழும்பனின் அடிவருடித்தனத்தோடு. சிறுவனே என்றாலும் சம்பந்தன் வணக்கத் துக்குரிய பார்ப்பாரப் பிள்ளையல்லவா? ஐயோ, அவன் தமிழ்ப் பார்ப்பான் என்கிறீர்களா? பார்ப்பானில் தமிழன் என்ன, வடவன் என்ன ஐயா. இருவரும் சமஸ்கிருதத்தின் பேரால் பூசுர அந்தஸ்தைத் தேடிக்கொண்டு பிறரைத் தொழும்பர்களாக்கியவர்கள்தாமே?

திருமணத்துக்கு முன் பெண்ணானவள் எத்தனை சீரும் சிறப்புமாய் வளர்ந்தென்ன? சுதந்திரமாய்த் திரிந்தென்ன? அத்தனை சிறப்புகளும், அவளைக் கட்டியவன் கழிசடையாய் இருப்பினும் அவனுக்குப் பின்னால் அடங்கி நிற்கத்தானே? பெண்களைப் பிற்படுத்துவதில் முத்திறக் கற்பு பேசும் தமிழ்ச்சமூகம் யாருக்கும் பிற்பட்டதில்லை. கம்பன் இராவணனை வெகு உச்சத்திற்குத் தூக்கிச் செல்வான். மத யானைகளோடு பொருத மார்பு, மலையைச் சுமந்த தோள்கள், வெற்றிமாலை சூடிய பத்துச் சிரங்கள், இடையில் சங்கரனே உவந்தளித்த வீரவாள், இசையில் நாரதனை வென்ற நாவண்ணம், இவ்வளவையும் கவசங்களாகத் தாங்கி மகிழும் வீரம்– அத்தனையும் இராமன் விட்ட ஒரு கணையில் வீழ்ந்துபட்டனவாம். இதில் யார் வல்லவன்? அம்பெய்தவன்தானே? அதுபோலத்தான் பார்ப்பனத் தாக்கத்திற்கு முன் சேமித்த தமிழ்ச் சிறப்புகள் யாவும் பார்ப்பனக் கண்காணிப்பின் கீழ் கைகட்டி நிற்பதாயின. இந்த மறுகட்டமைப்பை வரைவிலக்கணமாக்கித் தமிழ் வரலாற்றை அமைதிப்படுத்திய நூல்தான் தொல்காப்பியம். ●

# எதிர்வினை

***இதழாசிரியர் குறிப்பு:*** இந்தக் கடிதம் கருணாநிதியை விமர்சிப்பதாகப் பேர் பண்ணிக்கொண்டு என்னை வெகு கூர்மையாகச் சாடுகிறது. அதை மதிக்க வேண்டும் எனத் தோன்றியதால் இங்கு முழுமையாக வெளியிடப்படுகிறது. இதை எழுதிய நண்பர் தன்னை மோகிக்கவோ முன்நிறுத்தவோ முயலாமல், பொது நோக்கத்திற்காகத் தன் அரசியல் நிலைப்பாட்டில் நின்று என்னை விமர்சிக்கிறார். அதை நான் வரவேற்கிறேன். உள்விளக்கங்கள் தேவையில்லை. அதை வாசகர்கள் பார்த்துக்கொள்ளட்டும். என் கட்டுரை ஒரு புதிய எழுத்தியல் முயற்சியை வெற்றிகரமாகச் செயல்படுத்திவிட்டதாகப் பெருமைப் பட்டுக்கொண்டிருந்தேன். தமிழ் வாசகத் தளத்தில் அது வெறும் நேர்கோட்டு அரசியலாகவே புரிந்துகொள்ளப்பட்டு விட்டது என்பதற்கு இக்கடிதம் ஒரு சான்று. உண்மை ஒருவனைக் குற்றவாளியாகச் சுட்டுகிறது. நியாயம் அவனை நிரபராதியாக விடுவிக்கிறது. இதன் மறுதலையாக, உண்மையில் நிரபராதியாய் இருக்கிறவன் நியாயத்தின் பட்டியலில் குற்றவாளியாகப் புனையப்படுகிறான். சமூகம் இந்த நியாயங்களாலேயே ஆளப்படுகிறது; வழி நடத்தப்படுகிறது. உண்மையானது உச்சிப் பொழுதைப் போல வெட்டவெளிச்சமாய்ச் சுட்டாலும் அது ஏறெடுத்துப் பார்க்கப்படுவதில்லை. சாட்சியாகவும் முன்நிறுத்தப்படுவதில்லை. நமக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் நமது வாழ்வின் வெளி அதுவாகத்தான் இருக்கிறது. வாழ்ந்து தீரும்போது அதைப் பற்றிப் பேசியும் தீர வேண்டியுள்ளது. என் கட்டுரை உண்மையையும் நியாயத்தையும் ஊடும் பாவுமாய் நெய்ய முயன்றது. எனக்கு அது புது முயற்சி. நான் அறிந்தவரை முதல் முயற்சியும்கூட. புரிபடாமலோ, அல்லது என் போதாமையாலோ, சரிவரப் புலப்படாமல் போனமைக்கு நான் வருந்திப் பயனில்லை. போகட்டும். இந்த வாசக நண்பரிடம் எனக்கொரு கேள்வியுண்டு. இவரைத் தனக்கான அரசியலோடு கூடிய தேர்ந்த அறிவாளியாக மதிக்கிறேன். விடுதலைப் புலிகள் அப்பாவிப் பொதுமக்களைக் கேடயமாக வைத்துப் போராடுகிறார்கள் என்பது இந்த நண்பரின் நிலைப்பாடு. இங்கிருக்கும் இலங்கைத் துணைத் தூதர் அம்சாவின் நிலைப்பாடும் இதுதான். அவரோடு விருந்துண்டு மகிழும் மேலும் சிலருக்கும் அதுதான் நிலைப்பாடு. எனக்குத் தெரிந்த உண்மைகளோடும் இன உணர்வின்பாற்பட்ட சார்புகளோடும்கூட நான் அதை மறுக்கலாம்; விளக்கலாம். அதற்காக நான் அவர்களையே மறுக்கவோ விலக்கவோ தேவையில்லை. அவ்வகை அரசியல் நிலைப்பாட்டை இங்கே தவிர்க்கலாம். ஆனால் இந்த வாசக நண்பர் ஒரு கட்டத்தில் அவரது அறிவால் விட அவருடைய நேர்மையால் என்னை வசீகரிக்க, மகிழ்விக்க ஏன் மறந்தார் என்று தெரியவில்லை. சென்ற இதழ்க் கட்டுரையைத் தொடர்ந்து, 'கவனம்' தலைப்பில் 'தலித் முஸ்லிம்' பற்றி நான் குறிப்பிட்டிருந்தேன்; மனம் நொந்திருந்தேன். நண்பர் தன்னெழுச்சியாக அதைப் பற்றித்தான் முன்னுரிமை கொடுத்துப் பேசி என்னைத் தெளிவுபடுத்தியிருக்க வேண்டும். அதற்கு முற்றும் பொருத்தமுள்ள நண்பர் இவர். இஸ்லாத்தையே வெற்று மதமாக, பத்தோடு பதினொன்றாக மலினப்படுத்திவிடும் நோய்ச்சுட்டு அது என்னும் வருத்தம் எனக்குண்டு. நண்பரோ, கருணாநிதி பற்றிய கண்டடைதலே தனக்குத் தலை போகிற விஷயம் என்று தன்னை அத்தோடு ஏறக்கட்டிக்கொண்டுவிட்டார். மொழியைவிட மதம் முக்கியமில்லை என்று பங்களாதேஷ் பிறந்தது. மதத்தைவிட மொழியோ இனமோ முக்கியமில்லை என்பதாக இலங்கையும் தமிழ்நாடும் அணி மாறுகிறது. இனத்தைவிட, மதத்தைவிட எது முக்கியம் என்று தெரியாமல் இஸ்ரேலை ரெளடியாக வளர்த்துக்கொண்டிருக்கிறது அரபுலகம். எல்லாரும் அவரவர் தோதுக்கேற்றபடி வாய்மை பற்றியும் நேர்மை பற்றியும்தான் பேசிக்கொண்டிருக்கிறோம். வாழ்வதற்காயினும் தாழ்வதற்காயினும் நாம் எதையும் பேசித்தானே ஆக வேண்டும்.

---

அன்புமிகும், ஐயா, சரண் அவர்களுக்கு, தாங்களும், உயர்திரு அம்மா அவர்களும் நலமாக இருப்பீர்கள் என நம்புகிறேன். இறைவனின் ஆசிகள் என்றும் உங்களை வந்தடையுமாக...!

"கவிதாசரண்" ஆகஸ்ட் - செப்டம்பர் 2008 இதழில் "பாலையாய் திரிந்த மருதமும் சிகரமாய் உயர்ந்த மனிதரும்" - என்ற நெடிய கட்டுரை கண்டேன். அது குறித்து எனது எண்ணங்கள் சிலவற்றை இங்கே பதிவு செய்யலாம் என விரும்புகிறேன். கடந்த பல இதழ்களில் தங்களது அறிவுத் தீட்சண்யமும், தர்க்கத் திறமையும், தெளிவான சிந்தனைப் போக்கும் உள்ள கட்டுரைகளில், எழுத்தோவியங்களில் எனது மனதைப் பறி கொடுத்துள்ளேன். உங்களின் சொல் லாடல்கள் கண்டு வியந்திருக்கிறேன். ஆனால், முதன் முறையாக, ஒரு தவறான நபருக்கு, தவறான நோக்கத்தின் அடிப்படையில் தாங்கிப் பிடிக்கும் துரதிருஷ்டத்தை இந்த இதழில் கண்டேன். வேதனையில் மனம் நொந்தேன்.

நரகலை மிதிப்பவனின் கால்கள் மட்டுமல்ல, மனமும்கூட ஒரு கணம் கூசி நடுங்கும். அந்த நடுக்கம் உங்களையறியாமலே, உங்களுக்கு வந்திருக்கும் போலும்! அதனால்தான் என்னவோ, இக்கட்டுரையின் 13ஆம் அங்கத்தில் இப்படி எழுதுகிறீர்கள்:-

> ''இக்கட்டுரையிலிருந்து அங்கொன்றும், இங்கொன்றுமாகச் சில தொடர்களையோ, வாக்கியங்களையோ, உருவியெடுத்து, அவற்றின் நிறம், குணம், மணம் பற்றி பகுப்பாய்வு செய்யத் தொடங்கினால் நீங்கள் ஏமாந்து போக வாய்ப்புண்டு.''

எதையும் உருவவோ, புதிதாகச் செருகவோ, அவசியமில்லை. என்னை மன்னிக்க வேண்டும் அய்யா! இந்தச் சிற்றறிவு பெற்றவனின் கண்ணோட்டப்படி முழு மொத்த கட்டுரையையுமே இதழிலிருந்து உருவி எடுத்தால்தான் நல்லது என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம். ஏனெனில் கருணாநிதி பற்றிய தங்களது வாதம் முழுவதுமே, எவ்விதப் பாகுபாடும் இன்றி ஒரு தலைப்பட்சமாக எழுதப்பட்டுள்ளது என்றே நான் நினைக்கிறேன். அதில் தங்களது அறிவின் தீட்சன்யமும் தவறான முறையில் உபயோகிக்கப்பட்டுள்ளது. இது செப்டம்பர் மாதம். அண்ணா பிறந்த மாதம் அண்ணா நூற்றாண்டு விழாவை அரசும், மக்களும் கோலகலமாகக் கொண்டாடுகிற ஒரு நேரம் இது. அண்ணாவின் அரசியல் பங்குப் பணி பற்றி ஒரு கட்டுரையை நீங்கள் எழுதி இருந்தால், நேரப் பொருத்தம் கருதி, அது இந்த இதழுக்கும் அணி சேர்த்திருக்கும். அண்ணாவைப் பற்றிய ஒரு அரிய, ஆராய்ச்சி கட்டுரை என் போன்றவர்களுக்கும் படிக்கக் கிட்டியிருக்கும். ஆனால் - மூன்று மாதங்களுக்கு முன்பே பிறந்த நாள் கொண்டாடி தீர்த்து விட்ட மு.க.வைப் பற்றித் தாங்கள் இப்போது "போற்றிச் சீரடி" பாடுவதன் அவசியம்தான் என்ன! அவசரம்தான் என்ன! கருணாநிதியை அவரது கூட்டணித் தோழர்களும் கைவிட்டு, மக்களும் கிட்டதட்ட கைவிட்ட நிலையில் அவர் மீது ஏதும் அனுதாபம் பிறந்துவிட்டதா உங்களுக்கு?

தாங்கள் பயப்படவோ, கவலை கொள்ளவோ வேண்டாம். கருணாநிதிக்கு தமிழக வரலாற்றில் எப்போதும் இடம் உண்டு. அதை யாரும் தட்டிப் பறிக்கப் போவதில்லை. பத்தாயிரம் பக்கங்களில் ஒருவன் மகாத்மா காந்தியின் வரலாற்றை எழுதுகிறான் என வைத்துக் கொள்வோம். கடைசி இரண்டு பக்கங்களிலாவது அவன் கோட்சே பெயரை எழுதித்தான் ஆக வேண்டும். அது வந்தே தீரும். அது காலத்தின் கட்டாயம். இயங்கியல் விதியின் ஒரு சின்ன துகள். கருணாநிதி கோட்சே அல்ல. ஆனால் கலைஞர்

**<u>தென்கிழக்காசியச் செய்தி:</u>**

# மாவீரனுக்கு அஞ்சலி

ஈழ நாட்டு சங்காணையில் 5ஆம் திகதி சனவரித் திங்கள் 1926இல் பிறந்தவர்தான் ஜே.பி. மற்றும் ஜே.பி.ஜே என்ற சுருக்க பெயர்களால் அழைக்கப்பட்ட, அண்மையில் காலமான ஜோசுவா பெஞ்சமின் ஜெயரெத்தினம். வெளிஉலகத்திற்கு சிங்கப்பூரின் சிற்பி என்று அறிமுகமாகியுள்ள முன்னாள் பிரதமரை கருத்துக் களத்தில் எதிர்த்து நின்ற ஒரே மாவீரன்!

அன்றைய மலாயாவில் (இன்றைய மலேசியா) மூவார் எனும் நகரில், பிரெஞ்சு கான்வென்டில் பள்ளிப் படிப்பைத் துவங்கி, இரண்டாம் உலகப் பெரும் போரின் பின் சிங்கப்பூரில் செயின்ட் ஆண்ரு கல்லூரியில் கல்வியைத் தொடர்ந்து, இலண்டன் நகரின் பல்கலைக்கழகக் கல்லூரியில் சட்டப்படிப்பை முடித்து, வழக்கறிஞராக தொழிலாற்றியவர் ஜே.பி.ஜே.

திசம்பர் 1963இல் தாம் ஆற்றி வந்த மாவட்ட முதன்மை நீதிபதி பணியைத் துறந்து அரசியலில் இடுபட்டவர்.

தீவின் அரசியல் வரலாற்றில் நீண்ட இடைவெளிக்குப் பின் ஏறத்தாழ இரு பத்தாண்டுகள் இடைவெளியில் 31.10.1981ஆம் ஆண்டு சிங்கப்பூரில் முதல் எதிர்க்கட்சி நாடாளுமன்ற உறுப்பினராக அன்சன் தொகுதிக்கு நடத்தப்பட்ட இடைத்தேர்தலில் வென்றார். ஆளும் மக்கள் செயல் கட்சி (ம செ க) சார்பில் போட்டியிட்ட பாங் கிம் இம் 47.1% வாக்குளை பெற்ற வேளையில் ஜே.பி.ஜே. பெற்றிருந்த விழுக்காடோ 51.9% ஆக இருந்தது.

1984ஆம் ஆண்டு நடந்தேறிய பொதுத்தேர்தலில் அன்சன் தொகுதியில் மீளப் போட்டியிட்டு தாம் முன்னர் வென்ற நாடாளுமன்ற இருக்கையை கூடிய பெரும்பான்மையில் தக்க வைத்துக்கொண்டதை குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

வாக்காளப் பெருமக்கள் அவரை வெற்றியாளராக்கிப் பாராளுமன்றத்திற்கு அனுப்பி வைத்தபோதும் எதிர்த்தரப்பு அங்கிருந்து அவரை வெளியேற்றும் முயற்சியில் பின் வாங்காது தொடர்ந்து மூர்க்கத்தோடு ஈடுபட்டது. அதன் விளைவால் தேர்தல் முடிந்த இரு மாதங்களுக்குப்பின் கட்சிக் கணக்கைத் தவறாகக் காட்டியதாகக் குற்றஞ் சுமத்தப்பட்டு வழக்கு மன்றத்தை எதிர்கொண்டவர்.

1986ஆம் ஆண்டு ஒன்றைத் தவிர பிற அனைத்திலிருந்தும் நிரபராதி என்று தீர்ப்பு வர, அவற்றில் திருப்தியுறாத அரசாங்கத் தரப்பு வழக்கறிஞர் மேல் முறையீடு செய்ய, வழக்கை மீள் விசாரணை செய்ய உத்தரவிட்டார் தலைமை நடுவர்.

மறு விசாரணை முடிவில் ஜே.பி.ஜே குற்றவாளி எனத் தீர்ப்பு அளித்த மாவட்ட வழக்காடு மன்ற நடுவர் மூன்று மாதச் சிறைத்தண்டனையையும் 5,000 தாலர் அபராதத்தையும் விதித்தார். பின்னர் சிறைத்தண்டனை ஒரு மாத காலமாகக் குறைக்கப்பட்டது. சட்டப் பணி மேற்கொள்வதினின்றும் தடுக்கப்பட்டார். இக்காரணங்களால் 1986ஆம் ஆண்டு நவம்பர் மாதம் நாடாளுமன்றத்தில் அவரின் இருக்கை காலியானது.

மேற்சொன்ன விசாரணை உயர்நீதிமன்றத்தில் அல்லாது மாவட்ட நீதிமன்றில் நடைபெற்றதால் வழக்கறிஞர் பணி செய்வதற்கு விதிக்கப்பட்ட தடையை அகற்ற வேண்டி பிரிவி கவுன்சிலுக்கு முறையீடு செய்தார். ஜே.பியின் தரப்பில் நியாயம் இருப்பதையும் அவர் தவறாகத் தண்டிக்கப்பட்டு விட்டார் என்பதனையும் ஏற்ற இலண்டனின் பிரிவு கவுன்சில் சிங்கப்பூர் அதிபரின் பொது மன்னிப்பிற்கு மனுச் செய்யும்படி கருத்துரைத்திருந்தது.



ஜே.பி.ஜெ

அப்பரிந்துரையின்படி தம் மீதான குற்றச்சாட்டை நீக்க நீதித்துறைக்கு உத்தரவு பிறப்பிக்கும்படி நாட்டுத்தலைவருக்கு மனுச் செய்தார். மனு ஏற்கப்படாத நிலையில் 1991ஆம் ஆண்டுவரை சட்டத்தரணி தொழில் புரியத் தகுதியற்றவ ராகவே விடப்பட்டார்.

1988ஆம் ஆண்டு நடைபெற்ற பொதுத்தேர்தலில் ஜே.பி. அவர்கள் போட்டியிடத் தகுதி பெறவில்லை என்ற போதும் சோர்ந்துபோய் மூலையில் முடங்கிவிடாமல் பாட்டாளிகள் கட்சி வேட்பாளர்களை ஆதரித்துக் கடும் பிரச்சாரத்தில் ஈடுபட்டிருந்தார். இத்தேர்தல் முடிந்த பின்னர்தான் கோ சோக் தோங் தலைமையமைச்சர் ஆனார்.

அப்போது, தற்கொலை செய்துகொண்டு மாண்ட தேசிய வளர்ச்சித்துறையின் முன்னாள் அமைச்சர் தோ சேங் வான் குறித்து ஐயப்பாடுகள் சிலவற்றை தேர்தல் பரப்புரையின் போது எழுப்பியிருந்தார் ஜே.பி.ஜே. (இலஞ்சக் குற்றச்சாட்டு விசாரணை நடந்துகொண்டிருந்தபோது தற்கொலை செய்துகொண்டவர் அவர்.)

தேர்தல் முடிந்தவுடன் ஜே.பி. தம்மை அவதூறு செய்ததாக முன்னாள் பிரதமர் லீ குவான் இயூ வழக்குத் தொடர, அவ்வழக்கை செவிமடுத்த வழக்காடுமன்ற நடுவர் லாய் கியூ சாய் வாதிக்கு இழப்பீட்டுத் தொகையாக 260,000த்தோடு அதற்கான வட்டித் தொகையையும் செலுத்தும்படி தீர்ப்பளித் தார். இவ்வழக்கு மேல்முறையீடு செய்யப்பட்ட போதும் தீர்ப்பு என்னவோ சொல்லிவைத்தாற்போல் ஜே.பி.க்கு எதிரான தாகவே அமைந்தது.

### இருள் சூழ்ந்த குட்டி இந்தியா!

இவற்றுக்கிடையில், நாடாளுமன்ற உறுப்பினர் ஒருவர் “சிராங்கூன் ரோடு (குட்டி இந்தியா) இருளாய் இருக்கிறது” எனும் பொருளில் பேசியிருந்தார். ஞாயிற்றுக்கிழமை மற்றும் பொதுவிடுமுறை நாட்களில் சிலிகி, சிராங்கூன், சந்தர் சாலைகள் மற்றும் ஜாலான் பெசார் ஆகிய பகுதிகளிலும் அவ்வட்டாரத் திறந்த வெளிகளிலும் தெற்காசிய நாடுகளின் குடிமக்கள் நிரம்பி வழிவர்.

ஜாலான் பெசார் குழுத் தொகுதி (GRC) பாராளுமன்ற உறுப்பினர் ச்சூ வீ கியாங்கின் இந்தியர்கள் பற்றிய கருத்து குறித்து சீன வமிசாவளி வாசகர் ஒருவரின் கடிதத்தையும் பாட்டாளிகள் கட்சிப் பொதுச்செயலாளரின் விடையிலிருந்தும் இன்றைக்கும் ஆண்டுகொண்டிருப்போரின் உளப்பாங்கினை ஒருவாறு தெளியலாம்.

ஆசிரியர் “சுத்தியல்”

அன்புள்ள ஐயா,

ச்சூ வீ கியாங் அவர்கள் சம்பந்தப்பட்ட கருத்திற்கு திரு கோ சோக் தோங் (அன்றைய பிரதமர்) தந்திருக்கும் விளக்கத்தைத் தாங்கள் படித்தீர்களா? இது ஒரு எடுத்துக்காட்டு. (எனவே தாங்கள் நீண்ட நாட்கள் ஒருவர் நாடாளுமன்றத்தில் இருப்பதே இனவாதத்திற்கான காரணம் என்று கூறலாம்). இது போன்ற மனநிலையுடையோர் மக்கள் செயல் கட்சியில் அதிகம் உள்ளனர் என நாம் கருதலாமா? மேலும் இதைவிட அதிகமான ச்சூ வீ கியாங்கள் ம செ களில் உள்ளனர்.

சிங்கப்பூர் செய்தித்துறை இதுபற்றி எழுதுவதற்கு வழியே இல்லை. சுத்தியல் இது பற்றி முழுமையாக எழுதும் என நம்புகிறோம். இனவெறி ஒரு அபாயகரமான விளைவு. ச்சூ வீ கியாங் போன்ற சில ம செ க நாடாளுமன்ற உறுப்பினர்களைப் பற்றி ஆய்வு மேற்கொள்ளப்பட வேண்டும். இவர்கள் பொதுச்சேமிப்புகளை விரயம் செய்து குழப்பங்களை ஏற்படுத்துகின்றனர். இவர்களைப் போன்ற புல்லுருவிகளின் பின்னணி பற்றி தெரிந்துகொள்ள பொதுமக்கள் விரும்புகின்றனர். நாம் இவர்களைப் பற்றி மக்களுக்கு விளக்கம் தர வேண்டும். ம செ கட்சிக்கு அளிக்கப்படும் வாக்கு இதுபோன்ற இனவெறிக்கு வாக்களிப்பதாகும். இவர்களின் அடிமட்ட ஈடுபாடுகளை நாம் அறிய முடியுமா? ம செ கட்சியின் நாடாளுமன்ற உறுப்பினர்கள் எப்படி தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்?

இப்படிக்கு, தே மோங் சூன்.

விடை: "நாடாளுமன்ற உறுப்பினர் ஒருவரின் பேச்சுக்காக சிங்கப்பூரர்களும் குறிப்பாக கறுப்பு நிற மேனியரும் குழப்பமடைய வேண்டாம் என்பது பாட்டாளிக் கட்சி பொதுச் செயலாளர் அவர்களின் வேண்டுகோள்.

"பெரும்பாலான சிங்கப்பூரியர்கள் இருள் நீக்கி வெளிச்சத்திற்கு வந்துவிட்ட பின் திரு ச்சூ அவர்கள் நிறவேறுபாடு எனும் அவரது சொந்த இருளுலகில் வாழ்கிறார்.

"ஒருவருடைய நிறத்தோற்றம் எதற்கும் காரணமல்ல என்று பெரும்பாலான சிங்கப்பூரர்கள் கருதும் போது ச்சூ அவர்கள் மட்டும் இன்று வரை நிறபேதம் காண்கிறார். சிங்கப்பூரர்கள் அவருக்காக வருந்தி அவரை இருளிலிருந்து வெளிக் கொணற முயற்சிக்க வேண்டும்."

நாட்டு நலன், அமைதி மற்றும் நிலைத்தன்மையை முதன்மையாகக் கொண்ட அரசியல்வாதி ஒருவரின் நிலைப்பாட்டினை இப்பதிலின் வழி நன்குணரலாம்.

## நிர்வாக அதிகாரம் கொண்ட அதிபர் தேர்தல்:

நிர்வாக அதிகாரங்களைக் கொண்ட அதிபர் முறைக்கான திட்டத்தை ம செ க அரசாங்கர் முதன்முதலாக அறிவித்த போது பாட்டாளிகள் கட்சி அத்திட்டத்தைக் கடுமையாக எதிர்த்தது.

சனநாயக முறையில், நாடாளுமன்ற அரசாங்கம் மிகச்சிறந்தது என்பதாலும் அவை நாடாளுமன்றத்திற்கும் வாக்காளர்களுக்கும் பதில் சொல்லக்கூடிய பொறுப்பை ஏற்றிருப்பதால் அம்முறையே சிறந்தது என்பதோடு, 1959ஆம் ஆண்டு சிங்கப்பூரில் இருந்து அனைத்து அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகளை உள்ளடக்கிய குழு இலண்டனுக்குச் சென்று ஏற்றுக்கொள்ளப்பட்ட நாடாளுமன்ற அரசாங்க முறையிலிருந்து சிங்கப்பூர் மாறக்கூடாது என்றும், அப்படியும் மாற்றம் தேவைப்பட்டால் செயற்படுத்துவதற்கு முன்னம் பொது விவாதங்களும் வாக்கெடுப்பும் நடத்தப்பட வேண்டும் என்று வலியுறுத்தியது.

ஆனால், 1993ஆம் ஆண்டு நிர்வாக அதிகாரம் கொண்ட முதலாம் அதிபர் தேர்தல் அறிவிக்கப்பட்டபோது அவற்றில் போட்டியிட முன் வந்த ஜே. பி. முந்தைய எதிர்ப்பிற்கு மாறுபட்ட தம் நிலை, கட்சியின் கொள்கைக்கு எவ்வகையிலும் முரண்பாடானதல்ல என்பதனைத் தெளிவுபடுத்தியிருந்தார். 'சுத்தியலில்' வெளிவந்த விளக்கத்தைப் பார்ப்போம்:

நாடாளுமன்ற அரசாங்க முறையிலிருந்து மாறுபட்ட நிர்வாக அதிகாரங்களைக் கொண்ட அதிபர் முறை சிங்கப்பூருக்குத் தேவையில்லை என்ற கொள்கையில் பாட்டாளிகள் கட்சி இன்னமும் வலுவாக இருக்கிறது.

எனில், நான் ஏன் போட்டியிட வேண்டும் என்பது வினா!

நிர்வாக அதிபர் முறை மாற்றத்திற்கு ம செ க கூறிய முக்கிய காரணம் சிங்கப்பூர் நிதி இருப்பு (கையிருப்பு) வரவு, செலவுத் திட்டத்தினால் குறைவதாகக் கருதினால் அதிபர் தமது ரத்து அதிகாரத்தினால் அவற்றைத் தடுக்கலாம் என்பதே.

அத்தகைய நிலை ஏற்படும் வாய்ப்பிருப்பதாக நான் கருதவில்லை. ம செ க கட்சியில் இருக்கும் வரை, அவ்வதிகாரத்தை அதிபர் பயன்படுத்தும் நிலை ஏற்படும் என்பதை எம்மால் நினைத்துக்கூடப் பார்க்க முடியவில்லை.

ஜே.பி.யின் தூர நோக்குடன் இயைந்த இக்கூற்று முதல் அதிபராக ஓங் தேங் சியோங் பதவியேற்றிருந்த இருபதாம் நூற்றாண்டின் இறுதிக்கூறில் மெய்ப்பட்டது வரலாறு.

நான் தேர்ந்தெடுக்கப்பட்டால் அண்மைய எதிர்காலத்தில் அத்தகைய அதிகாரத்தைப் பயன்படுத்தும் நிலை எனக்கு ஏற்படாது. நாடாளுமன்றமே முடிவு செய்ய வேண்டுமே தவிர, அதிபர் தமது ரத்து அதிகாரத்தைப் பயன்படுத்தக் கூடாது என்பதுதான் எமது கொள்கை. இது தவிர அதிபருக்கு வேறு கடமைகள் இருக்கின்றன என்பது எமது கருத்தாகும். அரசமைப்புச் சட்ட வரம்புக்குள் மக்களின் தேவைகளையும் விருப்பு மற்றும் நம்பிக்கைகளையும் பாதுகாப்பதோடு அவற்றை மேம்படுத்தவும் முடியும் எனத் திடமாக நம்புகிறேன். எனவே, அதிபருக்குப் பயனுள்ள பங்கு இருப்பதை உணர்கிறேன். ம செ கவின் திட்டப்படி அமையும் பணி அல்ல அது. மாறாக, மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் அதிபர் ஆற்ற வேண்டிய பங்கு அதுவே என்பதால் அதிபர் தேர்தலில் போட்டியிட முன்வந்துள்ளேன்.

அதிபராக மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் வாய்ப்பு வழங்கப்பட்டால் நான் ஆற்றக்கூடிய மூன்று இலக்குகளை முன்வைக்கிறேன்.

1. குமுகாயத்தில் சனநாயகமும், நீதியும் வாழ்க்கை முறையாக வலுப்பெறுவதற்கு நாட்டிலுள்ள மக்கள்நாயக அமைப்புகளை மேம்படுத்தி வலுப்படுத்துதல். 2. நம் நாட்டின் பல்வேறு சமூகத்தினரையும் ஒருங்கிணைத்து ஒரே சிங்கப்பூர் சமுதாயமாக்குதல். 3. நமது அமைப்பில் புறக்கணிக்கப்பட்டவர்கள் மீது கவனங்குவித்தல்.

மேற்சொன்னவற்றை நிறைவேற்றுவதற்கு 1971ஆம் ஆண்டு அரசியலில் நுழைந்தது முதல் நேசித்து வரும் இந்நாட்டு மக்களின் திசை நோக்கி தொடங்குகிறேன்.

தேர்தல் எவ்வாறு நடந்தேறியது என்பதற்கு முன்னம் தமது அபிலாசைகளை நடைமுறைப்படுத்துவதற்கு ஜே. பி.க்கு வாய்ப்பு வழங்கப்படவில்லை என்பதனை நீங்கள் அறிந்திருக்க வேண்டும். அஃதாவது தேர்தலில் போட்டியிடும் தகுதியை அவர் பெற்றிருக்கவில்லை என்று அறிவிக்கப்பட்டது.

சிங்கப்பூர் அதிபர் தேர்தலில் போட்டியிட நீதி மன்றத் தலைமை நடுவரைத் தலைவராகக் கொண்டிருக்கும் ஆணையத்திடமிருந்து தகுதிச் சான்றிதழ் பெற்றிருக்க வேண்டும் என்பது விதியாகும். அத்தகு சான்றிதழ் வேண்டி செய்த விண்ணப்பம் அக்குழுவினரால் நிராகரிக்கப்பட்டது என்பது கருத்தில் எடுக்க வேண்டியதாகும். முதலாளிய முட்டுத்தாங்கிகள் ஆட்சிக் கதிரைகளை அலங்கரிக்கும் போது வறுமை ஒழிப்பு, அடிப்படைத் தேவைகள் நிறைவேற்றல், சமநிலை வாழ்வு, சனநாயக அமலாக்கம் என்பதெல்லாம் உதட்டுச் சேவையாகத்தான் விளங்கும் என்பதை இவ்வாறான சம்பவங்கள் நன்கு தெளிவுபடுத்துகின்றன.

**மக்களின் வாழ்விலிருந்து அச்சத்தை அகற்றல்:**

*1997ஆம் ஆண்டு சியாங் சான் எனும் குழுத் தொகுதியில் போட்டியிட்டு 45.2 விழுக்காடு வாக்குகள் பெற்றதனால், கூடுதலான வாக்குகள் பெற்றுத் தோற்றவர் எனும் அடிப் படையில் தொகுதியில்லா உறுப்பினராக நாடாளுமன்றத்திற்கு அனுமதிக்கப்பட்டார்.*

*31.6.98ஆம் நாள் மக்களின் வாழ்விலிருந்து அச்சத்தை அகற்றல் எனும் தலைப்பில் பாராளுமன்றத்தில் ஆற்றிய நீண்ட உரையில் சிறிதைப் பார்ப்போம்:*

துணை சபாநாயகர் அவர்களே.... அச்சம் எப்படி காணக் கிடைக்கின்றது, எங்கே வெளிப்படுகின்றது? அனைத்திற்கும் முதன்மையாக வழக்கறிஞர் தோழர்கள், அவை அரசை எதிர்ப்பதாக அமையும் வர்த்தக வழக்காக இருப்பினும் கூட எதிர்க்கட்சி வேட்பாளர்களின் வழக்குகளை ஏற்று நடத்தக் காட்டும் தயக்கம். இஃது ஏதோ கட்டுக்கதை அல்ல. மாறாய் உண்மை. திரு தேங் லியாங் ஹோங் அவர்கள் தமக்காக வாதாட வழக்கறிஞரை நியமிக்க எதிர்கொண்ட இடையூறுகளை வழக்குமன்றம் சொன்னது.

எட்டிற்கும் குறைவில்லாத வழக்கறிஞர்களை அணுகியும் சில பல காரணங்களால் சம்பவங்களின் சுருக்கத்தை (Brief) ஏற்க முடியாது என்று தெரிவித்துவிட்டபடியால் தம் வழக்கை நடத்த இங்கிலாந்திலிருந்து சட்டத்தரணியை வரவழைக்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்ட அவரின் நிலையை வழக்கு மன்றத்தில் தாக்கல் செய்யப்பட்ட Affidavit வழி அறிய முடிந்தது.

அவரின் மனைவி திருவாட்டி தியோ சியூ ஹர் க்காக நான் இரண்டு மூத்த சிங்கப்பூர் வழக்கறிஞர்களை அணுகி வழக்கை ஏற்று நடத்தும்படி வேண்டினேன். அதற்கு அவர்கள் "திரு செயரெத்னம், தாங்கள் அறியாததல்ல! வேறு வழக்காக இருப்பின் நாங்கள் முற்படுவோம். ஆனால், இத்தகைய வழக்கில் நாங்கள் முற்படுவதை எங்கள் பங்குதாரர்கள் ஒருவேளை விரும்பாமல் போகலாம். ஆகையால், நீங்கள் தவறாக நினைக்கா விட்டால் எம்மால் இயலாது," என்று கைவிரித்தபடியால் அவருக்குச் சார்பாக வாதிட வழி கிடைக்காமல் போனது.

அரசாங்கத்திற்கு எதிரானதாக இருப்பினும் இழப்பீடு பெறுவதற்குத் தகுதியற்ற, ஆனால், நீதியற்ற செயல் சம்பந்தமான சாதாரண வழக்குகளின் சம்பவங்களைக்கூட வழக்கறிஞர்கள் செவிமடுப்பதில்லை. எமது சொந்த அனுபவத்திலிருந்து ஒன்றை உங்களுக்கு மீண்டும் சொல்கின்றேன். "திரு. செயரெத்தினம், நாங்கள் வேறு வழக்கறிஞர்களிடம் சென்றோம். அவர்கள் எங்களுக்காக வாதாடத் தயாராயில்லை," என்று மக்கள் எம்மிடம் வந்து சொல்கின்றார்கள்.

சென்ற பொதுத் தேல்தலுக்குப் பின்னர் ஆங் மோ கியோவுக்குச் சென்று ஒவ்வொரு கிழமையும் குடியிருப் பாளர்களைச் சந்திக்க முடிவு செய்தேன். முதன்முறை அங்குச் சென்றபோது கடைக்காரர் ஒருவர், நான் அமர்ந்து மக்கள் குறைகளைக் கேட்டறிவதற்கு வசதியாக ஒரு சிறிய இடத்தை ஒதுக்கித் தந்தார். வாரத்தில் ஒரு முறை மட்டும் எம்மைச் சந்திக்க வருபவர்களோடு உரையாடி பிரச்சினை களைக் கண்டறிவதற்காக ஏறத்தாழ இரண்டு மணித் தியாலங்கள் மட்டுமே...

ஆனால், இரண்டு வார இடைவெளியில், "திரு ஜெயா, என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்" என்றார். "ஏன்?" என வினவினேன்! "கடைத்தொகுதியைச் சேர்ந்த இடத்தை ஒதுக்கித் தருவதற்கு என்ன துணிவு எனக்கேட்டு வீடமைப்பு வளர்ச்சிக் கழகத்தினர் கடிதம் அனுப்பியுள்ளனர். எனவே, இனி தங்களுக்கு இடம் ஒதுக்க இயலாது," என்றவர் "திரு ஜெயா, தயவு செய்து வேறு இடத்தை தேடிக் கொள்ளுங்கள்," என்று கூறிவிட்டார். நான்அவரோடு விவாதம் செய்வதில் ஏதும் பயனுண்டா! சிங்கப்பூரின் உண்மை நிலை இதுதான்.

"சிங்கப்பூரியர்கள் எதிர்க்கட்சி வேட்பாளர்களாகப் போட்டியிட முன் வருவதில் தயக்கம் காட்டுகின்றனர். நான் இவற்றை மீண்டும் குறிப்பிடுகிறேன். முடிந்த பொதுத் தேர்தலில் நாங்கள் சிறந்த தகுதி கொண்டிருந்த மூன்று வேட்பாளர்களைப் பெற்றிருந்தோம். அவர்களின் பெயர்களை நான் இங்கே குறிப்பிட விரும்பவில்லை. ஆனால், இறுதிக் கட்டத்தில் என்னிடம் வந்து 'எனது மனைவி, குழந்தைகள் மற்றும் சகோதரர்கள் உட்பட அனைவரும் பெரிதும் கவலை கொண்டுள்ளார்கள். மேலும், எதிர்க்கட்சி சார்பில் போட்டியிட முன்வந்திருப்பதானது பித்துப் பிடித்து போனதினாலோ அல்லது வேறு எதனாலோதான் என்று அவர்கள் அனைவரும் கூறுகிறார்கள். எனவே, என்னால் தேர்தலில் போட்டியிட முடியாது,' என்று முடித்தார். 'இதுதான் நிலை என்றால் போட்டியிலிருந்து விலகிவிடுங்கள்," என்று சொன்னேன். ஆகவே, குடிமக்கள் அச்சத்தில் வாழ்கின்ற நிலையில் எங்களால் சிங்கப்பூரில் எப்படி எதிர்க்கட்சிகளை பலமுடையதாகக் கட்டியெழுப்ப இயலும்?"

இப்படியான அழுத்தமான ஆணித்தரமான ஜே. பி. ஜே.யின் நாடாளுமன்ற முழக்கங்களை அடுக்கிக்கொண்டே போகலாம். முற்போக்கான சிங்கப்பூர் சமுதாயத்தை உருவாக்க வேண்டும் என்பதற்காக அனைத்தையும் அர்ப்பணித்த ஒரு போராளியின் பங்களிப்பையும், சந்து முனை சிந்துபாடிகளால் ஆகா, ஓகோ என்று புகழப்படும் சிங்கைத் தீவில் நடப்பு உண்மை நிலையினையும் சிறிதளவாவது வாசகர்கள் தெரிந்திருக்க வேண்டும் என்பதற்காகவே மேற்கண்டவற்றைக் குறிப்பிட வேண்டியதாகிறது.

**மன்னிப்பு கேட்பது எப்போதும் நடப்பது:**

*சரி, யார் அந்த தேங் லியோங் ஹேங்? அவர் என்ன கொம்பரா! அவருக்காக வழக்காட வழக்கறிஞர்கள் முன் வராதது ஏன்! என்ற வாசகர்களின் எதிர்பார்ப்புகள் எமக்குப் புரியவே செய்கின்றது.*

*1997ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் சியங் சான் எனும் நாடாளுமன்ற குழுத் தொகுதியில் ஜே.பி. மற்றும் வேறு இருவரும் இணைந்த குழுவில் பாட்டாளிகள் கட்சி சார்பில் களம் கண்ட சட்டத்தரணி அவர்.*

ஒவ்வொரு முறை தேர்தலிலும் குறிப்பிட்ட ஒருவரை பலிகடாவாக்கி, தீவின் ஒட்டுமொத்த வாக்காளர்களின் கவனத்தையும் திசை திருப்பவது ஆளவந்தாரின் வழமை. *1991 தேர்தலில் யூனோஸ் குழுத் தொகுதியில் பாட்டாளிகள் கட்சி வேட்பாளர்களாக போட்டியிட்ட டாக்டர் லீ சியூ சோ (தனிக் கட்டுரை எழுதுமளவிற்கு வரலாறாய் வாழ்ந்தவர்), வீ ஹன் கிம், நீயோ சூன் அய்க், மற்றும் முகமது ஜீப்ரி மாமுட் ஆகிய நால்வரில் திரு ஜீப்ரி அவர்களை மத அடிப்படைவாதியாகச் சித்தரித்துப் பாட்டாளிகள் கட்சிக்கான வாக்காளர்களின் ஆதரவைச் சிதறடித்தனர்.*

*இருப்பினும் ம செ க வால் 52.4% வாக்குகளை மட்டுமே பெற முடிந்தது. இதனாற்றான் அன்றைய பிரதமர் கோ சோக் தோங், "நாம் வெற்றி பெற்ற போதும் யூனோஸ் முடிவை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. எதிர்கால சிங்கப்பூருக்கான முன்னெச்சரிக்கை இதுவா? என்று அஞ்சுகிறேன்," என்று தேர்தல் முடிவுகள் வெளி வந்த பின் பேசியிருந்தார்.*

*அதேபோல் 97ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் தேங்கை, விவிலிய மத எதிர்பாளராகவும், சீன இனவாதியாகவும் சித்தரித்ததோடு அவரைப் பொய்யர், ஏமாற்றுப் பேர்வழி, அரசியல் அரம்பர் மற்றும் கோழை ஆகிய வெவ்வேறு அடைமொழிகளைச் சூட்டி அழைத்தனர்.*

தொடர்ந்த குற்றச்சாட்டுகளால் சூழல் விபரீதமாகும் என்று எண்ணிய தேங், காவல்துறையில் புகார் செய்தார். சிங்கையின் நதியோரத்தில் நடைபெற்ற தேர்தல் பிரச்சாரக் கூட்டத்தில்,

ஜே.பி. திரண்டிருந்த பாரிய எண்ணிக்கையிலான வாக்காளர்களை நோக்கி "உங்களுக்குத் தெரியுமா! திரு கோ மற்றும் அவர்தம் ஆட்கள் மீது செய்த இரண்டு போலீஸ் புகார்களை திரு தேங் என் முன்னே வைத்துள்ளார்," என்று பேசியிருந்தார்.

ஜே.பி. ஜெயரெத்தினம் கூட்டங்களில் பேசும்போது அவரின் உதட்டிலேயே பலநூறு பேர் தொங்கிக் கொண்டிருப்பார்கள். அவரின் மொழியாளுமை அப்படி. அறச்சினம் கொண்ட சீற்றத்தில் கூட ஆங்கிலம் நாவில் நர்த்தனமிடும். தேர்தல் முடிவுற்றதும் இவ்வுரை தொடர்பாக ஜே.பி. மீது வழக்குத் தொடர்ந்தனர். ஒன்றின் மீது ஒன்றென வழக்குத் தொடுத்து அவரை உழுத நிலமாக்கினார்.

தேர்தல் வெற்றிக்குப் பின்னர் தேங் மீதும் அப்போதைய மூத்த அமைச்சர் லீ குவான் இயூ அவதூறு வழக்கு தொடர்ந்திருந்தார். அவர் சார்பாக தாக்கல் செய்யப்பட்டிருந்த பதில் மனுவில் "சிங்கப்பூரில் தமக்குப் பாதுகாப்பு இல்லை என்னும் தேங், திருட்டு, கார்-களவு, சுடுதல் ஆகியவைகளினால் கெட்ட பெயர் எடுத்துள்ள ஜொகூர் பாருவில்தான் தற்போது தங்கியுள்ளார்," என்ற வரிகள் காணக் கிடைத்தன.

தீபகற்ப மலேசியாவின் தென் மாநிலமான சொகூரில் இருந்த திரு தேங், சட்டத்தரணியும் தமது நண்பருமான தோழர் இராசாக் அமாட் அவர்களோடு இணைந்து முன் சொன்ன AFFIDAVIT விவகாரத்தை செய்தியாளர் கூட்டத்தில் அம்பலப்படுத்தினர்.

மலேசிய நாளேடுகள் (HARRY) ஹாரி குவான் இயூவை எதிர்த்து தலையங்கங்கள் எழுதின. மலேசிய அரசியல்வாதிகள் பொங்கி எழுந்தார்கள். குறிப்பாக ஆளும் அம்னோவின் இளைஞர் பகுதியினர் கொடும்பாவி எரித்தார்கள். நிலைமை முறுகலாக, வழமைபோல் குவான் இயூ AFFIDAVITஇல் இடம் பெற்ற வரிகளை நீக்கத் தம் வழக்கறிஞர்களைக் கேட்டுக்கொண்டதோடு மலேசிய அரசாங்கத்திடம் மன்னிப்பும் கோர, படமெடுத்தாடும் பாம்பு பட்டென்று பெட்டிக்குள் ஒடுங்குவதைப் போல மலையக அரசியல்வாதிகள் குளிர்ந்து போனார்கள். சிக்கல் தீர்ந்தது. பிள்ளையைக் கிள்ளிவிட்டுப் பின் தொட்டிலை ஆட்டி விடுவது என்பதைப்போல், தேவையில்லாமல் முந்திரிக் கொட்டைபோல கருத்துச் சொல்வதும் நிலைமை கட்டுக் கடங்காமல் போகும் போது மன்னிப்புக் கேட்பதும் குவான் இயூவின் அரசியல் அகராதியில் ஒன்றும் புதியது அல்ல.

2001ஆம் ஆண்டு ஜே.பி. திவாலானவர் என்று அறிவிக்கப் பட்டதால் வாக்களிக்கும் உரிமை அற்ற நாடாளுமன்ற உறுப்பினர் கதிரையை இழந்தார். கூடவே தமது அரசியல் வாழ்வைத் துவங்கிய பாட்டாளிகள் கட்சியின் உறுப்பினர் தகுதியிலிருந்தும் விலகினார்.

இந்தக் காலகட்டத்தில் தமது 1997-'99 ஆண்டுகளின் நாடாளுமன்ற உரைகளின் தொகுப்பான "Make it right for Singapore. The Hachet man of Singapore மற்றும் "GOH CHOK TONG's Democracy in spore" ஆகிய புத்தகங்களை சிங்கப்பூர் தீவுத் தெருக்களில் விற்பனை செய்தார்.

"எனது சுயசரிதையை நான் எழுதுவேனா என்று எனக்குத் தெரியாது. ஆனால், எனது அரசியல் வாழ்க்கையைப் பற்றி புத்தகம் எழுதியுள்ளேன்," என்று பேட்டி ஒன்றில் ஒரு முறை கூறியிருந்தார். அவரின் தன்வரலாறு வெளிவந் திருந்தால் அஃது எத்தகைய மதிப்புடைய கருவூலமாகத் திகழும்!

2001ஆம் ஆண்டுத் தேர்தல் களை கட்டியிருந்த நேரம். பரப்புரைகளில் அனல் பறந்தன. இம்முறை நாட்டு அமைதிக்கும், பாதுகாப்பிற்கும் மிரட்டலானவராக உருவகப்படுத்தப்பட்டவர் சிங்கப்பூர் சனநாயக கட்சியின் (SDP) செயலாளர் நாயகம் கலாநிதி சீ சூன் ஜீவானும் அவரின் தங்கையுமாவார்கள். ஜே.பி. இத்தேர்தலில் போட்டியிட முடியாத அளவிற்குத் திவாலாகியிருந்தார்.

அக்காலை, செய்தியாளர்களைச் சந்தித்த குவான் இயூ, "சீயும், ஜெயாவும் வெளிநாடுகளில் சிங்கப்பூரை மட்டம் தட்டுபவர்கள்," என்று பேட்டி தந்திருந்தார்.

"ஓம், லீ குவான் இயூ! சிங்கப்பூரைப் பற்றிய உண்மைகளை உலகுக்குச் சொல்ல ஒவ்வொரு வாய்ப்பையும் பயன்படுத்திக் கொண்டுள்ளேன். சிங்கப்பூர் மக்களின் உரிமைகளைத் தொடர்ந்து மறுத்து வரும் செயலுக்கான எமது விமர்சனத் திற்காக நான் மன்னிப்பு கேட்கப் போவதில்லை. இனியும் தொடர்ந்து பேசுவேன்," என்று சூடாக பதிலடி தந்தார் ஜேபி.

25.10.2004ஆம் நாள் மூன்று நடுவர்களைக் கொண்டிருந்த முறையீட்டு வழக்கு மன்றத்தில் தோன்றி நொடித்துப் போனவர் பட்டியலிலிருந்து தம் பெயரை நீக்கும்படி வாதாடி நின்றார். புதல்வர்களின் உதவியினால் முந்தைய நிலுவைகளை அவரால் செலுத்த முடிந்திருந்தது என்பது அவதானிக்கத்தக்கதாகும்.

எதிர்த்தரப்பிலிருந்து கடுமையான வாதங்கள் முன்வைக்கப்பட்டன. ஜே.பி. அவர்கள் திவாலானவர் பட்டியலிலிருந்து மீள்வதற்கு உரிய நேர்மையைக் கொண்டிருக்கவில்லை என்பதோடு அதற்குத் தகுதியானவர் அல்ல என்றும் கூறப்பட்டிருந்தது.

கடும் போராட்டத்தின் பயனாக ஏறத்தாழ நான்கு வருடங்களுக்குப் பின் அவரின் பெயர் திவாலானவர் பட்டியலிலிருந்து நீக்கப்பட்டு, மீண்டும் கருப்பங்கி அணிந்து வழக்கு மன்றம் சென்றதோடு, அடுக்குமாடி கைதிகளாக வாழும் பாரிய எண்ணிக்கை சிங்கப்பூரர்களுக்கான தமது பணியைத் தொடரும் முகத்தான் புதியதொரு அரசியல் கட்சிக்கான அடித்தள வேலைகளைத் தொடங்கி கடந்த 18.06.08ஆம் நாள் சீர்திருத்தக் கட்சியின் (REFORM) தொடக்க விழாவை நடாத்தி, அக்கட்சியை வலுப்படுத்தும் பெரும் பணிகளை மேற்கொண்டிருந்த பொழுதுதான் சென்ற செப்தம்பர் மாதம் 30ஆம் தேதி அதிகாலை 1.30 மணியளவில் தமது 82ஆம் அகவையில் மறைந்தார்.

தொட்டதற்கெல்லாம் 'நான் முடிவெடுத்தேன், நான் நாட்டை உருவாக்கினேன், நான் கட்டியெழுப்பினேன்' என்று தம்பட்ட மடித்துக்கொள்ளும் குவான் இயூவால் அரசியலிலிருந்தே அழித்தொழிக்கப்பட வேண்டியவர் என்று குறிப்பிடப் பட்டவர் ஜே. பி. ஜே.

கீழ்த்திசை நாடுகளின் கருணையற்ற மிகமோசமான சர்வாதிகாரி என்று சொல்லப்படும் அசகாய சூரராலேயே அரசியலிலிருந்து அகற்ற முடியாத போராளியை இயற்கை பறித்துக்கொண்டுவிட்டது.

குறைபாடுகள் அற்றவர் ஜே.பி. என்று புகழாரம் சூட்டுவது எமது நோக்கமல்ல. மாறாக, அவர் விரும்பியிருந்தால் சொகுசாக வாழ்ந்திருக்கலாம். "எந்தக் கொடுங்கோலர்களும் அதிகாரத்திலிருந்து விலக மாட்டார்கள். அவர்களிடமிருந்து அவை எடுக்கப்படவேண்டும். அவற்றைச் செய்வதற்கு, வாக்குப் பெட்டிகள் நமக்கு வாய்ப்பாகின்றன," என்று அறிவுறுத்திப் பம்பரமாய்ச் சுழன்றவர்.

"அவர் எவரிடமும் மன்றாடவில்லை, கருணைக்காகக் கெஞ்சவில்லை. செயரெத்தினம் அரசியல் அரங்கிலிருந்து தலைநிமிர்ந்து விடைபெறுவார்," என்று சிங்கப்பூரின் முன்னாள் அதிபர் காலஞ்சென்ற சி.வி. தேவன் அவரைப் பற்றிக் கூறியவை காலத்தை வென்ற கவிதை வரிகளாகத் திகழ்கின்றன.

ஜே.பி. யின் நூல்கள் அனைத்தையும் தமிழில் பெயர்ப்பதோடு அவர் பற்றிய விரிவான வாழ்க்கை வரலாற்று நூல் எழுதுவதே நாம் அவருக்குச் செய்யும் மரியாதையாக அமையும்.

தீவின் மிகக் குறைந்த எண்ணிக்கையிலான இடதுசாரித் தோழர்களாவது இவற்றை நிறைவேற்றித் தர வேண்டும். செயலாக்குவார்களா? காலம்தான் பதில் சொல்ல வேண்டும்.●

# பெ.கோ. மலையரசன் கவிதைகள்

## பெயர் நிலைக்கும்

*சுட்டெரிக்கும் கதிரவனாய்ச் சுடர்ந்தே; வானின்
சுடர்மதியாய் ஒளியலையில் மலர்ந்தே! எங்கள்
கட்டறுத்தே இனவாழ்வில் அடிமை தூர்க்கக்
கடனாற்றல் இலட்சியமாய், பகைவர் சூழ்ச்சி
முட்டறுத்தே தமிழீழ விடுதலையை
முன்னெடுத்த தமிழ்ப்பிரபா படையாள் நின்னை
சுட்டெரித்தான் வான்குண்டால் பகைவன், என்ற
துயரத்தை வரிப்புலியே பொறுத்த லுண்டோ!*

*படைபெரிய சிங்களத்தை எதிர்ந்தே, அந்தப்
படையாட்கள் முதுகெலும்பை முறிக்குங் காலை
இடைபுகுந்த வல்லரசுச் சூழ்ச்சிப் பேய்கள்
எந்தமிழர் உரிமைநலம் கிட்டா வண்ணம்
தடைபுரிந்த வேளையிலும் தலைவர் காட்டும்
தன்னுரிமை வெற்றிப்போர்க் களத்தில் நின்ற
படைப்புலியே* ***தமிழ்ச்செல்வ,*** *அமைதித் தூதே
பகைவருனை வீழ்த்தியதால் அமைதி கொன்றார்!*

*காலத்தால் பறிபோன தமிழர் ஆட்சி
கவின்பூத்து எழில்கொஞ்சும் அறிவின் மாட்சி!
ஈழத்தை வென்றெடுக்க அமைதிப் பேச்சை
எடுத்தாளும் படிநிக ராளி யாகி;
மீளத்தாய் நாடடைய வினைக ளாற்றும்
மின்னுலக அமைதி-வெண் புறாவே நின்னை
காலந்தான் பறிக்கவில்லை; எம்கண் முன்னால்
களப்புலியே வஞ்சகரால் மடிந்தாய் அந்தோ!*

*நிலவரையில் ஐம்புலிகள் சூழப் போரின்
நிலை குறித்து போர்த்திட்டம் வகுக்குங்காலை
நிலவரையை ஊடுருவிப் பாயும் குண்டால்
நிலம்பிளக்க அறுவரையும் கொன்றார்! இன்று
கலவரத்தில் சிங்களம்அக் கொடிய வர்க்கே
கயவர்சிலர் உதவுகிறார், விரைந்தன் னாரின்
நிலவரந்தான் மாற்றமுறும் தமிழ்ப்போர் வெல்லும்
நீனிலம்மா வீரர்களின் ஈகம் பேசும்!*

*தமிழினத்தின் தாகம்தமி ழீழத் தாகம்
தண்டமிழர் உயிராகக் கொண்ட மோகம்!
இமிழ்கடல்சூழ் வரைப்பில்வாழ் தமிழர் தம்மின்
எழில்நாடு தாய்நாடு! இஃதை மீட்க
தமிழ்ப்புலிகள் உயிர்க்கொடையின் ஈகப் போரில்*
***தமிழ்ச்செல்வ****! நீயும்ஓர் மறவ னன்றோ?
இமிழ்கடலோ உளவரைக்கும் தமிர்வரைக்கும்
இனியவன்நின் பெயர் நிலைக்கும்; புகழ் நிலைக்கும்.*

## தமிழ்க்குலத்தை வாழ்த்தாயோ!

*மண்ணுலவும் மொழிக்குலங்கள் சாடை காட்டும்
வரிவடிவம் பேச்சின்றி ஊமைப் பாட்டும்
எண்ணியலும் எழுத்தியலும் தோன்றாக் காலை
எண்ணியதை வாயாட முடியா வேளை
விண்ணுலவும் புகழ்க்குரிய அரிய பேறாய்
வியனுலகில் எண்ணெழுத்தைக் கொண்ட சீராய்
மண்ணுலவும் பீடார்ந்த தமிழத் தாயே!
வையமொழிக் கேதுநீ யன்றி வாயே!*

*கழிபலவும் வூழிகளாய்க் கணக்கற் றோரின்
கருதியலின் வழிபடர்ந்து, மொழிப்பற்றாளர்
வழிமொழியாய் வளர்ந்தோங்கி வாழ்வு கொண்டாய்
வையத்தில் நினக்குநிகர் நீயே கண்டாய்!
பழிமொழியார் நின்னெழிலைத் தீய்க்கப் பாடு
பட்டவர்கள் வினையெல்லாம் வெறுமைக் கூடு!
வழிவழியாய் எமைப்புரக்கும் மொழியே வாழி!
வனப்புறுத்தும் வைப்பகம்நீ கருத்தின் ஆழி!*

*அன்பூட்டம் எமக்களித்தாய் அறிவின் ஊட்டம்
அருங்கல்வி பயிலஎம்பால் வைத்தாய் நாட்டம்
பண்பூட்டம் இனிதளித்தாய் பரிவின் ஊட்டம்
பாசத்தைப் பரிந்துரைத்தாய் உயர்வு நாட்டம்
தென்பூட்டம் அளித்தனைநீ சோர்வில் ஆற்றும்
தெளிவூட்டம் கொளவைத்தாய் தோல்வி மாற்றும்
இன்பூட்டும் தமிழ்நீயே சுவைசேர் கட்டம்
இவ்வுலக மொழிக்குலங்கள் நின்முன் மட்டம்!*

*அறிவடர்ந்த பல்கலைசேர் கல்வி கற்றோம்
அன்பறிவு தேற்றம்அவா நின்பால் பெற்றோம்!
செறிவடர்ந்த நின்மறத்தை சிறக்க வார்த்தாய்
செருபகைக்கு அஞ்சாநெஞ் சுரத்தைச் சேர்த்தாய்
நெறிபடர்ந்த வாழ்க்கையிலே ஒழுகி நின்றோம்
நெடுந்தமிழர் பண்புநலம் பேணி வென்றோம்
திருவடர்ந்த தனித்தமிழே, இனிய சால்பே
தென்னவர்க்கு நீ இலையேல் ஏது வாழ்வே!*

*பண்பெழிலார் தாலாட்டில் தூங்க, வைப்பாய்
பழச்சாற்று இலக்கியத்தில் கிறங்க வைப்பாய்
அன்பெழிலார் சொல்லாலே கட்டி வைப்பாய்
அறிவழகால் நெஞ்சத்தை தொட்டு நிற்பாய்
இன்பெழிலை எமக்கூட்டி இனிமை காட்டும்
இனமான நல்லுணர்வை நெஞ்சில் ஊட்டும்
தண்பொழிலார் தாமரையே! தமிழே வாழ்வே
தமிழ்க்குலத்தை வாழ்த்தாயோ இனிய சால்பே!*

# வெள்ளைக்காகிதம்

*மராத்தி மூலம்: சரண்குமார் லிம்பாலே*

*ஆங்கிலத்தில்:* *பிரியா அதர்கர்*

*தமிழில்:* *அன்பாதவன்*

கேட்கவில்லை
உங்கள் வானத்திலிருந்து
சூரியனையோ சந்திரனையோ

உங்கள் பண்ணையை, நிலத்தை
உங்களின் உயரமான வீடுகளை
மேன்ஷன்களைக் கேட்கவில்லை

நான் கேட்கவில்லை
பொருட்களையோ, சடங்குகளையோ
சாதிகளை அல்லது உட்பிரிவுகளை

உங்கள் அன்னையரையோ
சகோதரிகளையோ மகள்களையோ
கேட்கவில்லை

நான் கேட்பதெல்லாம்
மனிதனாக எனது உரிமையை

எனது நுரையீரலிலிருந்து எழும்
ஒவ்வொரு சுவாசமும்
உங்கள் நூல்களில், பாரம்பரியங்களில்
நரக, சொர்க்கங்களில்
அச்சமூட்டும் மாசுகளால்
உண்டாக்குகின்றன பயங்கர அதிர்வுகளை

எங்களின் உறைவிடங்களை சிதிலமாக்க
திரளுகின்றன உங்கள் கைகள்
அடிப்பீர்கள் என்னை உதைப்பீர்கள்
சூறையாடி எரிப்பீர்கள் எங்கள் வீடுகளை

ஆனால் எங்ஙனம் கிழிப்பீர்கள்
கிழக்கில் ஆதவனைப்போல
விதைக்கப்பட்டிருக்கும்
என் வார்த்தைகளை...?

ஜாதிக் கலவரமெனும் தொற்றுநோய்
நகரம் நகரமாக
கிராமம் கிராமமாக
மனிதர் மனிதராக புரையோடும்
பூட்டப்படவும் விலக்கப்படவும்
சாலை மறிக்கப் படவும்
புலம் பெயர்க்கப்படவும் என...

எனது உரிமைகள் எனக்குத் தேவை
தாருங்கள் என் உரிமைகளை

மறுக்க முடியுமா உங்களால்
இப்படி கொளுத்தப்படும் நிலையை

பிடுங்கி யெறிவேன்
ரயில் தண்டவாளங்களைப் போல
வேத நூல்களை
நகரப் பேருந்தைப் போல எரிப்பேன்
நியாயமற்ற உம் நியாயங்களை

எனது உரிமைகள் உதிக்கின்றன
சூரியனைப் போல
மறுக்க முடியுமா உங்களால்
இந்த சூர்யோதயத்தை...?

## புதியவன் கு.முத்துக்குமரனின்

### யதார்த்தம்

‘தண்ணீர்’ என்றேன்.
“அது எப்படி இருக்கும்?”
–கேட்டவன் தஞ்சை விவசாயி.
“பாட்டிலில் இருக்கும்.”
–சொன்னவன் சென்னைவாசி.
●

### காற்றின் ‘கவி’க்கனா

காற்று
புரட்டிக்கொண்டிருந்தது
என் மேசைக்
காகிதங்களை.

‘கவிதை’ எழுதுகிறதோ?

நல்லது,
இனி நானும்
பெருமையாகச்
சொல்லிக்கொள்ளலாம்
‘என் வீட்டுக் காற்றும் கவி பாடும்’ என்று.

கட்டுரை

# பெண் கவிதை அரசியலும் அடையாளமும்

முனைவர் அரங்கமல்லிகா

சமூகத்தை இயக்க மொழி தேவைப்படுகிறது. மொழி, சமூகச் செயற்பாடு சார்ந்தது. மொழி, ஒவ்வொரு தனிநபருக்குமான வேட்கை அடிப்படையில் அமைந்தது. லக்கான், இதைச் சற்று விரிவாக ஆய்கிறார். அதாவது 'மனித அகநிலையே ஆண்மைத்தனமானது' என உறுதியாகக் கூறுகிறார். இந்த அகநிலை, எழுத்துகளில் ஆண் சமூகத் தகுதியை முதன்மைப் படுத்துகிறது. உடல்/பெண் உடல் ஆணினுடை யதாகப் பார்க்கப்படுகிறது. அவள் உடல் நுகர்வுக்குரியது. இதுதான் மொழி மூலம் ஆண் மொழி வழியாக உறுதிபடுத்தப் பட்டிருக்கிறது. பெண் உடல் புனைவு முதன்மையாகி யிருக்கிறது. கலையும் இலக்கியமும் இதை மரபாக்கி யிருக்கின்றன. அச்சமும் நாணமும் பெண்களுக்குரியன என மனித/ குறிப்பாகப் பெண்ணின் செல்களில் திணித் திருக்கிறது; பெண்ணை அடிமையாக்கியிருக்கிறது.

மார்க்சிய, பெரியாரியச் சிந்தனைகள் பெண்ணின் வலியைக் கவனப்படுத்தியுள்ளன. குடும்பப் பணி மற்றும் குடும்பச் சூழலில் அரசியல் முக்கியப்படுத்தப்பட்டன. அன்றாட வாழ்வில் ஆண் செலுத்தும் ஆதிக்கம், குடும்ப வன்முறை பாலியல் வன்முறை, மரபைப் பேணுவதற்குப் பெண் மீது திணிக்கப்படும் அடக்குமுறை, வரதட்சணை, பெண் சிசுக்கொலை, குழந்தைகள் பலாத்காரம் யாவும் பின் காலனித்துவ அரசியலாகப் பார்க்கப்பட்டன. பின் காலனித்துவ அரசியலானது பெண்ணின் தனித்த பிரச்சினைகளிலிருந்து தொடங்குகிறது. இதனால், பெண் காலனித்துவத்திலிருந்து விடுபட வேண்டிய தேவையைப் பெண்ணியம் வலியுறுத்துகின்றது. பெண்கள், பெண் தொழிலாளர்கள், பாலியல் தொழிலாளர்கள், விளிம்புநிலை பெண்கள், தலித் பெண்கள் ஆகியோரின் விடுதலையை மைய நீரோட்டமாக்குகிறது பெண்ணியம்.

மொழியை ஆண்கள் கைக்கொண்டபோது ஆணின் பார்வைதான் பெண்ணுக்கும் இருந்தது. அவர்கள் உலகத்திற்குள் பெண்கள் இயங்கவேண்டி இருந்தது. முலையிடை முளைவிட்ட நோய் நெஞ்சில் வேர்விட்டு, அசைவுடை நெஞ்சத்து உயவுத்திரன் நீடி, காதல் தளிர் பரப்பி, புலவர்கள் புகழும் நாணம் இல்லாத பெரிய மரம் ஆகி நிலம் முழுவதும் பரவி அலரையும் அரும்பையும் பூத்தது. எனினும் இந்நோய்க்கு மாற்று மருந்தான தலைவர் வரவில்லை. முன்பனிக் காலம் நம்மை வருத்த நம் துயரத்தை அவர் அறியவில்லை என்றும், பெண்ணைப் போல மென்மை உணர்வு இல்லாதவன் அதனால் பெண்ணின் தவிப்பு புரியவில்லை என்றும் (அகம், ஔவை, 273) கூறுவதிலிருந்து பெண் உடல் பற்றிய ஔவையின் பதிவு பெண்ணியத் திற்கான நுட்பமான கூறு என்பதை உணர்ந்துகொள்ள முடியும். ஆனால் சங்கப் பெண் கவிஞர்களின் அரசியல் நவீனப் பெண் கவிஞர்களின் அரசியலோடு தொடர்புபடுத்த விடாதபடி காலனித்துவ அரசியல் இயங்குகிறது. இந்தக் காலனிய மரபை எதிர்க்கிறது பின்காலனித்துவப் பெண்ணியம். இதனால் தந்தை அதிகாரம், நிறுவன – பொருளாதார – அரசியல் தத்துவங்களில் மாற்றம் நிகழ்கிறது.

இதன் தொடர் பயணம் பெண் இயக்கங்களில் பரிணமிக்கிறது. விலைவாசி ஏற்றம் தொடங்கி பாலியல் வல்லுறவுவரை பெண்கள் எவ்வாறு எதிர்கொள்கின்றனர்/ எதிர்க்கின்றனர் என்பது பெண்ணியத்தின் தளத்தை விரிவுபடுத்துகின்றது. பெண் பிரச்சினைகள்மீது கவனம் ஏற்படத் தொடங்கிய பிறகு, பெண்ணின் ஆளுகையும் (Dominance), ஆளுமையும் (Personality) பிரதானமாகின்றன. பெண்களுக்குள் சமூகம் சார்ந்த விவாதங்கள் கிளர்ந்தெழு கின்றன. பெண்மீதான தொன்மங்களைக் கட்டுடைக்கின்றனர். தன்னை உணர்த்துதலை, தன்னிலையை மையமாக்குதலைப் பெண்மொழி மூலம் அடையாளப்படுத்துகின்றனர்.

## பெண்மொழியும் அடையாளமும்

பண்பாடும் மொழியும் ஆணுலகைக் களமாகக் கொண்டிருப் பதால், பெண் தனது மனதையும் சிந்தனையையும் கவிதையில் முன்னிலைப்படுத்தும்போது இதுவரை வந்த ஆண் மொழி உடைபடுகிறது. காதலின் எதிர்பார்ப்பும், காமத்தின் தகிப்பும் கலைத்துப் போடப் படுகின்றன. இருப்பும் உறவும் அர்த்தப்படும் முயற்சிதான் பெண் அடையாளமாகும். குறிப்பாக, பெண் கவிஞர்கள் தங்கள் அனுபவங்களை எழுதுவதன் மூலம் தங்களது இருப்பை, வெளியைத் தீர்மானிக்கிறார்கள். மரபுக்கும் புதுமைக்கும் இடையிலான ஓர் இடைவெளியைக் கோடிட்டுக் காட்டுகிறது பெண்மொழி. ஆணுக்கு எதிரான புதுவரலாறு, மாற்று வரலாறு (Neo Historicism) கட்டமைக்கப்படுகிறது. பெண்மொழி கவிதையின் பாடுபொருளில் மட்டும் மாற்றத்தைத் தரவில்லை. மாறாக, திறனாய்வையும் உள்ளடக்கியே பெண்மொழி வெளிப்படுகிறது.

## பெண்மொழி கலகமா? விவாதமா?

பொதுவாக பெண்மொழி, ஆண் கவர்ச்சிக்குரிய பெண் உறுப்புக்களை அழகியல் சார்ந்ததாகப் பார்ப்பதைத் தவிர்க்கிறது. காதல் x காமம் சார்ந்த எதிர்வுச் சிநதனையை மையப்படுத்துகிறது; அரசியலாக்குகிறது. கணவன் x மனைவி இடையே நிலவும் ஆதிக்கத்தைத் தகர்க்கிறது. அதிகாரம் பெண் உடலை மையம்கொண்டது என்ற ஆணின் புரிதலைத் தவிர்த்து பெண் தன்னுடல் மீதான வேட்கையைத் தானே அதிகாரத்தின் மையமாக்கும் தொனியைக் கலகமாக்குகிறது.

பெண்ணுக்குள் திணிக்கப்பட்ட ஆண் மீதான, தந்தை மீதான பயம், சடங்குகளில் கட்டுறுவது, மூடப் பழக்க வழக்கங்களில் முடங்குவது, காம உணர்வுகளை அடக்கிக் கொள்வது, தனிமைப் புலம்பல்களை அங்கீகரிப்பது, அகத்தைக் கலைத்துப் போடுவது எல்லாம் பெண் மொழியில் அடையாளப்படுத்தப்படுகின்றன. கலையும் இலக்கியமும்

எதிர்க்கலாச்சாரத்தைப் பதிவு செய்கின்றன. கவிதையும் திறனாய்வும் ஒன்றோடு ஒன்று கலந்ததாக இருக்கின்றன. 'நிஜமாய் இருக்கிறேன்; முரணானவள் என முகம் சுளிக்கிறார்கள்' என்ற இளம்பிறையின் அகநிலை/அகமொழி பெண்மொழியின் ஊடகமாகும். சுருக்கமாகச் சொல்வ தெனில் பெண் உடல் பெண்ணின் கூடுதல் கவனத்தில் பெண்ணே நுகர்வதை/நகர்வுப் பொருளாவதை எதிர்க்கும் பெண்ணின் வெளிதான்/சுதந்திரம்தான், புனிதங்கள் கட்டுடைவதுதான் பெண்மொழி விவாதமாகிறது. இது கலகமல்ல என்ற புரிதலை பெண் கவிஞர்கள் புரியவைக் கின்றனர். பெண்ணியம் பெண் கவிதைகளின் மூலம் பெண் அடையாளத்தை வலிமையாக்கியிருக்கிறது. பெண்உடல்/ பெண் அடையாளத்தைத் தாண்டி, இனம், மதம், வர்க்கம், சாதி ஆகியவற்றிலும் புதைக்கப்பட்டிருப்பதை இவற்றின் மூலமாக ஆணின் ஆசை முலாம்பூசி இருப்பதை விவாதப்படுத்துகிறது பெண்ணியம்.

இந்தப் போக்கு, சங்க இலக்கிய மரபு, பக்தி இலக்கிய மரபு ஆகியவற்றில் பெண்களின் கவிதைகளிலிருந்து முற்றாகச் செறித்துக்கொண்டு நவீனப் பெண் கவிஞர்களின் கவிதை களோடு தொடர்கிறது. எனினும் பாரதிக்குப் பின் கவிதைத் தளத்தில் பெண்ணியம் இடம் வெற்றிடம்தான். ஏறத்தாழ, 1975–1985 பெண்கள் பத்தாண்டு ஐ.நா. சபையால் அறிவிக்கப் பட்ட பிறகுதான் பெண்ணின் எழுதுகோல் கூர்மையடை கின்றது. எனினும் தொண்ணூறுகளில்தான் உச்சம் பெறுகின்றது. பாரதிக்குப் பிறகு இரா. மீனாட்சி புதுக்கவிதைக் களத்தில் புது நுழைவாகிறார். எனினும் பெண்ணியம் கைவரப் பெறவில்லை. கி. விஜயலட்சுமியின் 'காற்றின் சந்தேகம் (1982), எஸ். சுகந்தி சுப்பிரமணியனின் 'புதையுண்ட வாழ்க்கை' (1988), உமா மகேசுவரியின் 'நட்சத்திரங்களின் நடுவே' (1988), இளம்பிறையின் மௌனக்கூடு, நிசப்தம், முதல் மனுஷி, கனிமொழியின் கருவறை வாசனை (1995), பெருந் தேவியின் தீயுறைத் தூக்கம், ப. கல்பனாவின் பார்வையிலிருந்து சொல்லுக்கு (1998), க்ருஷாங்கனியின் கானல் சதுரம் (1998), பெண் கவிஞர்களின் தொகுப்பான பறத்தல் அதன் சுதந்திரம், சே. பிருந்தாவின் மழை பற்றிய பகிர்தல் (1999), மாலதியின் வரிக்குதிரை (1999) வெண்ணிலாவின் நீரில் அலையும் முகம், குட்டி ரேவதியின் முலைகள், தனிமையில் ஆயிரம் இறக்கைகள், சல்மாவின் பச்சை தேவதை, ஒரு மாலையும் இன்னொரு மாலையும், சுகிர்தராணியின் கைப்பற்றி என் கனவுகேள், இரவு மிருகம், சுபத்ராவின் எந்தன் தோழா, தாமரையின் ஒரு கதவும் கொஞ்சம் கள்ளிப்பாலும், திலக பாமாவின் கூர் பச்சையம்கள், தேவமகளின் முரண், அரங்க மல்லிகாவின் நீர் கிழிக்கும் மீன், தேன்மொழியின் இசையில்லாத இலைகள், பத்மாவதி விவேகானந்தன் கவிதைகள், பாலுமணிவண்ணனின் பெண்ணியக் கவிதைகள், தேன்மொழியின் ஒளியறியா காட்டுக்குள், கவிதாவின் சந்தியாவின் முத்தம் எனும் படைப்புகளின் ஊடாக,

பொதுவாகப் பெண்களின் எழுத்துகள் தன்னிலை உணர்த்தல், காமத்தைப் பந்தியிடல், நீக்குதல், நீங்குதல் பற்றித் தானே எடுக்கும் முடிவுகள், இருப்பின் அடையாளங்களைக் கலைத்துப் போடுதல், அல்லது அடையாளத்தை அற்றுப் போக விடாது செய்தல், சமகால வாழ்வை எதிர் கொள்ளும்போது கடந்த கால வாழ்வை நினைவுபடுத்திக் கொண்டே தன்னைத் தனித்த அடையாளத்திற்குள் நிறுத்திக் கொள்ளல், என நீள்கின்றன. உக்கிரம் நிரம்பி வழியும் பெண் கவிதைகளும் பல விவாதங்களை முன்னர் எழுப்பி யுள்ளன. பெண் கவிதைகளின் தரத்தைத் தீவிரமானதாகவும், சாதாரணமானதாகவும் எண்ணித் தரம் பிரிக்கும், தாழ்த்தும் அரசியல் நிகழ்ந்துள்ளது.

மண் விடுதலை, பெண் விடுதலை, ஈழப் பெண் கவிஞர்கள் புலம்பெயர்தலோடு வலுப்பெறுகிறது. ஈழப்பெண் கவிஞர்கள் எழுதித் தொகுத்த 'மறையாத மறுபாதி' முக்கிய கவனம் பெற்றது. ஆழியாளின் 'உரத்துப்பேச' பெண் மொழியின் உச்சமாகும். போர்க்களக் கவிச்சி, உறவுச் சிதைவு, புலப் பெயர்வு பெண்ணியக் கருத்தாக்கத்தினை விரிவுபடுத்தின. ஆண் அகநிலை தவிர்த்த பெண்ணின் மாற்று வரலாறு. (Neo Historicism) கட்டமைக்கப்படுகிறது. ப்ரியதர்ஷினி, மைத்ரேயி, மல்லிகா, உமையாள், கருணா, நிருபா, கல்யாணி, யாமினி, பஹீமா, கமலா, வாசுகி போன்றோர் "போர்களை நிறுத்திய பின் கருக்களைப் பற்றிப் பேசுவோமாக!" என உக்கிரக்குரலில் முடிவு கூறுகின்றனர். சொல்லாத சேதிகள் (1986) தொகுப்பின் அடுத்தகட்ட நிகழ்வுதான்

தோழர்களே
விலங்குகளுக்கெல்லாம்
விலங்கொன்றைச் செய்தபின்
நாங்கள் பெறுவோம்
விடுதலை ஒன்றை *(சிவரமணி)*

என்ற பதிவாகும்.

தொண்ணூறுகளின் புதுப் பாய்ச்சலில் அம்பேத்கர் நூற்றாண்டுக்குப் பிறகு, எழுந்த தலித் இலக்கியம் இந்துத்துவத்தை வேர் அறுக்கும் பணியை பிரகடனப் படுத்தியது. சிறுகதை, நாவல், கவிதை என விரிந்த இந்தத் தளத்தில் வழக்கம்போல ஆண்களின் கலகக்குரல் உச்சம் பெற்றுள்ளன. தலித் பெண் கவிஞர்களின் அழுத்தம் குறைவாக இருக்கின்றது. சிவகாமி, பாமா, சுகிர்தராணி, அரங்கமல்லிகா, உமாதேவி ஆகியோரின் கவிதைகள் பேசப்படுகின்றன. பாமாவின் ஒப்பாரி, சுகிர்தராணியின் பறக்கடவுள் திரும்பத் திரும்ப நினைவுபடுத்தப்படுகின்றன. அரங்கமல்லிகாவின் கவிதைகளில் 'அக்குளுக்கல்ல இடைத்துண்டு, சிறுதொண்டமாதேவி, கயர்லாஞ்சி போன்ற கவிதைகள் நிலம் – பெண் – பாலியல் வல்லுறவில் வதைபடும் பெண் வாழ்வு முதன்மைப்படுத்தப்பட்டுள்ளன. குறிப்பாக, சாதி இந்துக்களின் கொடூர எதிர்ப்புதான் தலித் பெண் கவிதை அடையாளமாகும். காலந்தோறும் தமிழ்ச் சமுதாயத்தில் ஆண் மரபு காத்தலும் ஆதிக்கத்தை நிலைப்படுத்த பெண்உடல் உடைமையாவதும் தொடர் போராட்டம்தான். பெண்ணுக்கென்று அதிகாரங் கொண்டாட, தன் உடலை தனதாக்கும் முயற்சியில், சமூகத்தைக் கேள்வி கேட்கும் மனம்/அகநிலை உறுதிபெற கலை, இலக்கிய வெளியை விசாலப்படுத்தப் பெண்மொழி பயன்பட வேண்டும். பெண் அடையாளத்தை மீட்டெடுக்கும் பணியில் உலகமயத் தாக்கத்தில் நிலமற்று, பணியற்று, உணவற்று, ஓரங்கட்டப்படும் தலித் பெண்ணின் அடையாளம், புலம் பெயர்தலில் மனப்புழுக்கம் உடலை நெருக்க வதைபடும் பெண்ணின் அடையாளம் பெண் கவிதை அரசியலைக் கூர்மைப்படுத்த வேண்டும்.

நினைத்த பொழுதெல்லாம் வரும் மழை
வேண்டும் பொழுதெல்லாம் கிடைக்கும் மழை

சோர்ந்த பொழுதெல்லாம் பெய்யும் மழை
மகிழ்ந்த பொழுதெல்லாம் கொட்டும் மழை
மனம் அறியும் மழை
உணரும் மனம் மழை

**மாலதி மைத்ரி.**

கட்டுரை

# பாரதியின் வாழ்வில் புதுச்சேரி

**பாரதி வசந்தன்**



பாரதி புதுச்சேரியில் வாழ்ந்த காலத்தில் 1915ஆம் ஆண்டு 'சித்திக் கடல்' எனும் ஒரு சிறுநூலை எழுதி வெளியிட்டான். 'ஜூலை 1ஆம் தேதி' என்று தேதியிட்ட குறிப்புடன் அந்த நூலில்: *'இந்த மனமாகிய கடலை வென்று விடுவேன். பலநாளாக இதை வெல்ல முயன்று வருகிறேன். இந்த மனத்தை வெல்ல நான் படும்பாடு தேவர்களுக்குத்தான் தெரியும். இதிலே ப்ராண பயம், வியாதி பயம், தெய்வ பக்திக் குறைவு, கர்வம், மமதை, சோர்வு முதலிய ஸம்ஸ்காரங்கள் மிகுதிப்பட்டிருக்கின்றன. இவற்றை ஒழித்துவிட வேண்டும். புகையிலைச் சாற்றினால் தலை கிறுகிறுக்கிறது. 20 தரம் புகையிலையை நிறுத்திவிடுவதாக ப்ரதிக்கினை செய்திருக் கிறேன். இதுவரை கைகூடவில்லை. ஸம்ஸ்காரம் எத்தனை பெரிய விலங்கு பார்த்தாயா...? மகனே, ஸம்ஸ்காரங்களைச் சக்தியினால் வென்று விடு. வயிறு வேதனை செய்கிறது, உஷ்ண மிகுதியால். நோயற்று இருப்பதற்குச் சக்தியை ஓயாமல் வேண்டிக்கொள். நோயில்லையென்று மனத்தை உறுதிசெய். மனம் போல் உடல். மகனே, உடலை வெற்றிகொள். அது எப்பொழுதும் நீ சொன்னபடி கேட்க வேண்டும். அது சொன்னபடி நீ கேட்கலாகாது. அது மிருகம். நீ தேவன். அது யந்திரம். நீ யந்திரி...'* என்று குறிப்பிடுகிறான்.

அதே நூலில் 'ஜூலை 2' தேதியிட்டு: *'மனமாகிய குரங்கு செய்வதைசெயல்லாம் எழுதிக்கொண்டு போனால் காலக் கிரமத்தில் அதை வசப்படுத்திவிடலாம் என்பது என்னுடைய கருத்து. ஒன்றை அடக்கு முன்பாக அதன் இயல்புகளை யெல்லாம் நாம் அறிந்துகொள்ள வேண்டும். நம்மால் நன்றாக அறியப்படாததை நாம் வசப்படுத்த முடியாது. சித்தத்தை வசப்படுத்துமுன் சித்தத்தை அறியவேண்டும். அதன் சலனங்களை ஓயாமல் கவனித்து எழுதிக்கொண்டு வந்தால் அதன் தன்மை முழுவதையும் அறிய ஹேதுவுண்டாகு மென்பது என்னுடைய தீர்மானம்.*

---

பராசக்தீ, ஒவ்வொரு கணமும் எனது சித்தம் சலிக்கும் முறைகளை அப்போதப்போது பொய்மையில்லா மலும், வஞ்சகமில்லாமலும் எழுதுவதற்கு எனக்குத் தைரியம் கொடுக்க வேண்டும். நாம் எழுதுவதைப் பிறர் பார்க்க நேரிடும் என்று கருதி துர்ப்பலங்களை எழுத லஜ்ஜை யுண்டாகிறது. பராசக்தி, என் மனத்தில் அந்த லஜ்ஜையை நீக்கிவிட வேண்டும். பாரதியினுடைய மன நடைகளை எழுதப் போகிறேன். நான் வேறு, அவன் வேறு, நான் தூய அறிவு. அவன் ஆணவத்தில் கட்டுண்ட சிறு ஜந்து. அவனை எனக்கு வசப்படுத்தி நோக்கப் போகிறேன். அவனுடைய குறைகளை எழுத அவன் லஜ்ஜைப் படுகிறான். அந்த லஜ்ஜையை நான் பொருட்படுத்தாதபடி அருள் செய்ய வேண்டும்.

---

*'எழுது. பராசக்தியின் புகழ்ச்சிகளை எழுது. அடா! பாரதீ, அதைக் காட்டிலும் உயர்ந்த தொழில் இவ்வுலகத்தில் வேறொன்று இல்லை. பராசக்தி வாழ்க. அவள் இந்த அகில உலகத்துக்கும் ஆதாரம். பத்திரிகைகளுக்கு வியாஸங்கள் எழுத வேண்டும். கடிதங்கள் எழுத வேண்டும். சோம்பர் உதவாது. எப்போதும் பாடுபடு. எப்போதும் உழைத்துக் கொண்டிரு. உழைப்பிலே சுகமிருக்கிறது. வறுமை, நோவு முதலிய குட்டிப் பேய்களெல்லாம் உழைப்பைக் கண்டவுடன் ஓடிப் போய்விடும்.*

*பராசக்தீ, இந்த உலகத்தின் ஆத்மா நீ. உனக்கு அறிவில்லையா...? உனக்குக் காது கேட்காதா...? நாள்தோறும் உன்மீது பாட்டுப் பாடுகிறேன். நான் கேட்கும் வரங்களை யெல்லாம் கொடுத்து விடக் கூடாதா...? முதலாவது எனக்கு என்மீது வெற்றி வர வேண்டும். குழந்தைக்கு ஜ்வரம் வந்தது. நினது திருவருளால் குணமாகிவிட்டது. இரண்டு மாத காலம் இரவும் பகலுமாக நானும் செல்லம்மாளும் புழு துடிப்பது போலத் துடித்தோம்.*

ஊண் நேரே செல்லவில்லை. இருவருக்கும் எப்போதும் சஞ்சலம். பயம், பயம், பயம்! சக்தி உன்னை நம்பித்தான் இருந்தோம். நீ கடைசியாகக் காப்பாற்றினாய். உன்னை வாழ்த்துகிறேன். கடன்காரர் தொல்லையும் அத்துடன் வந்து கலந்தது. வைத்தியனுக்குக் கொடுக்கப் பணமில்லை. குழப்பம், குழப்பம் – தீராத குழப்பம்! எத்தனை நாட்கள்! எத்தனை மாதங்கள்! எத்தனை வருஷங்கள்!

'பராசக்தீ, ஓயாமல் கவிதை எழுதிக் கொண்டிருக்கும்படி திருவருள் செய்யமாட்டாயா...? கடன்கள் எல்லாம் தீர்ந்து தொல்லையில்லாதபடி எனது குடும்பத்தாரும், என்னைச் சார்ந்த பிறரும் வாழ்ந்திருக்க, நான் எப்போதும் உன் புகழை ஆயிர விதமாக புதிய புதிய பாட்டுக்களில் அமைக்க விரும்பு கிறேன். உலகில் இதுவரை எங்குமில்லாதபடி அற்புதமான ஒளிச் சிவப்பும், பொருட் பெருமையும் உடைய பாட்டொன்றை என் வாயிலே தோன்றும்படி செய்ய வேண்டும். தாயே! என்னைக் கடன்காரர் ஓயாமல் வேதனைப்படுத்திக் கொண்டிருந்தால், நான் அரசிக்கும் உப்புக்கும் யோசனை செய்துகொண்டிருந்தால் உன்னை எப்படிப் பாடுவேன்..? எனது குடும்பப் பாரமெல்லாம் உன்னைச் சேர்ந்தது. உன்னைப் புகழ்ச்சிப் புரியும் தொழில் என்னைச் சேர்ந்தது. தாயே, ஸம்மதந்தானா...? மஹாசக்தீ என்னுள்ளத்தில் எப்போதும் வற்றாத கவிதையூற்று ஏற்படுத்திக் கொடு...'

என்று பாரதி பலவிதமாக எழுதுவது அவனின் உள்ளக் கிடக்கைகளை நாம் அறிந்து கொள்ளும் ஆதாரமாய் இருக்கிறது. அதே வேளையில் பாரதிக்குள் ஏற்பட்டிருந்த இத்தனை மன அதிர்வுகள், அல்லது மனப் பிறழ்வுகள், அல்லது மனக் காயங்கள் எப்படி வேண்டுமானாலும் சொல்லலாம், அவை பாரதியினுடைய புதுச்சேரி வாழ்க்கையின் துயரம் மிகுந்த, இடர்ப்பாடுகள் நிறைந்த சம்பவங்களின் சாட்சியமாகவும் திகழ்கின்றன.

உண்மையில் பாரதியின் இந்தச் 'சித்தக்கடல்' நூல்தான் அவனின் புதுச்சேரி வாசத்தை உள்ளது உள்ளபடி நமக்குச் சொல்லிக்கொண்டிருக்கும் காலக் கண்ணாடி; இலக்கிய சாசனம்.

1908ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்திற்குப் பிறகே பாரதி புதுச்சேரி வந்திருக்கக்கூடும் என்பது பாரதி ஆய்வாளர்களின் முடிவு. அந்தக் காலம் பாரதியின் இலக்கிய வாழ்வில் மிகவும் நெருக்கடியான காலம். அவன் சூரத்திலிருந்து சென்னைக்குத் திரும்பி வந்ததும் திலகரின் கொள்கையையும், வழியையும் ஆதரித்துத் தம்முடைய 'இந்தியா' பத்திரிகையில் 'எரிமலையாய்...' எழுதிக் கொண்டிருந்தான். அப்போது திலகருக்கு ஆறு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து திலகர் கோஷ்டியைச் சேர்ந்தவர்களையெல்லாம் பிரிட்டிஷ் அரசாங்கம் அடக்குமுறைக்கு ஆளாக்கியபோது பாரதி மீதும் அவர் நடத்திய 'இந்தியா' பத்திரிகை மீதும் சென்னை சர்க்கார் கடுமையான நடவடிக்கைகள் எடுக்கத் தலைப்பட்டதும் பாரதியின் நண்பர்கள் அவரை உடனே புதுச்சேரிக்குப் போய்விடும்படி ஆலோசனை வைக்கிறார்கள். இந்தச் சமயத்தில் பாரதி, தேச விடுதலைக்காகச் சிறை செல்வதைக் காட்டிலும் கவிதைத் தொண்டு மூலமாக விடுதலை வேள்வியை வென்றெடுக்க வேண்டும் என்று அவர்கள் விருப்பப்பட, அதன்படியே அவனும் புதுச்சேரி வர நேர்ந்தது.

இந்த அரசியல் பின்புலத்தை அறிந்து கொள்ளாது, 'பாரதியார் கோழை, பயங்கொள்ளி என்று சிலர் தவறாக எண்ணிக் கொண்டிருந்தார்கள். சிலர் வாய்விட்டும் சொன்னார்கள். பாரதி பயங்கொள்ளி அல்ல. ஒரு மனிதனுடைய உள்ளத்தின் உண்மையான நிலைமையை, அவன் பேசுகிற பேச்சு தெளிவாகக் காண்பித்துவிடும். பாரதியின் எழுத்திலே அச்சத்தை, தாட்சண்யத்தை லவலேசமும் காண முடியாது. நெருக்கடியில் பயப்படுகிறவன் அவன் அல்லன். பாரதி புதுச்சேரி போவதற்குக் காரணம் அவனுடைய நண்பர்கள். நண்பர்களின் யோசனைத் திறனில், பாரதிக்கு எல்லையற்ற நம்பிக்கை. நண்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கிப் புதுச்சேரியில் அடைக்கலம் புகுந்தபின் பாரதி பட்ட கஷ்டங்கள், சிறைக் கஷ்டங்களைக் காட்டிலும் நிரம்ப ஜாஸ்தி என்றுதான் சொல்ல வேண்டும். 'எண்ணெய் காய்கிற இருப்புச் சட்டியிலிருந்து, எரிகிற நெருப்பில் வீழ்ந்த கதையைப் போல ஆயிற்று பாரதியாரின் புதுச்சேரி வாசம்...' என்று பாரதியால் 'தமிழ்நாட்டுத் தேசபக்தன்' என்று அரவிந்தரிடத்தில் அறிமுகம் செய்துவைக்கப்பட்ட வ.ரா. என்கிற வ. ராமஸ்வாமி ஐயங்கார் தம்முடைய 'மகாகவி பாரதியார்' நூலில் குறிப்பிடுவது பாரதியின் புதுச்சேரி வாழ்வின் இன்னுமொரு இலக்கியப் பதிவு.

பாரதி புதுச்சேரி வந்தபோது சிட்டி குப்புசாமி ஐயங்கார்தான் அவனுக்குத் தங்கும் இடம் அளித்து அவனை ஆதரித்தவர். இந்தச் செய்தி சென்னை அரசாங்கத்துக்குத் தெரியவந்ததும் அவர்களுடைய தூண்டுதலின் பேரில் புதுச்சேரி பிரெஞ்சு அரசாங்கப் போலீசார் ஐயங்காரை மிரட்டவே அவர் பயந்துபோய் பாரதியைத் தம் வீட்டிலிருந்து வெளியேற்றிவிட்டார்.

---

பாரதிக்கு ஊர் புதிது; கையில் காசு இல்லை; என்ன செய்வது என்று தெரியாத நிலையில் பாரதி பிரிட்டி ஷாருக்குப் பயந்து இங்கே ஓடிவந்துவிட்டார் என்று புதுச்சேரிவாசிகளில் சிலர் யோசனையின்றிப் பேசத் தொடங்கியிருந்தார்கள். அவனை ஜனங்கள் கொஞ்சம் கொஞ்சமாய்த் தெரிந்து கொள்ளவே, ஒருவகையாக ஏற இறங்கப் பார்த்தார்கள். பாரதி புதுச்சேரிக் கடற் கரையில் அமைக்கப்பட்டிருந்த இரும்புப் பாலத்தின் பெஞ்சியின் மேல் உட்காரப் போனால், அதற்கும் முன்பு வேறு எவரேனும் அங்கே உட்கார்ந்திருந்தால் அவர்கள் அவனைப் பார்த்ததும் பெஞ்சியைக் காலிசெய்துவிட்டு சொல் லாமல் கொள்ளாமல் அவ்விடத்தை விட்டுப் போய் விடுவார்கள். அதற்குக் காரணம் பாரதி மீதிருந்த மரியாதை அல்ல. அவனைப் பற்றித் தப்பும் தவறு மாகத் தெரிந்துகொண்டிருந்த மிதமிஞ்சின பயம்தான்.

---

இத்தகைய மோசமான சூழலில் குவளை கிருஷ்ணமாச்சாரியார் பாரதியைத் தம் நண்பர் சுந்தரேசய்யரிடம் அழைத்துப் போக, அவர் பாரதிக்குத் தகுந்த வீடமர்த்தி, வேண்டிய உதவியையெல்லாம் செய்து கொடுத்து ஆதரித்தார். அந்தச் சமயம் மண்டையம் சீனிவாசாச்சாரியாரும் புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தார். புதுவையில் முன்னமே எல்லோரிடத்தும் பழகியிருந்த அவர் பாரதியைப் பல நண்பர்களுக்கும் அறிமுகம் செய்துவைத்தார்.

அதோடு 'இந்தியா' பத்திரிகையை சென்னையிலிருந்து புதுவைக்குக் கொண்டுவர அவர் ஏற்பாடுகள் செய்ய, அதனைத் தொடர்ந்து அச்சு இயந்திரங்களும் மற்றவையும் இங்கு வந்து சேர்ந்தன. 'ரூய் துய்ப்ளேக்ஸ்' இலிருந்து (இன்றைய நேரு வீதி) ஒரு கட்டடத்தை வாடகைக்கு எடுத்து பாரதி அங்கிருந்தவண்ணம் 'இந்தியா' பத்திரிகையை நடத்தத் தொடங்கினான்.

சிவப்பு நிறத் தாளில் அச்சிடப்பட்ட 'இந்தியா' பத்திரிகை சற்றேறக்குறைய 16 பக்கங்கள் கொண்ட வார இதழாக விளங்கியது. ஒவ்வொரு இதழிலும் முதல் பக்கத்தில் ஒரு கேலிச் சித்திரம் வெளியிடப்பட்டது. வெளியூர்ச் செய்திகள், பொது வர்த்தமானங்கள், மக்களின் குறைகள் பற்றிய செய்திகள், புத்தக மதிப்புரைகள் ஆகியவற்றை வெளியிட்டு அது மக்களை உற்சாகப்படுத்தி வந்தது. அவ்வப்போது புதுவை வாழ்க்கை பற்றிய செய்திகளும் 'இந்தியா'வில் வெளிவந்தன. பாரதி, தம் கட்டுரைகளில் மக்களுக்கு ஓட்டுரிமை அளித்த பிரெஞ்சு அரசாங்கத்தைப் புகழ்ந்தும், பிரான்சானது 'சமத்துவம், சுதந்திரம், சகோதரத்துவம்' ஆகியவற்றுக்குத் தாயகமென்றும் எழுதிவந்தான்.

'இந்தியா' வாரம்தோறும் தேசிய எழுச்சியைப் பற்றிய பல அரிய விஷயங்களைத் தாங்கிக்கொண்டு வந்தது. நாடு விரைந்து சுதந்திரம் அடைவதற்காகத் தீவிர தேசிய இயக்கத்தை நடத்திய தேசியவாதிகளுக்கு முட்டுக் கட்டைபோட்ட மிதவாதிகளை பாரதி தயக்கமின்றித் தாக்கி எழுதினான். கேலிச்சித்திரம் ஒன்றில் அவர்களைச் 'சுதேசிய ஒளிக்கு அஞ்சும் ஆந்தைகள்...' என்று பழித்தான்; அவ்வாறே பிரிட்டிஷாரின் அதிதீவிர ராஜவிசுவாசியான வி. கிருஷ்ணசாமி ஐயரின் 'கன்வென்ஷன்' முயற்சியைப் 'பசுத்தோல் போர்த்த புலிக்குட்டி...' என்று தன் சித்திரத்தில் நையாண்டி செய்தான்; 1908 ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் சென்னையில் மிதவாதிகள் நடத்திய கூட்டத்தைச் 'சென்னையில் ஆட்டு மந்தை...' என்ற தலையங்கத்தில் பரிகசித்தான்; 1908 அக்டோபர் 31ஆம் தேதி இதழில், 'அன்னிய பெசண்ட்' என்ற தலைப்பின் கீழ் அன்னிபெசண்ட் அம்மையார் இந்திய சுதந்திர விருப்பத்திற்கு எதிராகச் செய்துவந்த முயற்சிகளையெல்லாம் வரிசைப்படுத்தி எழுதினான். அதன்பின் ஒரு தலையங்கத்தில், 'ஸ்வதந்திரம் அடைய விரும்புவோர் செல்ல வேண்டிய பாதை மல்லிகை இதழ்கள் தூவிய பாதையன்று. கல்லும், முள்ளும் பரப்பிய பாதை. செங்குத்தான வழி. அதை வெகு சுலபமாக அடைந்துவிடலாமெனச் சில சுகவாசிகள் நம்புகின்றனர். நம் நோக்கம் எத்தனைக்கெத்தனை பெரிதோ, அத்தனைக்கத்தனை நம் முயற்சியும் பெரிதாயிருக்க வேண்டும். மந்திரத்திலே மாங்காய் விழாது. பயந்து செய்யும் ஓரிரண்டு செய்கைகளால் நம் நாட்டுக்குச் சுயாதீனம் கிடைக்காது. விடா முயற்சியும், சித்த சுத்தியுமே துணைகளாகும். வேறு துணையில்லை...' என்று எழுதிய பாரதி 'இந்தியா' பத்திரிகையில் எத்தனையோ சுவையுள்ள பல அரசியல், பண்பாடு, சமயம், சமூகம், கலை, மொழிகள் பற்றிய கட்டுரைகளையும், வரலாறுகளையும் எழுதினான். 'அமிர்த பஜார்', 'வந்தே மாதரம்' போன்ற வடநாட்டுப் பத்திரிகைகளில் வெளிவந்த அரிய கட்டுரைகளை மொழிபெயர்த்தான். அரவிந்தர் வங்காளத்திலும், சூரத் காங்கிரசுக்குப் பின் பல இடங்களிலும் ஆற்றிய சொற்பொழிவுகள், அவர் 'வந்தே மாதரம்', 'கர்மயோகின்' ஆகிய பத்திரிகைகளில் எழுதிய கட்டுரைகள், 'இந்தியா' நிருபர் அரவிந்தரை கல்கத்தாவில் பேட்டி கண்ட விஷயங்கள், அரவிந்தர் தம் மனைவிக்கு எழுதிய கடிதங்கள் ஆகியவை 'இந்தியா' பத்திரிகையில் மிகவும் சிறப்புடன் வெளியிடப்பட்டன. பாரதி, 'மலைப்பாம்பும் குரங்குகளும்', 'ஓநாயும் நாயும்', 'பஞ்சகோணக் கோட்டையின் கதை' ஆகிய சிறுவர் கதைகளையும் 'ஞானரதத்தின்' பகுதியையும் எழுதி புதுச்சேரியிலிருந்து வந்துகொண்டிருந்த 'இந்தியா'வுக்கு புதுப்பொலிவை ஏற்படுத்திக் கொடுத்திருந்தான்.

1909ஆம் ஆண்டு பிப்ரவரி 6ஆம் தேதியிட்ட 'இந்தியா' இதழில் 'மாதாவின் கட்டளை' என்றொரு கட்டுரை. அதில்

'தொழிலாளிக்கும், விவசாயிகளுக்குமே பூமி சொந்த மானது; மனித சமூகத்தில் இவர்களே தேனீக்கள். மற்ற நம் போன்றோரெல்லாம் பிறர் சேகரித்து வைத்த தேனை உண்டு திரியும் வண்டுகள். தொழிலாளிகளையும், விவசாயிகளை யுமே நாம் 'வந்தே மாதரம்' என்ற மந்திரத் தால் வணங்குகிறோம். இவர்களுடைய எண்ணங்களும், ஆசைகளும், பிரார்த்தனை களும் மற்றோர்களால் கட்டளைகளாகப் பாராட்டிப் போற்றத் தக்கனவாகும்...'

என்று மிக அருமையாக எழுதிய பாரதி அதே ஆண்டு ஜூன் 12ஆம் தேதியிட்ட 'இந்தியா' இதழில் 'கடல்' என்ற தலைப்பில் அரவிந்தர் எழுதிய கவிதை ஒன்றின் மொழி பெயர்ப்பை வெளியிட்டிருந்தான்:

'வெள்ளைத் திரையாய், வெருவுதரு தோற்றத்தாய்
கொள்ளை ஒலிக்கடலே நல்லறம் நீ கூறுதிகாண்

விரிந்த பெரும்புறங்கள் மேல்எறிந்துஉன் பேயலைகள்
பொருந்தும் இடையே புதைந்த பிளவுகள்தாம்

பாதலம்போல் ஆழ்ந்திருப்பப் பார்க்கரிதாய் அவற்றின்
மீதுஅலம்பி நிற்கும் ஒரு வெள்ளைச் சிறுதோணி...'

என்று தொடங்கும் கவிதையில், 'ஸ்ரீமான் அரவிந்தகோஷ் 'கடல்' என்ற தலைப்பின்கீழ் ஆங்கில பாஷையில் சில கண்ணிகள் புனைந்து, அவற்றை 'மாடர்ன் ரெவியூ' (நவீன பரிசோதகம்) என்ற கல்கத்தா மாதப் பத்திரிகையில் பிரசுரம் செய்திருக்கிறார். தாய் நல்லுணவு சமைப்பதைப் பின்பற்றிக் குழந்தை மணற்சோறாக்கி விளையாட்டுச் சமையல் செய்வதைப் போல, அந்த மகானுடைய செய்யுளை நான் அன்பினால் மொழிபெயர்க்க நேர்ந்தது. இதில் எனக்குத் தெரிந்தே பல வழுக்கள் இருக்கின்றன. பாஷை வேறுபாடு முதலிய காரணங்களால் இவ்வழுக்களை நிவர்த்தி செய்வது மிக்க கஷ்டமாயிருக்கிறது. இவற்றையும் எனக்குத் தெரியாமல் வீழ்ந்திருக்கும் பிழைகளையும் கற்றோர் பொறுத்தருளுமாறு வேண்டுகிறேன்...' என்று தம்முடைய மொழிபெயர்ப்புக்காக மிகவும் வருத்தப்படும் பாரதி, மீண்டுமாக, அதே குறிப்பில், 'இம்மொழிபெயர்ப்பைச் சகல ஜனங்களுக்கும் தெளிவாகும்படி மிக எளிய நடையிலே அமைக்க வேண்டுமென்று சிரமப்பட்டிருக்கிறேன். என்னையுமறியாமல் அகராதிப் பண்டிதர்களுடைய 'கற... கற...' மொழிகள் விழுந்திருக்கின்றன. செய்யுள் அமைதி நாடி அம்மொழிகளுக்கு எளிய பிரதிபதங்கள் போடாமல் இருந்துவிட்டேன். இதன் பொருட்டும் படிப்போர்கள் க்ஷமிக்குமாறு பிரார்த்தனை செய்கிறேன்...' என்று தன் மொழி ஆளுமையை, தன் புலமையைத் தாழ்த்திக் கொண்டு எழுதுவது பாரதியின் இலக்கிய அனுபவத்தில் மிகவும் அபூர்வமான இடமாகும்.

'எளிய பதங்கள்; எளிய நடை; எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சந்தம்; பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவியமொன்று தற்காலத்திலே செய்து தருவோன் நமது தாய்மொழிக்குப் புதிய உயிர் தருவோனாகின்றான். நன்கு பொருள் விளங்கும்படி எழுதுவதுடன் காவியத்துக்குள்ள நயங்கள் குறைவுபடாமலும் நடத்தல் வேண்டும்...' என்கிற 'கவிதை இலக்கியக் கொள்கை' உடைய பாரதி, அரவிந்தரின் மொழிபெயர்ப்பில் தம்மைத் தாமே குறைத்து மதிப்பிடுவதும், தம்முடைய 'சுயசரிதை'ப் பாடல்களின் முன்னுரையில், 'இச்சிறிய செய்யுள் நூல் விநோதமாக எழுதப்பட்டது. ஒரு சில பாட்டுகள் இன்பமளிக்கக் கூடியனவாகும். பதர் மிகுதியாகக் கலந்திருக்கக் கூடும்...' என்று எழுதுவதும் பாரதியின் 'தமிழ் குறித்த தன்னடக்கம்...' என்று கருதுவதற்கு இடமில்லாமல், இவை பாரதி தன் ஒட்டுமொத்த கவிதை இலக்கியம் குறித்துத் தமக்குத் தாமே செய்துகொண்ட சமநோக்குடைய ஒப்பீட்டு இலக்கியத் திறனாய்வு என்றே கருத இடமிருக்கிறது. பாரதி எப்போதும் மற்றவர்களுக்குத்தான் மகாகவி; தனக்கு மட்டும் அவன் தத்துவ விசாரங்களில் அகப்பட்டுச் சதாகாலமும் தன் தமிழில் எதையோ தேடிக் கொண்டிருக்கிற ஞானக்கிறுக்கன்.

'ஸ்வதந்தரமில்லா வாழ்க்கை ஓர் வாழ்க்கையன்று; அது பன்றி வாழ்க்கையினும் இழிந்தது...' என்ற பாரதியின் 'பிரகடனத்தோடு...' வெளிவந்த 'இந்தியா' வார இதழ் ஓராண்டு ஐந்து மாதங்கள் நடந்துவந்து அரசாங்கத்தின் அடக்கு முறையின் காரணமாக 13–03–1910 இல் வெளியான கடைசி இதழோடு நின்றுவிட்டது. அதற்கு முன்னரே பாரதி, தன் வீட்டை ஈஸ்வரன் தர்மராஜா கோயில் வீதியின் கோடியில் இருந்த 'விளக்கெண்ணெய்ச் செட்டியாரின்...' வீட்டுக்கு மாற்றிக் கொண்டுவிட்டிருந்தான்.

இந்தச் செட்டியார் பாரதியிடத்தில் வீட்டு வாடகைப் பணத்தைக் கேட்டதே கிடையாது. செட்டியார் வருவார். பாரதி பாடிக்கொண்டிருக்கும் பாட்டைக் கேட்பார். பிறகு மௌனமாய் வெளியே போய்விடுவார். பாரதி பேச்சுக் கொடுத்தால் ஒழிய செட்டியார் தாமாக ஒன்றும் பேச மாட்டார். இவரின் வீடு பாரதிக்கு சங்கப் பலகை; கான மந்திரம்; அபய விடுதி; சுதந்திர உணர்ச்சிக் களஞ்சியம்; அன்னதான சத்திரம்; மோட்ச சாதன வீடு; ஞானோபதேச அரங்கம். அத்தகைய சிறப்புடைய விளக்கெண்ணைய்ச் செட்டியாரின் வீடு மட்டும் இல்லாது போயிருந்தால் பாரதியின் புதுச்சேரி வாசமும், அவனுடைய வாழ்க்கையும் பாழாய், பாலைவனமாய்ப் போயிருக்கும் என்பது நிதசர்னமான உண்மை.

இதற்கிடையில் அரவிந்தர் 1910ஆம் ஆண்டு ஏப்ரல் 4ஆம் தேதி கல்கத்தாவிலிருந்து புறப்பட்ட 'துய்ப்ளேக்ஸ்' என்கிற கப்பலில் இரகசியமாக ஏறி புதுவைக்கு வந்து சேர்ந்தார். அவர் வந்த ஆறு மாதங்களுக்கெல்லாம் வ.வே.சு. ஐயரும் புதுவை வந்து சேர்ந்தார். ஏககாலத்தில் யாவும் நடைபெற அரவிந்தரின் 'கர்மயோகின்' என்கிற ஆங்கில வாரப் பத்திரிகை 40 இதழ்கள் வந்து நின்று போனது. பாரதி அந்தப் பத்திரிகையைத் தழுவி 'கர்மயோகி' என்கிற மாதப் பத்திரிகையைத் தொடங்கினான். அது புதுச்சேரியில் சைகோன் சின்னையா அச்சுக்கூடத்தில் அச்சடிக்கப்பட்டது. அச்சு முத்துமுத்தாய் அழகாயிருக்கும் என்பதும், அதில் எழுத்துப் பிழை எதுவும் இருக்காது என்பதும் 'கர்மயோகி' இதழின் பிரதான விசேஷங்களுள் ஒன்று. 'இந்தியா', 'கர்மயோகி' தவிர பாரதி புதுச்சேரியில் வாழ்ந்திருந்த காலத்தில் 'சூர்யோதயம்', 'விஜயா' ஆகிய பத்திரிகைகளையும் நடத்தியதாகத் தெரிகிறது.



ஒரு சந்தர்ப்பத்தில் இந்தப் பத்திரிகைகள் யாவும் அடியோடு நின்றுபோய்விட அதன் பின்னரே புதுவையில் பாரதியின் படைப்புகள் யாவும் 'காட்டாற்று வெள்ளம் போல...' கணக்கின்றி வெளிவரத் தொடங்கின. வேதாந்தப் பாடல்கள், சக்திப் பாடல்கள்; பெண் விடுதலைப் பாடல்கள், சுய சரிதை, வசன கவிதை போன்ற தமிழின் உன்னதமான படைப்புகளும், 'கண்ணன் பாட்டு', 'குயில்பாட்டு', பாஞ்சாலி சபதம்' ஆகிய மூன்று சிறு காப்பியங்களும் ஏறக்குறைய இக்காலத்தில்தாம் வெளிவந்து கவிதையை மக்களின் கௌரவம் மிகுந்த கலையாக்கமாக மாற்றி அமைத்தது. இவற்றிலெல்லாம் பாரதியின் கவிதை உணர்ச்சி பொங்கிப் பீறிட்டுக் கிளம்பியது; தடைகள் யாவற்றையும் உடைத்துத் தமிழை இலக்கிய சிகரத்தின் மேல் ஏற்றியது. பாரதி தம் படைப்புகளில் மக்களின் வாழ்வையும், அதன் இன்ப, துன்பங்களையும் பெரும் துயரங்களையும், மனித சமூகத்தின் விடுதலை வேட்கையையும், வாழ்வின் மகத்தான இலட்சியங்களையும், மனச் சித்திரங்களையும் அழகுபட, நேர்ப்பட, கவிதா மேன்மையோடு எவருக்கும் அஞ்சாது பதிவுசெய்த இடம் புதுச்சேரி என்பதை அவனின் படைப்புகளே நமக்கு அறிவித்துக்கொண்டிருக்கின்றன.

---

புதுச்சேரிக்கு வடக்கே முத்தியாலுபேட்டை என்ற ஊர் இருக்கிறது. பாரதியின் காலத்தில் அங்கே கிருஷ்ணசாமி செட்டியார் என்கிறவர் இருந்தார். அவர் ரொம்பவும் குள்ளம். நல்ல கெட்டியான, இரட்டை நாடி உடம்பு கொண்டவர். பாரதி அவரிடம் உடலிலோ, மனத்திலோ சோர்வை ஒருநாளும் பார்த்ததில்லை. அவருடைய உடல் உறுதியின் காரணமாகப் பாரதி அவருக்கு 'வெல்லச்சுச் செட்டியார்' என்கிற அருமையான செல்லப் பெயரைக் கொடுத்திருந்தார். அந்தச் செட்டியாருக்கு முத்தையாலு பேட்டையில் சொந்தமாக ஒரு தோப்பு இருந்தது. புதுச்சேரியில் பாரதி மிகவும் விரும்பிப் போகும் இடங்களுள் ஒன்றான அந்தத் தோப்புதான் பாரதியின் புகழ்பெற்ற 'குயில் பாட்டு' உருவான களம்.

---

'காலை இளம்பரிதி வீசும் கதிர்களிலே
நீலக் கடலோர் நெருப்பெதிரே சேர்மணிபோல்

மோகனமாம் சோதி பொருந்தி முறைதவறா
வேகத் திரைகளினால் வேதப் பொருள்பாடி

வந்து தவழும் வளஞ்சார் கரையுடைய
செந்தமிழ்த் தென்புதுவை என்னும் திருநகர்...'

என்று இன்றளவும் புதுச்சேரிக்குப் பெருமை சேர்த்துக் கொண்டிருக்கிற இந்தக் கவிதையைத் தந்த அந்தத் தோப்பு 1914ஆம் ஆண்டில் தமிழகம் மற்றும் புதுச்சேரி முழுதும் கடுமையான காற்றும், மழையும், புயலும் அடித்த காலத்தில்

எந்தச் சேதாரமுமின்றி தப்பியது மிகவும் சிறப்பான செய்தியாகும். தப்பிப் பிழைத்த அந்தத் தென்னந்தோப்பைப் பற்றி பாரதி 'பிழைத்த தென்னந்தோப்பு...' என்ற தலைப்பில் அருமையான ஒரு கவிதையாய் எழுதியிருந்தான். பாரதியின் கவிதைக்கு காக்கையும், குருவியும், நீள் கடலும், மலையும் மட்டுமல்ல புதுச்சேரியில் இருந்த ஒரு தென்னந்தோப்புக்கூட பாடுபொருளாகி அவன் பாட்டுத் திறத்தை இந்த வையகத் திற்குப் பறை சாற்றியிருக்கிறது.

ஒரு சமயம் பாரதியின் வீட்டருகே ஒரு பாம்பாட்டி வந்தான். அவனைப் பார்க்கக் குழந்தைகளுக்குக் கொஞ்சம் பயமாகவும் அதே சமயம் வேடிக்கையாகவும் இருந்தது. ஒரு பிரெஞ்சுக்காரனின் வீட்டு வேலைக்காரன் பாம்பாட்டிக்குக் காலணா போட்டான். பாரதி தன் நண்பரும் மண்டையும் சீனிவாசாச்சாரியாரின் மகளுமான சிறுமி யதுகிரி மற்றும் சிலருடன் அந்தப் பாம்பாட்டி மகுடி வாசிப்பதையே கேட்டுக் கொண்டிருந்தான். அவர்களைப் பார்த்ததும் பாம்பாட்டிக்கு 'குஷியாகி...' விட்டது. உற்சாகமாக ஊதினான். அவன் மகுடி ஊதுவதையே நீண்ட நேரமாய்க் கவனித்துக் கொண்டிருந்த பாரதிக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை. சட்டென்று தான் போட்டிருந்த மேலாடையைக் கழற்றி அவனிடத்தில் கொடுத்துவிட்டு வெறும் வேஷ்டியுடன் நின்றான். அதைச் சற்றும் எதிர்பாராத பாம்பாட்டி மனம் மகிழ்ந்து பாரதியை வணங்கி விட்டுச் சென்றான்.

வீட்டுக்குத் திரும்பியதும் பாரதியிடத்தில் யதுகிரி கேட்டாள்...

"ஏன் அந்தப் பாம்புப் பிடாரனுக்குப் போய் உங்கள் சட்டையைக் கழற்றிக் கொடுத்தீர்கள்..."

"எனக்கு நாலுபேர் கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள்... அந்த ஏழைப் பாம்பாட்டிக்கு யார் கொடுப்பார்கள். நானே அதைப் பற்றி யோசிக்கவில்லை... உனக்கெதற்கு அந்தக் கவலை...?" என்று பாரதி கொஞ்சமும் தாமதிக்காமல் சிரித்தபடி சொல்ல, யதுகிரி அவரையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

மறுநாள் மாலையில் பாரதி, தான் எழுதிய சில தேசியக் கவிதைகளை நண்பர்களிடத்தில் பாடிக்காட்டிக் கொண்டிருந்தான். அதிலே ஒன்று 'வந்தே மாதரம் என்போம் / எங்கள் மாநிலத் தாயை வணங்குதும் என்போம்...' என்கிற அற்புதமான கவிதை. இதில் சிறப்பம்சம் என்னவென்றால் நேற்று அந்தப் பாம்பாட்டி மகுடியில் வாசித்தானே அதே மெட்டில்தான் பாரதி அந்தக் கவிதையை எழுதியிருந்தான் என்பது பலருக்கும் தெரிந்திராத செய்தி. பாரதி, தன் கவிதைகளுக்காக கண்களை மூடிக்கொண்டு வெறுமனே கனவுலகில் சஞ்சரித்தவன் இல்லை. மாறாக அவன் தன் கவிதைக்கான ஆன்மாவைத் தான் நேசிக்கும் மனித சமூகத்திடமிருந்தே தேர்வு செய்து கொண்டவன்.

ஆனால், அவன் காலத்துப் புதுச்சேரி பாரதியை ஒரு கவிஞனாக ஏற்றுக்கொள்ள முன்வராத ஓர் இலக்கியக் கொடுமையை ஏற்படுத்தியிருந்தது. 'இவனெல்லாம் இங்கிலீசு படிச்சுப்பிட்டுத் தமிழ்ப் பாட்டு எழுதறானுங்க. சுட்டுக்கு முன்னால் வல்லெழுத்து மிகும் என்கிற சாதாரண இலக்கணமே தெரியவில்லை. 'அங்கு கண்டான்...' என்று எழுதுகின்றான். இவனெல்லாம் கவியாம்...' என்று ஏளனமாகப் பாரதியைப் பழித்தவர்கள் உண்டு. அப்போது பாரதி அது பற்றியெல்லாம் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. 'நமக்குத் தொழில் கவிதை...' என்று அவன்பாட்டுக்குத் தன் பாட்டுப் பயணத்தை நடத்திக் கொண்டிருந்தான். இன்றைக்கு அவனே ஒரு 'பாட்டுத் தத்துவமாக...', 'பாட்டின் இயலாக...' எல்லாவற்றுக்கும் மேலாகப் 'பாட்டுக்கொரு புலவன்...' ஆக இருப்பதைப் பார்க்க முடிகிறது.

'பலர் இலக்கணப் பயிற்சிகூட இல்லாமல் பத்திரிகைக்கெழுதத் துணிகிறார்கள். அவற்றைப் பத்திராதிபர்கள் சில ஸமயங்களில் பிழை களையாமலே ப்ரசுரம் செய்து விடுகிறார்கள். இதுவுமன்றி இலக்கணப் பயிற்சியற்ற சிலர் பத்திராதிபராக இருக்கும் விநோதத்தையும் இந்நாட்டிலே காண்கிறோம்...' என்று பாரதி, தன் படைப்புகளைப் பிழைகள் நீக்கிய இலக்கண அறிவோடு வெளியிட்டதை அவன் எழுத்துகளின் வழியாகவே நாம் அறியமுடிகிறது. பாரதியின் கவிதை வாரிசான பாரதிதாசன், 'பத்திரிகைகளில் தம்முடைய கவிதை, கட்டுரை வெளிவந்திருக்குமானால் அவை சரியாக வெளியிடப் பெற்றுள்ளனவா என்று மூலப் பகுதிகளோடு வரிமேல் விரல்வைத்து வாசித்து ஒத்தறிவார். தம் படைப்புகள் பிழையின்றிச் சரியாக வெளியிடப்பெற வேண்டும் என்பதில் அவருக்கு அதிக அக்கறை இருந்தது...' என்று பாரதியின் இலக்கண, இலக்கிய அறிவின் மேன்மையை, அவை பற்றிய பாரதியின் வாக்குமூலத்தை அப்படியே வழிமொழிந்து உறுதி செய்கின்றார். ஒருமுறை, புதுச்சேரியில் 'வண்டை... வண்டை'யாகப் பேசிக்கொண்டு போனான் ஒரு குடிகாரன். அதனை நின்று கவனித்த பாரதியார், தம்மோடு அப்போது இருந்த பாரதிதாசனிடம் 'பிச்சேரிக்காரன் குடிவெறியிலும் தனித் தமிழை எப்படிப் பேசுகிறான் பார்...? என்று சொல்லி வியந்தார். பாரதியும், தாசனும் தமிழே கதியென்று கிடந்தவர்கள். அவர்களுக்குப் புதுச்சேரியில் குடிவெறிப் பிதற்றலும் கூட கொஞ்சு தமிழின் இனிமையை நினைவுபடுத்தியிருக்கிறது. குறை காண்கிறவர்களுக்கு வேறெதையோ 'வேடிக்கை' காட்டியிருக்கிறது.

'பாரதியார் இலக்கணம் அறியாக் கவிஞன் என்று பண்டிதர்கள் ஆதாரமும், பொருளுமின்றிப் பேசினார்கள். பாரதியார் வெறும் தேசியக் கவி என்று பலர் பேசிக் கொண்டார்கள். பாரதியார் பெண் விடுதலை நண்பன் என்று சிலர் ஆத்திரப்பட்டார்கள். பாரதியார் வெறும் கஞ்சாப் புலவர் என்று ஏசினதையும் என் காதால் கேட்டிருக்கிறேன். 'மார்க்கெட்டில் ஒன்றும் வாங்கத் தெரியாமல், ஒரு கூடை கீரையை வாங்கின பாரதிதானே...? என்ற சிலர் புரளி செய்வதைக் கேட்கும் துர்ப்பாக்கியமும் நான் பெற்றதுண்டு. ஆனால், இவைகளெல்லாம் யோசிக்காமல், ருசுவில்லாமல் எதையும் பேச முடியும் என்பதற்கு அத்தாட்சிகள் ஆகின்றனவே அல்லாமல், பாரதியைப் பற்றிய விமர்சனம் ஆக மாட்டா...' என்று புதுச்சேரியில் பாரதியோடு இருந்த வ.ரா.தம் எழுத்தில் குறிப்பிடுகின்றார். அவரே தொடர்ந்து, 'பாரதியார் புதுச்சேரி வாழ்வில் (அரசியல் கிளர்ச்சியில் தவிர) பூரணமாகக் கலந்துகொண்டு, பத்து வருஷம் அங்கே வாழ்ந்து வந்தார். யார் வீடு என்று பார்ப்பதில்லை; என்ன ஜாதி என்று விசாரிப்பதில்லை. கலியாணத்துக்கோ எந்த விசேஷத்துக்கோ அவரைக் கூப்பிட்டால் உடனே போய்விடுவார். சமூகப் பிரச்சினைகளைப் பற்றி புதுச்சேரியில் பல இடங்களில் பிரசங்கங்கள் செய்திருக்கிறார். பத்து வருஷ காலத்துக்குள் புதுச்சேரிவாசிகளின் பூரண அபிமானத்தையும் பாரதியார் பெற்றார் என்று தாராளமாகச் சொல்லலாம்...' என்று பாரதியின் பத்தாண்டுக் காலப் புதுச்சேரி வாழ்வு குறித்த செய்தியைப் பதிவு செய்பவர் கூடவே, 'தமது பாடல்களைத் தமிழர்கள் ஏராளமாக ரசிக்க முன்வரவில்லையே என்ற வருத்தத்தாலோ அல்லது புதுச்சேரியில் தமக்குச் சரியான தோழமை இல்லை என்ற எண்ணத்தாலோ, பாரதியார் மீண்டும் அபின் பழக்கத்தைப் பிடித்துக் கொண்டார். அவர் அபின்

சாப்பிடுவது எனக்குத் தெரியவே தெரியாது. 'ஹோமத்துக்குச் சாமக்கிரியை வாங்கிக் கொண்டு வா...' என்று ஒரு நாள் அவர் பாஷையில் ஒரு பக்தனிடம் சொன்னார். அந்தப் பக்தனிடமிருந்துதான் விஷயத்தைத் தெரிந்துகொண்டேன். 'நீங்கள் இந்தப் பழக்கத்தை வைத்துக் கொள்ளக்கூடாது...' என்று பாரதியாரிடம் சொல்ல, எங்களில் ஒருவருக்கும் துணிச்சல் வரவில்லை. அபின் பழக்கம் நாளாவர்த்தியில் அவருடைய உடம்பை நிரம்பவும் கெடுத்துவிட்டது...' என்றும் பாரதி என்கிற 'மகா புருஷனின் மறுபக்கத்தையும்...' நமக்கு மறைக்காமல் சாட்சிப் படுத்தியிருக்கிறார். அவ்வாறே யதுகிரி அம்மாள் எழுதிய 'பாரதி நினைவுகள்' என்னும் நூலில் 'பாரதி புதுவையில் வாழ்ந்த இறுதிக் காலங்களில் வீட்டுத் தொல்லைகள் காரணமாகவும், அவற்றை மறக்கவும் கடற்கரையில் சில நாட்கள் இரவெல்லாம் கழித்தார்...' என்றும், இதுகுறித்து அங்கே பாரதியைக் காணச் சென்ற வ.வே.சு.ஐயர், 'பாரதியாருக்குக் கஞ்சா சாப்பிடும் வழக்கம் குள்ளச்சாமியின் பழக்கத்தால் ஏற்பட்டது...' என்றும் குறிப்பிடுகின்றார்.

அவ்வாறே, 'பாரதி புதையல்' மூன்றாம் தொகுதியில் பாரதியுடன் நெருங்கிப் பழகியவரும், புதுவையில் 'இந்தியா', 'விஜயா', 'கர்மயோகி' முதலிய பத்திரிகைகள் நடந்துவந்த காலத்தில் பாரதிக்குத் துணை புரிந்தவருமான பரலி சு. நெல்லையப்பர் எழுதியுள்ள கட்டுரையொன்றில் 'பாரதிக்கு வறுமையின் கொடுமையாலும், ஒரு சாமியாரின் கூட்டுறவாலும் புதுவையில் இருந்தபோது கஞ்சா பழக்கமேற்பட்டது...' என்று அதனை உறுதி செய்கின்றார். பாரதியின் புதுச்சேரி வாழ்க்கை அவனுக்கு 'கவிதை மகுடத்தையும்', 'கஞ்சா பழக்கத்தையும்' ஒரு சேர ஏற்படுத்தித் தந்தது அவன் வாழ்வின் விதியன்றி வேறு என்னவாக இருக்க முடியும்...?

புதுவையில்பாரதி வாழ்ந்த இறுதி நாட்களுக்கு அருமையான தொரு ஆதாரமாயிருப்பது யதுகிரி அம்மாள் எழுதிய 'பாரதி நினைவுகள்'. பாரதி பற்றிய பல நூல்களுள் மிகவும் குறிப்பிடத்தக்கது. பாரதியின் சொந்த மகளைப்போல் வளர்ந்த யதுகிரி அம்மாள் பாரதிமேல் அளவுகடந்த அன்பும் மரியாதையும் பக்தியும் கொண்டவர். பாரதி பாடிய பாடல்களையெல்லாம் ஒன்றுவிடாமல் தம் நோட்டுப் புத்தகத்தில் எழுதிக்கொண்டு வந்த அவர் பாரதியின் புதுச்சேரி வாழ்க்கையினுடைய எல்லா விஷயங்களையும் தம் நூலில் குறிப்பிட்டிருக்கின்றார்.

'ஸ்ரீ பாரதியாருக்குச் சங்கீதக் கச்சேரிகளைக் காட்டிலும் பாம்பாட்டி, வண்ணான், நெல் குத்தும் பெண்கள், செம்படவர்கள், உழவர் இவர்களுடைய நாடோடிப் பாட்டுகள் என்றால் மிகவும் இஷ்டம்.

ஒருநாள் மாலை புதுச்சேரிக் கடற்கரையில் எங்கள் வீட்டுக் குழந்தைகள் நாங்கள் ஆறு பேர், ஸ்ரீமதி செல்லம்மா, பாரதியார் ஆக எட்டுப் பேரும் வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்தோம். செம்படவர்கள் மீன்களை நிரப்பிக்கொண்டு சந்தோஷமாகப் பாடியபடி தோணியைக் கரையேற்றிக்கொண்டிருந்தார்கள். எங்களோடு பேசிக்கொண்டிருந்த பாதியார் அவர்களுடைய பாட்டுக்குச் சபாஷ் சொல்ல ஆரம்பித்தார். நான், 'இது என்ன வேடிக்கை! அவர்கள் அர்த்தம், ராகம் ஒன்றுமில்லாமல் பாடும் பாட்டை நீர் இவ்வளவு மெச்சுகிறீரே! எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை...' என்றேன்.

"செல்லம்மா: அவர் சுபாவம் உனக்குத் தெரியாதா? வீதியில் மாரியம்மன் எடுத்துக்கொண்டு உடுக்கை அடிப்பவன் வந்தால் இவர் கூத்தாடுகிறார். தன் நினைவே கிடையாது. இப்போது சாயங்கால வேளை, கடற்கரை, அலைகளின் ஒலி, இத்தோடு தாளம் போடும் அர்த்தமில்லாத பாட்டு, கேட்க வேண்டுமா..?"

"உடனே பாரதி எழுந்தார். ஒரு பென்சில், காகிதம் எடுத்துக்கொண்டு அந்தச் செம்படவர்களிடம் போனார். அங்கே இருந்த ஒரு கிழவனை அவர்கள் பாடும் பாட்டை அடிஅடியாகச் சொல்லும்படி சொன்னார். அதில் இருக்கும் பிழைகளைத் திருத்தி எழுதிக்கொண்டு எங்களிடம் வந்தார். 'நீங்கள் எல்லோரும் என்னைக் கேலி செய்தீர்களே. பிரபஞ்சத்தின் அடிப்படையை அந்தச் செம்படவன் எனக்கு உபதேசம் பண்ணினான்..." என்றார் பாரதியார்.

"செல்லம்மா: ஆகா! நீங்கள் பறையன் முதல் செம்படவன் வரையில் எல்லாருக்கும் சிஷ்யர்தாம். முதல் தெய்வமாகிற மடத்துக் குருவுக்கு மாத்திரம் சிஷ்யர் அல்ல!...

"பாரதி: இதோ பார், செல்லம்மா, அர்த்தமில்லாத மூட வழக்கத்தை எனக்குச் சொல்லாதே. இந்தச் சாரமில்லாத விஷயங்களை என் உயிர் போனாலும் நம்ப மாட்டேன். **செம்படவன் அவன் தொழில் செய்தாலும் அவன் உயிரும் என் உயிரும் ஒன்றே..."** என்று பாரதி சொன்னதோடு இல்லாமல் அதன்படியே வாழ்ந்தும் நமக்கெல்லாம் தன் வரலாற்றின் வழியாகவே வழி காட்டிவிட்டுப் போயிருக்கிறான். அந்த நடைமுறை எடுத்துக்காட்டுக்கு புதுச்சேரி என்கிற புதுவை ஒரு ஞான பூமியாக பாரதிக்கு இருந்திருக்கிறது. 'காவி வளர் தடங்களிலே மீன்கள் பாயும் கழனிகள்சூழ் புதுவை' என்று தன் காவியத்தில் பாரதி பாடிய, போற்றிய, புகழ்ந்துரைத்த புதுச்சேரி, பாரதிக்கு எவருக்கும் கிடைக்காத இலக்கிய சிம்மாசனத்தை ஏற்படுத்திக் கொடுத்தது மட்டுமல்லாமல் தன்னுடைய தனித்தன்மை மிக்க பிரெஞ்சு மொழிப் புலமையையும் அவனுக்கு இலக்கியக் கொடையாக வழங்கியது. அதன் காரணமாக பாரதி பிரெஞ்சு நூல்களைப் படிக்கவும், பிரெஞ்சுக் கவிதைகளை மொழிபெயர்க்கவும், பிரெஞ்சு அதிகாரிகளுடன் அந்த மொழியில் சரளமாகப் பேசவும் தன்னைத் தகுதிப்படுத்திக்கொண்டான். புதுச்சேரியில் பாரதி வாழ்ந்த காலத்தில் அவன் எழுதிய 'சின்னச் சங்கரன் கதை' கையெழுத்துப் பிரதி காணாமல் போய்விட்டது ஒன்றுதான் அவனுக்கு ஏற்பட்ட இழப்பு. ஆனால், பத்தாண்டுகள் பாரதிக்கு புதுச்சேரி அடைக்கலம் தந்ததே, அதுவும் புதுவைக்குப் பாரதி தன் கவிதைகளினால், எழுத்துகளினால், தன் சிந்தனைகளினால் மிகப் பெரிய வரலாற்றுச் சிறப்பினை ஏற்படுத்தித் தந்திருக்கிறானே, அவ்விரண்டும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாத இலக்கிய அதிசயமாக இன்றைக்கும் இருந்துகொண்டிருக்கிறது. இனி என்றைக்கும் அந்தப் பெருமை புதுச்சேரியின் திசைகள் தோறும் பேசப்பட்டுக் கொண்டிருக்கும்.

(புதுச்சேரியில் தங்கியிருந்த பாரதியின் பத்தாண்டு வாழ்க்கை கடந்த செப்டம்பர் மாதத்தோடு நூற்றாண்டாக நிறைவடைகிறது. அதனை நினைவு கூரும் கட்டுரை இது.)

**துணை நின்ற நூல்கள்:**

1. மகாகவி பாரதியார், வரா., சந்தியா பதிப்பகம், சென்னை.
2. பாரதியார் பெருமை, முல்லை முத்தையா, பாரதி பதிப்பகம், சென்னை.
3. பாரதிதாசன் பார்வையில் பாரதி, ச.சு.இளங்கோ, அன்னம் பதிப்பகம், சிவகங்கை.
4. புதுவையில் பாரதி, ப.கோதண்டராமன், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை.
5. பாரதியார் கவிதைகள், சீனி.விசுவநாதன், பூங்கொடி பதிப்பகம், சென்னை.
6. பாரதியார் நூற்றாண்டு மலர், பாரதியார் நூற்றாண்டு விழாக் குழு, பாரீஸ்.

மதிப்புரை:

# வாழ்க்கையைப் பிழிந்து சொட்டும் கதைகள்

**(கீரனூர் ஜாகிர்ராஜாவின் 'பெருநகரக் குறிப்புகள்' நூலை முன்வைத்து)**

**ஹரணி**




காய்ந்து கிடக்கிற நதியில் எல்லாமும் கிடக்கின்றன. அதுகுறித்து நதியிடம் எந்தவிதமான கருத்தோ கோபமோ ஆனந்தமோ இருப்பதாகத் தெரியவில்லை. ஆனாலும் நீர் நிறைந்து கரைமேவி ஓடுகையில் நதியின் அழகு சொல லொண்ணா எண்ணக்குவியலை மனத்துள் விதைக்கிறது. சாதாரண மனிதன் குளிக்க இறங்கி ஆனந்தம் கொள் கிறான். நீச்சல் தெரிந்த குழந்தைகள் ஆசையில் அலுப்பு தீருமட்டும் நதியில் விளையாடி களைக்கின்றன களிப்பில். நீச்சல் தெரியாதவன் நதியைப் பார்க்கையில் பயத்துடன் எதிர்கொள்கிறான். கவிஞனுக்கு நதி ஆயிரம் சொல்லித் தருகிறது. பல்லாயிரம் படைப்புகளில் நதி நுரைத்துப் பொங்கி ஓடிக்கொண்டுதானிருக்கிறது. இப்படிப்பட்ட நதி காய்ந்து கிடக்கும் காலங்களில் பார்க்க வலி பொங்குகிறது. எல்லாமும் அதில் கொட்டப்படும் போது ஆத்திரம் வருகிறது. இதற்கும் நதி எதுவும் சொல்வதில்லை. இப்படித்தான் வாழ்க்கை எல்லோர் வாழ்விலும் நதியைப்போல வறண்டும் நிறைந்தும் கிடக்கிறது. வாழ்கிற நிலைப் பாட்டில்தான் எல்லாமும் சமன்படுகிறது.

அவரவர் தன்மைக்கேற்ப அல்லது அமைந்துவிடுகிற சூழலுக்கு ஏற்ப இந்த நிலைப்பாட்டை சமன் செய்கிற அல்லது சமன் செய்துவிட்டதான திருப்தியில் வாழ்க்கை முடிந்துபோகிறது. இங்கே இந்த நிலைப்பாட்டிற்காக காயங்களும் மகிழ்ச்சியும் உருவாக்கம் கொள்கின்றன. இவற்றின் உருவாக்கத்தில் மதமும் இனமும் ஜாதியும் பேதங்களும் வேராக நிற்கின்றன. இது சாதாரண மனிதனை அவஸ்தைப்படுத்துகிறது. படைப் பாளனுக்குச் சவாலாக அமைகிறது. தன்னுடைய சமன்பாட் டிற்காகவும் தன்னைப்போன்றோரின் சமன்பாட்டிற்காகவும் இந்தச் சவாலை ஏற்கும் கட்டாயத்தை அவன் பிறந்து வளர்ந்த சமூகமே அவனுக்கு விதிக்கும்போது காயங்களால் தாக்கப்பட்டும் அவமானங்களால் உணர் வூட்டப்பட்டும் வலிகளின் வெப்பத்தில் உருகுகிறான். படைப்பாளனாகக் களத்தில் நிற்பவன் இவ்வெப்பத்தைப் படைப்புக்குள் பரப்பி அதை எல்லோருக்கு மான வலியாக உணர்த்தி நிற்கிறான். ஜாகிர்ராஜாவும் இப்படித்தான்.

எப்போதும் ஏராளமான காயங்களையும் உணர்வுச் சிதைவுகளையும் அவமானங்களையும் சந்தித்த வடு மாறாமல் தொடர்வதை மனம் கசிவோடு ஒவ்வொரு கதையிலும் உணர முடிகிறது. எனவே புனைகதையின் ஒரு முக்கியக் கூறாக இருக்கும் சிறுகதை புனையப்படும் கதை எனும் பொருண்மைக்கு அழுத்தமான பொருளாக வாழ்க்கையை உள்ளது உள்ளபடி புனைதல் எனும் நிலையில் 'பெருநகரக் குறிப்புகள்' தொகுப்பை வாசித்து முடிக்கையில் மனம் நனைகிறது. ஒரு சமூகம் என்பது அதில் அடங்கியுள்ள மக்கள் கூட்டத்தை வைத்து அடையாளப்படுத்துவது அதன் பொருளாக அறியப்படுவது. எனவே அதன் பொறுப்பு என்பது பொதுமையானது, சமமானது, நலம் பயக்குவது என்பதைத் தாண்டி, காக்க வேண்டிய சமூகமே நசுக்கிச் சிதைப்பதைச் சிறுவயது முதல் கவனித்து அதை மறக்க முடியாமல் மன்னிக்கவும் தயாராக இல்லாமல் கடுமையாக விமர்சித்து ஒவ்வொரு கதையிலும் நெஞ்சு நிமிர்த்தும் ஜாகிர் எனும் படைப்பாளனின் தெளிவு அதிசயமானது, ஆச்சர்யமானது, பாராட்டுக்கு மிக உரியதும்கூட. ஒவ்வொரு சிறுகதைக்குள்ளும் சொல்லும் விதமும் உணர்த்தும் விதமும் மொழிநடையும் எதார்த்தமும் அழிக்கமுடியாத அழுத்தம் கொண்டு லபக்கென்று விழுங்குவதுபோல வாசிக்கிற மனசுக்குள் போகிறது. இருப்பினும் சில கதைகளில் சிறுவயது நிகழ்வுகளில்கூட இடையிடையே இன்றைய வயது ஜாகிர்ராஜா கருத்துச் சொல்வது யதார்த்தம் மீறியது என்றாலும் அது பட்டுக் காய்த்துப்போன வடுவின் உறுத்தல் எனும் நிலையில் ஏற்றுக்கொள்ளவே தோன்றுகிறது.

இத்தொகுப்பு மட்டுமல்ல ஜாகிர்ராஜாவின் கதைகள் முழுக்கவே ஒரு சிறப்பான அம்சமாகப் பார்ப்பது அவற்றில் எந்தத் திணிப்பும் இல்லை. வலிகளுக்கான அறிவுரை மருந்தும் இல்லை. தனக்குத் தன்னுடைய பிறந்த சமூகம் விதித்ததை, அதனால் பட்ட இன்னல்களை சிறுவயது முதலே மனத்தில் அழிக்கமுடியாத காய பிம்பமாக உள் வாங்கிப் பின்பருவத்தில் படைப்பு மனமாக உருக்கொண்ட நிலையில் படைப்பில் அதனைக் கொட்டுகிறார். படிப்போர்க்கு நீதி சொல்வதல்ல இக்கதைகளின் நோக்கம். ஒரு சமூக வலியை காட்சிப்படுத்துவதில் இவை சிறப்புறுகின்றன. மேலும் சமூகத்தை எதிர்ப்பது அல்லது போர்க்கொடி உயர்த்துவதும் நோக்கமல்ல. ஆனால் தான் பட்ட வலியை தன் சாதியைச்

சேர்ந்த ஆண்களும் பெண்களும் பட்ட அவமானங்களையும் படும் வேதனை களையும் மாற்றி சமூகம் மாறிக்கொள்ள வேண்டும் என்பதை உறுத்தலோடு உணர்த்துவது தன்னுடைய படைப்பு நோக்கமாக ஜாகிர் கொண்டிருக்கிறார் என்றே உணர முடிகிறது. இஸ்லாமியச் சமூகத்தின் சடங்குகளையும் மரபுகளையும் தேவைப்படும் சூழல்களில் கதைகளில் இயல்பாகச் சொல்லும் போக்கில் அவர் கொண்டிருக்கும் பற்றும் தெளிவுறத் தெரிகிறது. ஒரு தாய் அல்லது தந்தை தவறு செய்யும்போது அதை வயதில் குறைந்த மகன் சுட்டுவிரல் நீட்டிக் குற்றத்தை உணர்த்தும்போது அதைத் தாங்கிக்கொள்ள இயலாத மனோபாவத்தைத் தவிர்த்து சமூகம் ஜாகிரின் படைப்பு மனத்தைக் கருதவேண்டும் என்றே தோன்றுகிறது. குற்றங்களைக் கண்டிக்கும் உரிமை ஒரு மகனுக்கு உண்டு என்பதைக் கட்டாயம் ஏற்க வேண்டும். இதைத்தான் ஜாகீர் சிறுகதைகள் உணர்த்துகின்றன.

எழுத்தும் வாழ்க்கையும் வேறுவேறு அல்ல என்று வெகு காலமாய் சொல்லிக்கொண்டே வருவதை மரபாகக் கொண்டிருந்தாலும் ஒரு எழுத்து என்பது நேர்மையான வாழ்வைப் பிரதிபலிக்க வேண்டும். ஒரு நல்ல மனிதனாக, நேயமுள்ள குடும்பத்திற்குப் பொறுப்பானவனாக இருந்து விட்டால் எழுத்து தேவையில்லை. அப்படி வாழ்ந்தால் போதுமானதே. இந்தப் போதாமையால்தான் அவரவர் சமூகத் தேவைக்கேற்பவும் சூழலுக்கேற்பவும் எழுத்தைக் கைக்கொள்ள வேண்டிய கடப்பாடு ஒவ்வொரு படைப் பாளனுக்கும் நேர்கிறது. எனவேதான் எழுத்தும் வாழ்க்கையும் வேறுவேறு அல்ல என்பதை சொல்லித்தீர வேண்டிய நிர்ப்பந்தம் நிகழ்கிறது. ஜாகிரைப் பொறுத்தளவில் தன்னுடைய வாழ்வின் ஒவ்வொரு துளியையும் கூர்ந்து கவனித்து அதைப் படைப்புக்குள் பதிவுசெய்து கொண்டே போவதை இத்தொகுப்பின் சிறுகதைகளில் உள்ள ஒவ்வொரு சொல்லும் தெளிவாகக் காட்டுகிறது. வாழ்வதையே படைப்பாகக் காட்டி வாழ்கிறார்.

காதலின் நுட்பமும் நேயமும் உணரப்படாமை, மனித மதிப்பீடுகள் அலட்சியப்படுத்தப்படுதல், மனம் சிதைத்தல், பசியின் தாகம், நட்பின் அழுத்தம், உறவின் மேன்மை, வாழ்வதற்காக அலைக்கழிக்கபடும் வாழ்க்கை, சடங்குகளின் பெயரால் சாதிகளின் பேதத்தால் மிருகமெனப் பாயும் மேலாதிக்கங்கள், அதற்கான போராடுதல்கள், அவற்றின் தோல்வியும் அவமானங்களும், இதைப் பொறுத்துக்கொள்ள முடியாத நிலையில் நிகழும் மன வெடிப்புகள் போன்றவை இவரது கதைகளின் கருக்களங்களாக நுரைத்துக் கிடக்கின்றன. சக்கிலி மத்தை, (மந்தைய எங்களுக்குன்னு ஒதுக்கிக் குடுக்கற வரைக்கும் நாங்க யாரும் எடுப்பு கக்கூஸ் அள்ளறதுக்கு வர மாட்டோம்), மழை – மகனைப் புரிந்துகொள்ளாத தந்தை (....அங்கேயே சென்ட்ரல் தண்டவாளத்திலேயோ கூவத்திலோ விழுந்து உயிரைப் போக்கிக்கொள்ளலாம். உன் தீதார்கூட எங்களுக்குத் தேவையில்லை..... நல்லவர்களுக்கொல்லாம் சீக்கிரமாய் மௌத் வந்துவிடுகிறது. வேணும் ஸலாம். நாயன் துணை), மனத்தை உருக்கும் வெம்மை (....மனதுக்குள் சுடர்விட்ட வண்ண வண்ண மெழுகுவர்த்திகளை அவன் தன் பிஞ்சு வாயால் ஊதி ஊதி அணைக் கிறான். ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலிருக்கும் அவனுக்கு இந்த சிறைச்சாலையின் நெடிய சுவர்களுக்குள்ளிருந்து நான் கூறும் வாழ்த்துகள் கேட்கவா போகிறது), சுவடுகள் வாழ்வின் அவலத்தை மிக நெருப்போடு உணர்த்தி வலிக்கச் செய்கிறது (....நெடுஞ்சாலைகளும் எல்லாவிதமான சீதோஷ்ணங்களும், யாசகக் குரல்களும், புறக்கணிப்பும் அத்தாவுக்கு ரத்தத்தில் கலந்தவை.) அறைச்சுவர்கள் சிரிக்கின்றன, (...அவர்களுக்கு உடமையான பெட்டிகளிலிருந்து மேலும் பல ஜாதிப் பாம்புகள் எட்டிப் பார்க்கின்றன....சற்றுமுன் நிகழ்ந்த வாதங்கள் மறந்து கண்களுக்கு முன்னால் பானம் நிறைந்த குவளை தோன்றவும் குளிர்ந்துபோனான்), அடையாளம் – பசியின் மகத்துவத்தை, மேன்மையை அடையாளப்படுத்துவது (....பள்ளி வாசல் வீதியில் அவள் கிழக்கும் மேற்குமாய் அலைந்ததைக் கண்டு ராவுத்தப் பசங்கள் சிரியாய்ச் சிரிப்பார்கள்...... நம்மளப் போல ஏழைக்கி பட்டினி கெடக்குற நாளெல்லாம் நோம்புதா) இவையெல்லாம் தொகுப்பின் மீண்டும் மீண்டும் வாசிக்க வேண்டிய கதைகள். வாழ்வை ஒருமுறைக்கு நூறு முறையாகப் பரிசீலித்து வாழ வேண்டிய தேவையை உணர்த்துபவை.

தேர்ந்த எழுத்தாளுமையை ஒவ்வொரு கதையும் வெளிக்காட்டுகிறது. தடையற்ற பிரவாகம் சொற்களினூடாக பாம்பு செல்வதுபோல அமைந்திருப்பது படிப்பதற்கான ஆர்வத்தை குறைக்காது காக்கிறது. என் வாழ்க்கையும் அதன் மீது கொட்டப்பட்ட சமூகத்தின் ஆதிக்கக் குப்பையும் அதனைப் பற்றவைத்து நெருப்புக் காட்டிய சாதியப் பிரிவும் தவிர வேறு வேண்டியதில்லை என்பதான ஜாகிரின் எழுத்து அதன் மூலம் ஒரு பொதுமையான சமூக அவலத்தை, அசிங்கத்தை உரித்துக் காட்டுவது இக்கதைகளின் சாகா வெற்றியாகக் கருதிக்கொள்ளலாம். கதைகளின் மொழிநடை தேர்ந்த நடையாக உள்ளது. அவற்றிலும் எளிமையும் இயல்பும் அதேசமயம் செழுமையான அழுத்தமும் கொண்டு மைந்துள்ளது. சிலவற்றைச் சான்று காட்டலாம்.

> நான் இங்கு கொட்டும் பனியிலும், மழையிலும் வம்பாடு பட்டு தொகை தொகையாக அனுப்பினால் தின்று தெறித்து ஊரைச் சுற்றுவது உன் வழக்கமாகிவிட்டது. மானம், ரோஷம் என்பது மருந்துக்குக்கூட இல்லாத மழுங்கைதான் நீ.
>
> ....தணிக்கவியலாத வெம்மை... அதன் இறுக்கமான பிடி மலைப் பாம்பின் நெரிப்பென எலும்புகளை முறிக்கிறது.
>
> யாசகக் குரல். அதுவும் அக்காவின் சோகம் ததும்பிய யாசகக் குரல் எத்தனை துன்பமானது. ஒரு நாளேனும் அத்தா இதை உணர்ந்ததில்லை.
>
> புவ்வாவின் ஆல்பம் குட்டை மர பீரோவுக்குள் இருக்கிறது. ஆல்பத்தில் கணக்கற்ற கன்னிகள் நீந்துகிறார்கள். அது பெருமூச்சுகளின் சமுத்திரம் என மாறுகிறது... விதவிதமான பெண்களின் நீண்டகால கனாக்கள் ஆழத்தின் ஆழத்துள் பாறைப் பாசியாய் படர்ந்து கிடக்கிறது. அபிலாஷைகளின் இழைகளால் நெருக்கி நெய்யப்பட்டது அவர்களின் ரூபங்கள்.

வாழ்வின் உண்மைகளுக்குள் நீந்திக்கொண்டிருக்கிற படைப்பாளனின் உணர்வுபூர்வமான இத்தொகுப்பும் படைப்பாளனும் கவனத்தில் கொள்ளப்படவேண்டும். இத்தொகுப்பை வாசித்துவிட்டு எதுவும் பேசலாம். இடமிருக்கிறது. வாசிக்கிற ஒவ்வொருவரும் ஏதாவதொரு சிறுகதையில் வாழ்வதற்கான சாத்தியங்களை இத்தொகுப்பு கொண்டிருப்பதை இத்தருணத்தில் சொல்வதில் மகிழ்ச்சி கொள்கிறேன்.

---

"பெருநகரக் குறிப்புகள்", சிறுகதைத் தொகுப்பு, கீரனூர் ஜாகிர்ராஜா, விலை ரூ.75/–, வெளியீடு: அனன்யா, 8/37, பி.ஏ.ஒய். நகர், குழந்தை இயேசு கோவில் அருகில், புதுக்கோட்டை சாலை, தஞ்சாவூர்–613 005.

மதிப்புரை:

# ஜெயந்தனின் 'இந்தச்சக்கரங்கள்...'

குறு நாவல் - ஒரு திறனாய்வு

அறிவுச் செல்வன்




எழுத்தாளரும், சிந்தனையாளரும், பேச்சாளருமாகிய திரு. ஜெயந்தனின் காத்திரமான படைப்புகளில் ஒன்றாகிய "இந்தச் சக்கரங்கள்..." என்ற குறுநாவலைத் திறனாய்வு செய்ய முயல்கிறேன்...

முதலில், இது எழுதப்பட்ட காலத்தைக் கணக்கிலெடுத்துக் கொள்வோம். ஒரு படைப்பின் உன்னதம், அதன் உள்ளடக் கத்தில் மட்டுமில்லை. படைக்கப்பட்ட காலச் சூழலோடும் மிகத் தொடர்புடையது. அவ்வகையில் ஏறத்தாழ முப்பது ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்டிருக்கிறது இக்குறுநாவல்.

அன்றைய நிலை என்ன?

இன்றைய தொலைக்காட்சிகளின் மெகாதொடர்கள் வகிக்கும் இடத்தை அன்று வகித்த கல்கி, சாண்டில்யன் போன்றோரால் எழுதிக் குவிக்கப்பட்ட காகிதமலைகளின் மீது வேர்க்க விறுவிறுக்கத் தமிழ்வாசகன் கால் வலிக்க ஏறி நடந்து களைத்திருந்த காலம். தொடர்ந்து, ஒருபுறம் ரஷ்ய, மார்க்ஸியப் பாதிப்புகளில் உருவாக்கப்பட்ட இடதுசாரிச் சிந்தனையாளர்களின் வரிசையும், மறுபுறம் திராவிட, பெரியாரியச் சிந்தனைகளால் உருவான முற்போக்குச் சிந்தனையாளர்களின் வரிசையுமாக இரண்டு அணியினரால் தமிழ் வாசகனுக்கு இரட்டைக் கண் திறப்புச் செய்யப்பட்ட காலம் அது. சிறுகதைச் சிகரமேறி ஆடிய ஜெயகாந்தன்களும், சிலரும் களமாடிய காலம்.

அப்போது முளைக்கிறார் ஜெயந்தன். தன் பேனாவை ஒரு தூரிகையாக, ஆயுதமாக ஏந்தியபடி படைப்புலகில் நுழைகிறார். நுழைந்து சில சிறுகதைகளுக்குப் பிறகு "இந்தச் சக்கரங்கள்..." என்ற இக்குறுநாவலை எழுதுகிறார்.

இதை ஏன் எழுதியிருக்கிறார்? எனக் கேட்டால், அவரால் எழுதாமலிருக்க முடியவில்லை. அதாவது, இக்கதை அவரை எழுதாமலிருக்க விடவில்லை. கதைக் கருவின் சுமையைத் தாங்க இயலாமல் அந்த அழுத்தத்திலிருந்து தப்பிப்பதற்காக, தன்னை ஆசுவாசப்படுத்திக்கொள்வதற்காக இதை எழுதியிருக்கிறார் என்பதைப் படிப்பவர்கள் உணர்வார்கள்.

'ஒரு தரமான படைப்பு, படைப்பாளியையே தனது பேனாவாக்கிக்கொண்டு, தன்னைத்தானே பிரசவித்துக் கொள்கிறதோ!' என்று நான் வியந்து யோசிப்பதுண்டு. அப்படி என்னைப் பலநூறு படைப்புகள் யோசிக்க வைத்திருக்கின்றன. ஆனால் முதன்முதலாக வியப்படைய வைத்த முதல் சிறுகதைத் தொகுதி, இதே ஜெயந்தனால் எழுதப்பட்ட "'அரும்புகளை...'' என்ற படைப்பாகும்.

அதை வாசிக்கும்போது எனக்கு வயது 14. படித்தது ஒன்பதாம் வகுப்பு. ஊர் சிறுகுடி. அந்தச் சிற்றூரின் அரசு நூலகத்தில் நான் முதலாகச் சந்தித்த அரூப ஜெயந்தனை என் வாழ்நாளில் எப்போதேனும் நேரடியாகச் சந்திப்பேன், அன்போடும் நட்போடும் சம தகுதியோடும் பழகுவேன் என்பது எனக்கு அப்போது தெரிந்திருக்க நியாயமில்லை.

அந்தச் சிறுகதைத் தொகுதியைத் தொடர்ந்து, அவருடன் எனது இரண்டாவது சந்திப்பு நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு நிகழ்கிறது. அந்தப் பருவத்தில் அவரால் எழுதப்பட்ட "பாவப்பட்ட ஜீவன்கள்" என்கிற நாவல் தூக்கத்தை என்னிடமிருந்து பறித்துக்கொண்டு, பல நாட்கள்வரை என் இதயத்தின்மீது பாறாங்கல்லாய்க் கிடந்து அசைய மறுத்தது. அதைத் தூக்கிக்கொண்டு ரசனைக்கார நண்பர்கள் சிலரிடமும் அரசனைக்கார நண்பர்கள் பலரிடமும் மணிக்கணக்காகப் பேசிப் பேசிக் கொண்டாடிய நாட்கள் மறக்க முடியாதவை.

அப்போது, இவரைப் பற்றி என்ன புரிந்திருக்க முடியும் என்று யோசிக்கிறேன். 'இந்த ஜெயந்தன் என்கிற ஆசாமி லேசுப்பட்டவரில்லை. சராசரியும் இல்லை. இவர் கதை எழுதுகிறார். கதை விடவில்லை. எனவே இவர் கதைசொல்லி அல்ல. இவர் கதை சொல்வது கதைக்காக அல்ல. கதை என்ற வடிவத்தைக் கையில் எடுத்துக்கொண்டு, அதைப் பயன்படுத்தி இவர் வாசகனுக்குத் தர விரும்புவது வேறு ஏதோ ஒன்று!' என்று மட்டுமே புரிந்தது.

இப்போது புரிகிறது, இவர் கதையைப் பயன்படுத்தி வாழ்க்கையை எழுதுகிறார் என்னும் உண்மை. எதனோடும் ஒப்பிட முடியாத, எதனோடும் உவமிக்க முடியாத 'வாழ்க்கை'யை எழுதுகிறார். வாழ்வின் வலியை எழுத்தில் பிழிகிறார். வாழ்தலின் மகிழ்ச்சியைப் பேனாவால் பிரசங்கம் செய்கிறார். வாழ்க்கையைப் பேனாவால் விமர்சிக்கிறார், கொண்டாடுகிறார். இலக்கியத்தைக் கண்ணாடியாக்கிச் சமூகத்தின் மூஞ்சிக்கு முன்னே வெறுமனே பிடித்தபடி நிற்கிறார். இந்தச் சமூகம் தனது முக விலாசத்தை, முக விகாசத்தை, அழகைத் தானே கண்டுகொள்ளும் கண்ணாடி களைத் தயாரித்துத் தருகிறார். சுருங்கச் சொன்னால் வாசகனிடம் வந்து 'சமூகத்தில் வாழ்!' என்றும், 'சமூகத்தையும் வாழ்க்கையையும் புரிந்துகொள்!' என்றும் இரட்டைக் குதிரைகள் மீதேறிச் சவாரிசெய்யக் கற்றுக் கொடுக்கிறார்.

அப்படிப்பட்ட இவரது மற்றொரு முயற்சிதான் "இந்தச் சக்கரங்கள்" என்ற இக்குறுநாவல்.

முதலில், வழக்கம்போல, பழக்க தோஷத்தில் 'ஹீரோ யார்? ஹீரோயின் யார்?' என்று தேடினால், ஹூம்... கதாநாயகர்களாக, பாட்டுடைத் தலைவர்களாக, பெத்தம் பெரிசுகளாகக் கடவுள்கள் காட்சியளித்த காலம் மலை யேறித்தான் போய்விட்டது. என்ன செய்வது? கடவுள்களை இழுத்துக் கீழே தள்ளிவிட்டுப் பேரரசர்களும், அரசர்களும், சிற்றரசர்களும் ஒருவர் பின் ஒருவராய் அந்தப் பீடத்தில். அவர்களையும் நிம்மதியாய் வாழ விடவில்லை இந்த ஜமீன்தாரர்களும், நிலப் பிரபுக்களும், பெரும் பணக்காரர் களும், செல்வாக்குள்ள முக்கியஸ்தர்களும்...

ஆக, கதாநாயக பீடம் கரைந்து, காலப் போக்கில் மூட்டை சுமப்பவரை, துணிவெளுப்பவரை, கூலித் தொழிலாளியை, குப்பை வண்டிக்காரரை, மலம் அள்ளுகிறவரைப் பற்றி யெல்லாம் அர்த்தமும் பொறுப்பும் மிக்க படைப்புகள் வெளிவரத் தொடங்கியிருக்கின்றன. ஏனென்றால், ஆசீர்வதிப்பவர்களுக்கும் ஆசீர்வதிக்கப் பட்டவர்களுக்கும் மட்டும் உரியதல்ல வாழ்க்கை. சபிக்கப்பட்டவர்களுக்கும் தண்டிக்கப்பட்டிருப்பவர்களுக்கும்கூட வாழ்க்கை வழங்கப் பட்டிருக்கிறது. அதை அவர்கள் முழுமையாக வாழ்ந்து நிறைவேற்றுகிறார்கள். வேறுவழியில்லை. வாழ்க்கையை வாழ்ந்துதான் தீர்த்தாக வேண்டும். வேறெந்த வகையில் அதை விட்டு விலகிவிட முடியும்?

எனவே 'கீழ்கள்' என்று அடையாளப்பட்டவர்களின் வாழ்க்கை இடம் பெறாத இலக்கியம் இன்று முழுமை பெறாது. சமூகம் என்பது அவர்களைச் சேர்த்துத்தான். வாழ்க்கை என்பது அவர்களுக்கும் உரியதுதான். இலக்கியம் என்பது அவர்களைப் பற்றியது மட்டுமல்ல, அவர்களுக்கும் உரியது.

அந்த அடிப்படையில் நமது "இந்தச் சக்கரங்கள்" குறு நாவலில் 'ஹீரோ'வைத் தேடுகிறோம். காணவே காணோம். பதிலாகக் கதாநாயகி வருகிறாள். ஆம்! கிருஷ்ணவேணி என்கிற ஒரு பெண்ணின் கதைதான் இந்தக் குறுநாவல்.

முதல் வரியிலிருந்தே நேரடியாகக் கதை தொடங்கிவிடுகிறது. கடைசி வரியிலும் கதை முடியவில்லை. மறுபடி தொடங்குகிறது பாலசந்தரின் 'அவள் ஒரு தொடர்கதை' திரைப்படத்தைப் போல. ஆனால் 'முற்றும்' என்ற புள்ளியிலிருந்து மறுபடி தொடரும் இந்தக் கதையின் முடிவில் கிருஷ்ணவேணி தொடங்க தனது தாயார் பாத்திரத்தைக் கிருஷ்ணவேணி வகிக்க ஆரம்பிக்கிறாள்.

இப்படியாக அந்த முடியாத கதை முடிகிறது.

அவர்களை நீங்கள் புத்தகத்தில் சந்தியுங்கள். அவர்களைச் சந்தித்தபின், இங்கே நான் வந்திருக்கிறேன்.

ஒரு பெண்ணின் வாழ்க்கையை இவ்வளவு நுட்பமாக, இவ்வளவு கூர்மையாக, இவ்வளவு நேர்மையாக, இதுவரை எழுதப்பட்டிருக்காத தரத்தில் தமிழில் முதன்முதலில் படைத்துக் காட்டிய ஜெயந்தனைப் பெண்கள் உலகம் எத்தனை பாராட்டினாலும் தகும்.

பெண்ணை முதன்மைப்படுத்துகிற முதல் எழுத்தாளர் ஜெயந்தனில்லை. ஜெயகாந்தனின் 'அக்கினிப் பிரவேசம்' முதல் 'சில நேரங்களில் சில மனிதர்கள்' வரை பெண்களே பிரதானப்படுத்தப்பட்ட இலக்கியங்கள் உண்டு. ஏன்? சிலப்பதிகாரக் கண்ணகி தொட்டு, மாதவி, மணிமேகலை எனப் படைப்புகள் தமிழில் உண்டுதானே? என்றாலும், முதல் வரியிலிருந்தே நேர்கோட்டில் செல்லுகிற முழுமை யான ஒரு பெண்ணின் கதையாக, கடைசிவரை அவளது கதையாக மட்டுமே முடிந்து விடுவதால், பெண்களுக்கு நேர்மை செய்கிறது இந்தக் கதை.

அவ்வகையில் இன்றைய பெண்ணியவாதிகளால் 'எங்களது முன்னத்தி ஏர்பிடித்த முதல் உழவாளி' என்று கொண்டாடப் பட்டிருக்க வேண்டியவர் எழுத்தாளுமை கொண்ட இந்த ஜெயந்தன்.

பெண்ணைத் தனது போகப் பொருளாக மட்டுமே பார்க்கத் தெரிந்த நிலப்பிரபுத்துவச் சிந்தனையிலிருந்து தொடங்குகிறது நம் சிந்தனை மரபு. அதிலிருந்து விலகி, பெண் கல்வி, பெண் விடுதலை, பெண்ணுரிமை போன்றன பேசி சம உரிமையும், சம வாழ்க்கையும் கொண்டவர்களாகப் பெண்களைப் புரிந்துகொள்ளச் சொல்கின்றன நமது திராவிட யுகம் தந்த மறுமலர்ச்சி இலக்கியங்கள்.

அதிலிருந்து வேறுபட்டு, பெண்ணைப் புரட்சிக்காரியாக, வீராங்கனையாக, போராட்டக்காரியாக ஆக்கிவிட முயலுகின்றன மார்க்ஸியப் பெண் பாத்திரங்கள் கொண்ட ரஷ்யப் படைப்புகள்.

"ஆண்களே, 'உங்கள்' உலகத்திலிருந்து 'நமது உலகத்திற்கு' வாருங்கள். சமூகவாதியாகிய பெண்ணை சக மனுஷியாக, ரத்தமும் சதையும் உணர்வும் அறிவும் கொண்ட பூரணத்துவமானவளாகப் பாருங்கள்!" எனப் பொறுப்புடன் பேசுகின்றன பெண்ணியவாதிகளின் குரல்கள்.

'பெண்களே, ஆண்கள் உங்கள் எதிரிகள். அவர்களை ஒரே நேரத்தில் உங்கள் உடலாலும் மூளையாலும் வீழ்த்தித் தோற்கடிக்கப் போரிடுங்கள்!' என்று அறைகூவுகின்றன ஆவேசப் பெண்ணியத்தின் அவசரக் குரல்கள்.

இவற்றிலிருந்தெல்லாம் விலகி– ஒதுங்கியல்ல – வேறுபட்டு – உயர்ந்து, இவற்றுக்கு மாறாக, எவ்விதப் பிரச்சாரத் தொனியும் இல்லாமல், கருத்துத் திணிப்பின்றி, பாடம் நடத்தாமல், இயல்பாகவும், சரளமாகவும், முழுமையாக கிருஷ்ணவேணி என்கிற பெண்ணின் வாழ்க்கையைப் பிரதானப்படுத்தி மட்டுமே காட்டுகிறது ஜெயந்தனின் பேனா.

ஆம்! இந்தக் கதை அவளுக்காகப் பரிந்து பேசவில்லை. அவள் புகழ் பாடவில்லை. அவளைக் கதாநாயகியாக உயர்த்திப் பிடிக்கவில்லை. வெறுமனே அவள் கதையைச் சித்தரிக்கிறது.

எவ்வித உள் நோக்கமுமின்றி, ஒரு பார்வையாளரைப் போல, மானசீகமாக அவளை நம் கண்முன் வாழ வைத்து, வாசகனைப் பார்க்கச் சொல்லிவிட்டு தான் இருக்குமிடம் தெரியாமலேயே நின்று கொள்கிறார் ஜெயந்தன்.

இதில் அவரது எழுத்து யுக்தி (பங்ஸ்ரீட்ய்ண்ஸ்ரீ) யும் இருக்கிறது. ஆனால், அதையும் மீறிய நேர்மை தூக்கலாகவே தெரிகிறது. அவர் ஒளிந்துகொண்டாலும், அவரது இலக்கியத் தரத்தை அவரால் மறைக்க முடியவில்லை. அது, வரிக்குவரி – பாரதியின் கவிதைகளில் போலவே, பிரகாசித்துக் கொண்டே உடன் வந்தபடியிருக்கிறது.

அது, அப்படித்தான் இருக்க முடியும். தாழம்பூ ஒளிந்து கொண்டாலும் அதன் வாசத்தை ஒளித்துக்கொள்ள முடியாதல்லவா? ஓர் எழுத்தாளனின் தரத்தை எழுத்து மேலும் மேலும் வெளிக்கொணருமே தவிர, ஒருபோதும் அதில் அவன் தன்னை ஒளித்துக்கொள்ள முடியவே முடியாது.

இன்றைக்கு ஜெயந்தன் இருக்கும் உயரத்தை அவர் அடைவதற்கான தகுதியும், முயற்சியும் அவரது எல்லாப் படைப்புகளிலும் போலவே இந்தப் படைப்பிலும் அன்றைக்கே அடையாளங்கொண்டிருக்கின்றன. விளையும் பயிர் முளையிலல்லவா?

சரி, கிருஷ்ணவேணியின் கதை மட்டுமா இந்தப் படைப்பு? இல்லை. குடும்பம் – கூட்டுக் குடும்பம் – தனிக்குடும்பம் – என்கிற பாங்குகள் மீது ஜெயந்தனுக்கு இருக்கும் கூர்மையான பார்வை– கவனிக்கவும்– அவரது விமர்சனமல்ல, – அவரது பார்வை – படைப்பெங்கும் பரவி நிற்கிறது.

குடும்பம் என்கிற அமைப்பின்மீது இந்தப் படைப்பில் ஜெயந்தன் எவ்வித விமர்சனமும் செய்யவில்லை. எவ்விதக் கேள்வியும் எழுப்பவில்லை. ஆனால், படைப்பின் முடிவில் அந்த வேலைகள் வாசகனின் தலையில் வந்து விடிகின்றன. குருவி தலையில் பனங்காய் போல வாழ்க்கை பற்றிய கனமான கேள்விகளும் சமூகச் சிக்கல் மற்றும் சிக்கல் சமூகம் பற்றிய சிந்தனைகளும் 'டன் டன்'னாக நமது மூளைக்குள் உற்பத்தியாகத் தொடங்கிவிடுகின்றன.

அதுதான் எழுத்தின் வெற்றி. எழுத்தாளனின் வெற்றி.

ஓர் உன்னத எழுத்தாளனின் 'இருத்தல்' எதிலிருக்கிறது தெரியுமா? அது, புன்னகையுடன் சிரித்தபடி – அல்லது பேனாவை பிடித்தபடி – அல்லது பேனாவைக் கடித்தபடி – அல்லது முகவாயைக் கைவிரல்களால் தாங்கி யோசனையில் லயித்தபடி – இப்படி விதவிதமாக 'போஸ்' கொடுப்பதில் இல்லை.

ஒரு தரமான எழுத்தாளனின் இருப்பு விதவிதமான விருதுகளைப் பெற்றோ – அல்லது விதவிதமான விருதுகளை வாங்கியோ– கவனிக்கவும்– 'வாங்கியோ' பிரபலமாவதில்லை. தன்னைப் பிரச்சாரம் செய்துகொள்ளும் வாய்ப்பாகத் தனது எழுத்துத் திறமையைப் பயன்படுத்திக்கொள்ளும் மலினமான யுக்தியில் இல்லை ஒரு எழுத்தாளனது இருப்பு. மாறாக, தனது எழுத்தின் முற்றுப்புள்ளிக்குப் பிறகு, தனது சிந்தனையின் தொடர்ச்சியை வாசகனுக்கு மடைமாற்றி விட்டு, அடுத்த கட்டத்திற்குத் தான் நகர்ந்துவிடுவதில்தான் இருக்கிறது அவனது இருப்பு.

தான் அடைந்த உயரத்தை, தான் உணர்ந்த வாழ்க்கையை, வாசகனிடம் பரிபூரணமாக ஒரு வள்ளல்போல் வழங்கி விடுபவன்தான் எழுத்துக்கு நேர்மை செய்யும் இலக்கியவாதி. அவன் வழங்கிய கொடையை முதலீடாக்கிக் கொண்டு உழைக்கின்ற பெரும்பணி தற்போது வாசகனின் தலையாய வேலையாகிவிடுகிறது. எழுத்தாளனோ தற்போது மீண்டும் வேதாளம் வீழ்த்தும் விக்கிரமாதித்தன்போல் முதலிலிருந்து மற்றொரு படைப்பை உருவாக்கும் முயற்சியில் ஈடுபடத் தொடங்கி விடுகிறான்.

இந்த நாவலில் நடுநடுவே பளிச்சிடும் சில வரிகளையேனும் நான் குறிப்பிட்டாக வேண்டும்.

*"எங்க சின்னம்மா யாரையாச்சும் ஒரு ரெண்டு இட்டிலிக் கடனுக்கு ஒரு வார்த்தை கேட்டுச்சுன்னா அவன் மூணு தரம் தூக்குப் போட்டுக்கணும்." – (பக்:6)*

*"அவள் பாடலைக் கேட்டால், உண்மையில் மலட்டு மேகமும் கண்ணீர் சுரக்கவே செய்யும்." – (பக்:7)*

*"அவர்கள் போராட்டத்துக்கு இரண்டு நிரந்தரக் காரணங்கள் உண்டு. முதல் காரணம்: அவர்கள் இரண்டு பேரும் சம்பாதித்தது, இரண்டாவது காரணம்: அவர்கள் இரண்டு பேருமே போதாமல் சம்பாதித்தது..." – (பக்:8)*

*"ஜோசியர் கூற்றை அம்மா நம்பினாளோ, இல்லையோ, கிருஷ்ணவேணி நம்பினாள். அதற்கு முக்கிய காரணம், அதை நம்புவதில் இருந்த சந்தோஷம்." – (பக்:13)*

*"மாப்பிள்ளை தலைக்கு மேலே முக்கால் பங்கு இடம் காலியாக இருந்தது. தலைக்கு உள்ளேயும் இதே நிலைதான் இருக்க வேண்டும் என்பதை முக விலாசம் பேசியது. உயரம் நாலடி ரெண்டங்குலம். நிறம் நெய்வேலி." – (பக்:14)*

*"தங்கள் வறுமையை ஏதோ ஒரு பாவச் செயல்போல் பொத்திப் பொத்தி மறைப்பார்கள். – (பக்:24)*

*"ஒரு குழந்தையால் எப்படி தன் தாயின் சகல ஈடுபாடுகளையும் தன்பால் இப்படி ஈர்த்து வைத்துக்கொள்ள முடிகிறது? (பக்:29)*

*"ஒரு பெண் உரத்த குரலெடுத்து அதன் உச்சத்தில் எவ்வளவு வெளிப்படுத்த முடியுமோ அதைப் போல் பத்து மடங்கு அழுத்தத்தை சாதாரணமாக வாயிலுக்குக்கூடக் கேட்காத தொண்டையில், தன் தொனியிலும் சொல்லிலும் ஏற்றி அவள் பேசினாள். – (பக்:32)*

*"இதெல்லாம் ரெம்ப வசதியான வீட்டுப் பெண்களுக்கே லாயக்கான காரியங்கள். வந்து உட்கார்ந்து கொண்டால், வருஷம் பத்தானாலும் தாங்குகிற போக்கியதை தாய் தகப்பனுக்கு இருக்க வேண்டும். – (பக்:35)*

*"சிலருக்கு தாட்சண்யத்துக்குப் பயந்து கொண்டு கடன் கொடுக்க வேண்டி வரலாம். அப்புறம் முகத்தை முறைத்துக்கொண்டு கடன் வசூல் செய்ய வேண்டும். கடைசியில் சிநேகிதமும் கெட்டு, வியாபாரமும் கெட்டு, காசும் போய்விடும். – (பக்:53)*

*"அது சரி. வியர்வை மட்டுமே யாருக்கு தங்கத்தை உருட்டித் தந்திருக்கிறது? – (பக்:56)*

*"அந்தப் பால், பாத்திரத்தில் மட்டுமல்ல, கிருஷ்ணவேணியின் நெஞ்சிலும் இறங்கிய ஒன்று. – (பக்:58)*

*"இவன் எங்கம்மா பொளைக்கப் போறான்? இவனுக்கு ரெண்டு கணக்கெழுதத்தான் தெரியும். அது மாதிரியே வியாபாரம் நடத்தத் தெரியாது: கடையில் வாங்கவும் விக்கவும் ஒரு தராசு வச்சிருக்கானே. இவன் உருப்படுவானா? – (பக்:63)*

*"எந்த மூலையிலிருந்து எந்த மாயக்கை வந்து இருக்கிற காசைப் பிடுங்கும் என்று சொல்ல முடியவில்லை. குடும்பம் என்பது அட்சய பாத்திரத்திற்கு எதிர்ப்பதமாக இருந்தது. அட்சய பாத்திரத்தில் அள்ள அள்ளக் குறைவதே இல்லை. குடும்பத்தில் போடப்போட நிறைவதே இல்லை. – (பக்:65)*

*"வாழ்க்கை ஓட்டத்தை வாழ்க்கைச் சக்கரமென்று சொல்கிறார்கள். அது அவரவர் தலைக்குமேல், படுக்கை வாக்கில் சுற்றிக்கொண்டிருப்பதாகவும், செல்வம், வறுமை, நல்லது, கெட்டது, லாப, நஷ்டம் என்பவையெல்லாம் அதன் ஆரக்கால்களேயென்றும், அந்தக் கால்கள் அவர்கள் தலைக்கு மேலாக வரும்போது அவையவைகளுக்குரிய பலாபலன்கள் அவரவர்களுக்குச் சித்திக்கும் என்றும் விளக்கப்படுகிறது. இந்தச் சக்கரம் நிற்பதே இல்லையாம். சுழன்று கொண்டேதான் இருக்குமாம்..." (பக்:71)*

*"இங்கே சந்தோஷம், நிம்மதி என்பதெல்லாம் ஒரு கஷ்டத்திற்கும் அடுத்த கஷ்டத்திற்கும் இடையில் விட்டுக்கொள்ளும் ஆசுவாசப் பெருமூச்சுகள் மட்டும்தானா? – (பக்:94)*

*"அவளது அந்தக் கனவுகளும் நம்பிக்கைகளுமோ ஓர் உடலை அண்டி, அதை உண்டு முடித்ததும் வேறோர் உடலைத் தேடிப் போய்விடும் நோய்க் கிருமிகளைப் போல, தாயைக் கபளீகரம் செய்துவிட்ட திருப்தியில் இப்போது மகளை அண்டியிருந்தன. – (பக்:95)*

இவை யாவும் சம்பவங்களால் நிரம்பி வழிகிற சராசரிக் கதைகளிலிருந்து இக்தையை மேன்மைப்படுத்தும் வாசகங்கள்.

தீவிர வாசகர்களே தீவிர எழுத்தாளனின் இலக்கு. கொழுத்த மீன்களை அடைந்துவிட அவன் இடுகின்ற தூண்டில்களே அவனது படைப்புகள். அப்படி, ஜெயந்தனின் தூண்டிலில் சிக்கிக்கொண்டு அவஸ்தைப்படும் அறிவுப் பசியெடுத்த அவசர மீன் நான்.

*(24-08-2008இல் மணப்பாறையில் நடைபெற்ற நூல் வெளியீட்டு விழாவில் பேசிய நீண்ட, சுவையான பேச்சிலிருந்து கத்தரித்தெடுத்த சொற்கோவை இது.)*

'இந்தச் சக்கரங்கள்', குறுநாவல், ஜெயந்தன், விலை ரூ.70/- தோழமை வெளியீடு, 5-டி, பொன்னம்பலம் சாலை, கே.கே.நகர், சென்னை-78.

கட்டுரை:



# அம்பேத்கரின் சமூகச் சிந்தனைகள்: அரசியல் பொருளாதாரம்

முனைவர் அரச. முருகுபாண்டியன்

அண்ணல் அம்பேத்கர் என்று மக்கள் வணங்கிப் போற்றும் பீமாராவ் ராம்ஜி அம்பேத்கர் நவீன இந்தியாவை வடிவமைத்த தலைசிறந்த சிற்பி. சிறந்த கல்வியாளர். பொருளியல், அரசியல், வரலாறு, சமூகவியல், தத்துவம் மற்றும் சட்டம் ஆகிய பல்வேறு துறைகளுக்கும் மிகப்பரந்த அளவில் வளமான பங்களிப்பைச் செய்தவர். பொருளாதாரப் பேராசிரி யராகவும், வழக்கறிஞராகவும், இதழாளராகவும் சிறந்து விளங்கியவர். இந்திய அரசியலமைப்புச் சட்டத்தை வடிவமைத்த தலைமைப் பேராளர். மக்கள் கல்விச் சங்கத்தையும், சித்தார்த்தா கல்லூரியையும் நிறுவியவர். தொழிலாளர் நல அமைச்சராகவும், சட்ட அமைச்சராகவும் பணியாற்றி யவர். அனைத்திற்கும் மேலாக மனிதம் பறிக்கப்பட்டு பல நூற்றாண்டு களாகத் தீண்டாமைக் கொடுமைக்கும் சாதிய வன்கொடுமைக்கும் ஆட்பட்டு, ஒடுக்குண்டு, சுரண்டலுக்கும் வறுமைக்கும் உள்ளாக்கப்பட்டு, சேரி என்னும் விளிம்புகளில் தள்ளப்பட்ட பல கோடி மக்களின் விடுதலைக்காகத் தன் வாழ்நாளின் இறுதி மூச்சுவரை போராடிய விடுதலை வீரர் அம்பேத்கர். பல ஆயிரக் கணக்கான பக்கங்களை எழுதியும் பேசியும் அதற்கொப்பப் போராடியும் வாழ்ந்தவர் அம்பேத்கர். அவருடைய எழுத்தும் பேச்சும் மராட்டியத்தில் எழுபது தொகுதிகளாக வந்துள்ளன. தமிழில் இதுவரை நாற்பது தொகுதிகள் வந்துள்ளன. தொடர்ந்து மொழிபெயர்ப்புப் பணிகளும் வெளியீட்டுப் பணிகளும் நடந்த வண்ண மிருக்கின்றன. இன்னும் அவரது எழுத்துகளும் உரைகளும் பல்வேறு இடங்களிலிருந்து கிடைத்த வண்ணம் இருக்கின்றன. அவை அனைத்தும் தொகுக்கும் பணிகள் மராட்டியத்தில் தீவிரமாக நடந்து கொண்டிருக்கின்றன. ஒரு நூறு தொகுதிகளாவது அதில் தேறும் என்பது அறிஞர்களின் நம்பிக்கை. அவரது சமூகச் சிந்தனைகள், அரசியல் மற்றும் பொருளாதாரம் குறித்த சில குறிப்புகளை முன் வைக்கிறது இக்கட்டுரை.

30.03.2007ல் அம்பேத்கரியல் மையம், மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக் கழகத் தேசீயக் கருத்தரங்கில் வாசிக்கப்பட்ட கட்டுரை இது.

## அம்பேத்கரது வாழ்க்கைக் குறிப்புகள்:

*14.04.1891இல் பீமாராவ் ராம்ஜி அம்பேத்கர் பீமாபாய்க்கும் ராம்ஜி மாலோஜி சக்பால்க்கும் 14ஆவது மகனாகப் பிறந்தார். சத்தாராவில் தொடக்கக்கல்வியும், பம்பாய் மராத்தாவில் உயர்நிலைக் கல்வியும், எல்பின்ஸ்டன் உயர்நிலைப் பள்ளியில் மெட்ரிகுலேஷனும் பயின்று தேர்ச்சி பெற்றார். இந்நிலையில் இராமாபாயுடன் திருமணம் நடந்தது (ஏப்ரல் 1906). பம்பாய் எல்பின்ஸ்டன் கல்லூரியல் பயின்று பி.ஏ., தேர்ச்சி பெற்றார். பரோடா மன்னர் உதவியுடன் அமெரிக்கா கொலம்பியா பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. பயின்று பட்டம் பெற்றார் (1915). 'பண்டைய இந்தியாவின் வாணிபம்' என்பது எம்.ஏ. பயின்றபோது எழுதிய ஆய்வறிக்கை. 1916 மே மாதம் டாக்டர் கோல்டன் வெய்சர் நடத்திய மனித இன வரலாறு பற்றிய கருத்தரங்கில் "இந்தியாவில் சாதிகள்" என்ற ஆய்வுக் கட்டுரையைப் படித்தார். இதில் சாதிகளின் தோற்றம், வளர்ச்சி குறித்து எழுதினார். சாதிகளுக்குள்ளேயே திருமணம் என்பதுதான் சாதிகளின் சாரம் என்று குறிப்பிட்டார். பின்னர் "பிரிட்டிஷ் இந்தியாவின் மாகாண நிதியின் பரிணாம வரலாறு" என்ற ஆய்வுக் கட்டுரையை கொலம்பியா பல்கலைக்கழகத்தில் அளித்து தனது முதல் பிஎச்.டி. பட்டத்தைப் பெற்றார் (ஜூன் 1916). அமெரிக்காவில் தனது முனைவர் பட்டத்தைப் பெற்றுக்கொண்டு மேலும் பயில இலண்டன் சென்றார். பொருளாதாரத்தில் டி.எஸ்ஸி. பட்டம் பெற அனுமதி பெற்றார். பரோடா மன்னரின் நிதிஉதவி நிறுத்தப்பட்டதால் இந்தியா திரும்பினார். பரோடா மன்னரிடம் சில காலம் பணியாற்றினார். சாதி இந்துக்களின் இழிவுபடுத்த லிலிருந்து வெளியேறி பம்பாய் வந்து சேர்ந்தார். சைடன்ஹாம் கல்லூரியில் அரசியல் பொருளாதாரப் பேராசிரியராகச் சேர்ந்து சில காலம் பணியாற்றினார் (1918–1920). (ஊமைகளின் தலைவன்) மூக்நாயக் என்ற பெயரிலான இதழைத் (1920 ஜனவரி) தொடங் கினார். 1920 மார்ச் 21இல் கோல்ஹர்பூர் அரசில் மான்கோன் என்ற இடத்தில் நடைபெற்ற தீண்டப்படாதவர் மாநாட்டிற்கு அம்பேத்கர் தலைமை தாங்கினார். சாகு மகாராஜா அம்பேத்கர் ஒடுக்கப்பட்டோரின் மீட்பர் என்று பாராட்டினார். மீண்டும் கல்வியில் கவனம் குவிய, சட்டம் பயிலவும் பொருளாதாரப் படிப்பைத் தொடரவும் இலண்டன் பயணமானார் (1920 ஜூலை). அங்கு சட்டம் பயின்று கொண்டே பொருளியல் துறையில் ஆய்வுகளை நிகழ்த்தினார். "பிரிட்டிஷ் இந்தியாவில் பேரரசின் நிதியை மாகாணங்களுக்குப் பகிர்ந்தளித்தல்" என்ற கட்டுரைக்கு எம்.எஸ்.* (Master of Science) *என்ற பட்டத்தை இலண்டன் பல்கலைக்கழகம் வழங்கியது (1922). "ரூபாயின் சிக்கல்" என்ற ஆய்வுக் கட்டுரைக்காக டி.எஸ்.,* (Doctor of Science) *என்ற பட்டத்தையும் பெற்றார் (1923). பின்னர் பாரிஸ்டர் (1923) பட்டமும் பெற்று இந்தியா திரும்பினார். தீண்டப்படாத மக்களின் அரசியல் தலைவராக உயர்ந்தார். தீண்டப் படாதவர்களின் உயர்வினுக்குப் போராடுவதற்காக பகிஷ்கிரித் கித்தகாரணி சபா என்ற அமைப்பை ஏற்படுத்தினார் (1924). மகத் நகரில் சவுதார் குளத்தில் தீண்டப்படாத மக்கள் நீர் எடுக்கும் உரிமையை நிலைநாட்ட நீர் அள்ளிப் பருகினார். மனுஸ்மிருதி கொளுத்தப்பட்டது (1927 மார்ச் 20). தீண்டப் படாத வகுப்பு மக்களின் கல்வி, வேலைவாய்ப்பு, அரசியல் தொடர்பான பிரச்சனைகள் குறித்த அறிக்கையை அம்பேத்கர் சைமன் குழுவிற்கு அனுப்பினார் (1928). நாகபுரியில் அனைத்திந்திய தீண்டப்படாதார் மாநாட்டிற்குத் தலைமை தாங்கிப் பேசினார். இந்திய மத்திய மாநில சட்டசபையில்*

தீண்டப்படாதாரின் பிரதிநிதித்துவம், வேலை வாய்ப்பில் இடஒதுக்கீடு, அரசியல் சட்டச் சிக்கலைத் தீர்க்க வட்டமேசை மாநாடு ஆகியவை குறித்து உரையாற்றினார் (08.08.1930). வட்டமேசை மாநாட்டில் அம்பேத்கரும், இரட்டைமலை சீனிவாசனும் கலந்துக்கொண்டனர். பிரிட்டிஷ் பேரரசர் ஐந்தாம் ஜார்ஜ் இதனைத் தொடங்கி வைத்தார் (12.11.30). இரண்டாவது வட்டமேசை மாநாடு 01.12.31இல் தொடங்கியது. பிரிட்டிஷ் பிரதமர் வகுப்புவாரித் தீர்ப்பை அறிவித்தார். தீண்டப்படாத மக்களுக்குத் தனி வாக்காளர் தொகுதி வழங்கப்பட்டது (04.08.1932). காந்தி இதற்கெதிராக உண்ணா விரதமிருந்து, தனி வாக்காளர் தொகுதி முறையை ரத்து செய்யும் பூனா ஒப்பந்தம் உருவானது (24.09.1932). ஜாட்பட் தோடக் மண்டல் மாநாட்டிற்காக எழுதிய தலைமை உரை "சாதி ஒழிப்பு" என்ற பெயரில் நூலாக வெளிவந்தது. சுதந்திரத் தொழிலாளர் கட்சியை நிறுவினார் (1935). பௌத்தம் குறித்து பேசவும், எழுதவும் செய்தார். இந்துத்துவ எதிர்ப்புக் கருத்துகளும் பௌத்த மதத்தை ஏற்பது குறித்தும் எழுதினர் (1940). வைசிராய் கவுன்சிலில் தொழிலாளர் நல அமைச்ச ரானார். "காந்தியும் காங்கிரசும் தீண்டப்படா தவர்களுக்குச் செய்தது என்ன?" என்ற நூலை எழுதி வெளியிட்டார் (1945). தொடர்ந்து "சூத்திரர்கள் யார்" நூல் வெளியானது (1946). மாகாணங்களும் சிறுபான்மையினரும் (1947), ரூபாயின் சிக்கல் (1947) போன்ற நூல்கள் வெளியாயின. இந்திய விடுதலை(15.08.1947)க்குப்பின் சுதந்திர இந்தியாவின் மத்திய அமைச்சரவையில் அம்பேத்கர் சட்ட அமைச்சராகப் பொறுப் பேற்றார். அம்பேத்கரை தலைவராகக் கொண்ட அரசியல் சட்ட வரைவுக்குழு அமைக்கப்பட்டது (26.11.1949). பெண்களுக்கு உரிமைகள் வழங்கும் இந்துச் சட்டத்திருத்த மசோதாவை அம்பேத்கர் நாடாளுமன்றத்தில் முன்மொழிந் தார் (05.02.1951). இந்துச் சட்டத் திருத்த மசோதா நிறை வேறாததால் அமைச்ச ரவையிலிருந்து வெளியேறினார் (11.10.51). புத்தரும் அவருடைய தம்மமும், பண்டைய இந்தியாவில் புரட்சியும் எதிர்ப் புரட்சியும், புத்தரும் காரல்மார்க்சும் போன்ற நூல்களை எழுதி னார் (1955). இலட்சக்கணக்கான மக்களுடன் பௌத்தத்தை ஏற்றார் (14.10.1956). இந்தியக் குடியரசுக் கட்சியை உருவாக்கினார் (1956). அதே ஆண்டு இறுதியில் காலமானார் (06.12.1956).

## சமூகச் சிந்தனைகள்:

எச்.எம்.ஜான்சனின் கருத்துப்படி சமூகவியல் என்னும் அறிவியல் சமூகக் குழுக்கள் பற்றிய ஆய்வாகும். அதன் உள்ளடக்கம், நிறுவன அமைப்பு, அது செயல்படும் முறை, அமைப்பைத் தக்க வைக்கவோ அல்லது மாற்றவோ உள்ள நடைமுறை, பல குழுக்களுக்கிடையிலான உறவுமுறைகள் ஆகியன பற்றிய அறிவே சமூகவியல். அண்ணல் அம்பேத்கரின் சமூகச் சிந்தனைகள் இந்திய சமூக அமைப்பின் சாதிகளின் ஆதிக்கம் பற்றி விரிவாக ஆய்வு செய்கிறது. சாதிகளின் தோற்றம், இருப்பு, ஒழிப்பு பற்றிய கருத்துகளை முன் வைக்கிறது. சாதிய ஏற்றத் தாழ்வற்ற சமூகம் பற்றிய விடுதலையை முன்வைக்கிறது.

இந்தியாவில் சாதிகள், சாதி ஒழிப்பு, தீண்டத்தகாதவர்கள் யார், அவர்கள் ஏன் தீண்டத்தகாதவ்களாக்கப்பட்டார்கள், இந்துத்துவத்தின் புதிர், பார்ப்பனியத்தின் வெற்றி போன்ற ஆய்வுகளின் மூலம் சாதியம் குறித்து பல விவாதங்களை எழுப்பினார்.

தீண்டாமையின் வேர் சாதிமுறை, சாதிமுறையின் வேர் வருணாசிரமம், வரணாசிரமத்தின் வேர் பார்ப்பனியம் (இந்து மதம்), பார்ப்பனியத்தின் வேர் அரசியலதிகாரம் என்று சாதி ஒழிப்பு நூலில் வலியுறுத்திய அண்ணல் அம்பேத்கர், சாதி ஒழிய இந்து மதத்தையே ஒழிக்க வேண்டும் என்றும் இந்துத்துவ சக்திகளின் அரசியலதிகாரத்தை ஒழித்து ஒடுக்கப்பட்ட தீண்டத்தகாதவர்கள் அரசியலதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும் என்றும் வலியுறுத்தினார்.

பார்ப்பனியமும், முதலாளியமும் ஒடுக்கப்பட்ட மக்களின் எதிரிகள் என்று அண்ணல் சுட்டிக் காட்டினார்.

சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் இவற்றின் மறுப்பே பார்ப்பனியம், அது பார்ப்பனர்களிடம் மட்டுமன்றி சகல சாதிகளிடமும் ஊடுருவிக் கிடக்கிறது என்றார். வருணாசிரம ஏற்றத்தாழ்வை, அல்லது பிறப்பினால் உண்டாகும் ஏற்றத் தாழ்வை, அல்லது இந்து மத உளவியலான நம்பிக்கைகள் சார்ந்த படிநிலை அமைப்பை நியாயப்படுத்தும் கருத் தியலையே அவர் பார்ப்பனியம் என்றார். வேதங்களையும், இதிகாசங் களையும், பகவத்கீதையையும் மறுவாசிப்பு செய்து அவைகள் ஆபாசமானவை என்பதை அம்பலப்படுத்தினார். பாட்டாளிகள் இழப்பதற்கு அடிமைச் சங்கிலிகளைத் தவிர ஏதுமற்றவர்கள் என்ற மார்க்சின் அறைகூவல் இந்தியப் பாட்டாளி வர்க்கத் திற்குப் பொருந்துமா என்கிற கேள்விகளுடன் ஒவ்வொரு சாதிக்காரனுக்கும் இங்கே இழப்பதற்கு சாதி உரிமைகள் உள்ளனவே என்றும், சாதி ஒழிந்தால்தான் பாட்டாளி வர்க்கமாகத் திரள முடியும், அதுவே புரட்சிக்கு அடித்தளம் அமைக்கும் என்றார்.

இனவேற்றுமையை விடவும், அடிமைத்தனத்தை விடவும் சாதிய ஒடுக்குமுறை மிகக் கொடூரமானது என ஒப்பீடு செய்தார். கறுப்பின அடிமைகளுக்குக் கிடைக்கும் தேர்வு செய்யும் முறை இந்தியத் தீண்டத்தகாதவர்களுக்கு இல்லை. எனவே சாதி என்பது அடைபட்ட வர்க்கம் என்றார்.

சாதி ஒழிய வேண்டுமானால் சாதி மறுப்புத் திருமணங்கள் பரவலாக்கப்பட வேண்டும். இந்து சமயத்தில் அனைத்து சாதியினரும் அர்ச்சகராகிற வாய்ப்பை வழங்க வேண்டும், அது நிகழாத போது, வேதங்களையும், சாஸ்திரங்களையும் வெடி வைத்துத் தகர்க்க வேண்டும். பகுத்தறிவு செயல்பட இடம் கொடுக்காத ஒழுக்கமில்லாத வேதங்களையும், ஸ்மிருதிகளையும் அடிப்படையாகக் கொண்ட மதத்தை நீங்கள் அழிக்க வேண்டும் என்று இலட்சக்கணக்கான மக்களோடு பௌத்தத்தை தழுவினார்.

## அரசியல் நிலைப்பாடு:

### இரட்டை வாக்குரிமை மற்றும் இடஒதுக்கீடு:

அண்ணல் அம்பேத்கர் அவர் வாழ்ந்த காலத்தின் மிகச்சிறந்த கல்வியாளராகத் திகழ்ந்தார். 'கற்பி, புரட்சி செய், ஒன்று சேர்' என்பது அவருடைய புகழ்பெற்ற வாசகம். கல்வியால் யாரையும் எதிர்கொள்ளும் துணிச்சல் அவருக்கிருந்தது. தனது சமூக விடியலைக் கல்வி மூலமே பெற முடியும் என்பது அவரது அசைக்க முடியாத நம்பிக்கை. எனவே, கல்விப் பரவலுக்காக அவர் எடுத்துக்கொண்ட முயற்சிகள் ஏராளம். சித்தார்த்தா கல்லூரியை அவர் தொடங்கினார். கல்வி நிலையங்களில் மற்றும் அரசுப் பணிகளில் சட்டமன்றம் மற்றும் நாடாளுமன்ற அமைப்புகளில் அட்டவணை சாதியின ருக்கான இட ஒதுக்கீட்டிற்கு அண்ணல் வழி வகுத்தார். தீண்டாமை மற்றும் சாதி ஒழியும் வரை இந்த இட ஒதுக்கீடு தொடர வேண்டும் என்றார். ஒடுக்கப்பட்ட மக்களின் விடுதலைக்காகவே அரசியலமைப்புச் சட்டத்தை எழுத ஒப்புக் கொண்டதாகக் கூறினார். அறிவு வளர்ச்சியே அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்ற உதவும் என்று நம்பினார். 'நாம் ஒரு ஆளும் வர்க்கமாக மாறாதவரை நம் மீதான அடிமைத் தனம் ஒழியாது' என்றார்.

தாழ்த்தப்பட்ட மக்களின் பிரதிநிதியைத் தாழ்த்தப்பட்டவர்களே தேர்ந்தெடுத்தால்தான் அவர்கள் தாழ்த்தப்பட்டவர்களுக்கென உழைக்க முடியும்; இல்லையேல் ஆதிக்க சாதியினரையே சார்ந்து செயல்படும்படியாகும் என்று அண்ணல் அம்பேத்கர் வகுப்புவாரி பிரதிநிதித்துவம் என்கிற முறையை இரண்டாம் வட்ட மேசை மாநாட்டில் வாதாடிப் பெற்றார். இத்தகைய சிறப்பு ஏற்பாட்டை ஆங்கிலேய அரசு தாழ்த்தப்பட்டோருக்கும்

இதர சிறுபான்மையினருக்கும் வழங்கியது. இதன்படி தாழ்த்தப்பட்டவர்கள் இரண்டு வாக்குரிமைகளைப் பெறுவர். பிற சாதியினருடன் இணைந்து ஒரு பொது வேட்பாளரைத் தேர்ந்தெடுக்கும் உரிமையும், தாழ்த்தப்பட்டவர்கள் மட்டுமே வேட்பாளர்களாக நிற்கும் தனித்தொகுதி ஒன்றிற்கான வாக்குரிமை மற்றதுமாகும். இந்தச் சிறப்பு ஏற்பாட்டின்படி தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சுயமாக நின்று தேர்தலில் வெற்றி பெற இயலும் என்றறிந்த காந்தி சாகும்வரை உண்ணாவிரதம் இருந்து இந்தச் சிறப்பு ஏற்பாட்டைக் காலிசெய்து, காந்தியின் விருப்பப்படி பூனா ஒப்பந்தம் என்கிற கபட நாடகம் அரங்கேறியது. இது குறித்து அம்பேத்கர் எழுதும்போது 'தாழ்த்தப்பட்டவர்களின் உரிமையா? இந்திய மக்களால் கடவுளாகக் கருதப்படும் காந்தியின் உயிரா? மனிதாபிமான அடிப்படையில் இரண்டாவதைத் தேர்வு செய்தேன்' என்று தன் நிலையை விளக்கினார். (இது குறித்து மேலும் அறிய காந்தியும் காங்கிரசும் தீண்டத்தகாத மக்களுக்குச் செய்தது என்ன? என்கிற நூலை வாசிக்கவும்).

**அம்பேத்கரின் பெண்ணியச் சிந்தனைகள்:**

பெண்கள் விடுதலை பெற வேண்டும் என்பதற்காகத் தன் அமைச்சர் பதவியைத் துறந்த முதல் மனிதர் அண்ணல் அம்பேத்கர் ஆவார். பெண்களுக்குச் சொத்துரிமை, விவாகரத்து மற்றும் மறுமணம் போன்ற முற்போக்கான அம்சங்களடங்கிய இந்துச் சட்டத் திருத்த மசோதாவை நாடாளுமன்றத்தில் நிறைவேற்ற பெரிதும் முயன்றார். பார்ப்பனர்களும் இந்து வெறியர்களும் இம்மசோதா நிறைவேறா வண்ணம் தடுத்து நின்றனர். நேருவும் பார்ப்பனர்களுக்கு அஞ்சி இம்மசோதாவை நிறைவேற்ற அளித்த உறுதிமொழியிலிருந்து நழுவினார். இதனைக் கண்டு மனவேதனை அடைந்த அம்பேத்கர் தன் அமைச்சர் பதவியை உதறியெறிந்துவிட்டு காங்கிரஸ் அமைச்சரவையிலிருந்து வெளியேறினார்.

பெண்களின் பிரச்சனையும் தீண்டத்தகாதவர்கள் பிரச்சனையும் ஒன்றுதான் என்றும் இருவர் மீதும் தீட்டு என்கிற கருத்து திணிக்கப்பட்டிருக்கிறது என்றும் இரு பிறப்பாளருக்கான தகுதி இருவருக்கும் மறுக்கப்பட்டிருக்கிறது என்றும், பெண் மீது ஆண் திணித்திருக்கிற எல்லா கோட்பாடுகளையும் மீறாத வரை பெண்ணுக்கு விடுதலையே இல்லை என்றும் எழுதினார். இலட்சியப் பெண்கள் புராண இதிகாசங்களில் எவ்வாறு ஒடுக்கப்பட்டிருந்தார்கள் என்றும், பெண்களை மனு எவ்வாறு இழிவுப்படுத்தினார் என்றும் அம்பலப் படுத்தினார். இந்துச் சட்டத்திருத்த மசோதா மீதான விவாதங்களில் பெண்கள் விடுதலைக்கென எவ்வாறு சளைக்காமல் வாதாடினார் என்பதை தொகுதி 31இல் விரிவாக அறியலாம்.

**அம்பேத்கரின் பொருளாதாரச் சிந்தனைகள்:**

முனைவர் அம்பேத்கரின் பன்முக வெளிப்பாடுகளில் மிகவும் முக்கியமானவை அவரது பொருளியல் சிந்தனைகளாகும். அவரது முதுகலைப் பட்டம், முனைவர் பட்டம், அறிவியல் முனைவர் பட்டம் அனைத்தும் பொருளாதார ஆய்வுகளுக்காக வழங்கப்பட்ட பட்டங்களே ஆகும்.

அவரது பொருளாதார ஆய்வுகள் முழுக்கமுழுக்கத் தீண்டத்தகாதவரின் கண்ணோட்டத்தில் அமைந்தவையே. சாதியமைப்பின் பல்வேறு பொருளியற் பண்புகளை ஆராய்ந்த அவர் ஆதிக்க சாதியினரின் கையில் உற்பத்திக் கருவிகள் அனைத்தும் இருப்பதாகவும், சூத்திர மற்றும் தீண்டத்தகாதோரிடம் உழைப்பு மட்டும் இருப்பதாகவும் கூறினார்.

அம்பேத்கர் பெரிதும் முன்நிறுத்துவது அரசு சோசலிசமாகும். அதையும் அவர் இந்திய அரசியல் சட்டத்தின் வாயிலாக நிறுவப்பட வேண்டுமென விரும்பினார். அதன்படி,

1. முதன்மைத் தொழில்கள் அரசுக்குச் சொந்தமாய் இருக்கும்.
2. அரசால் அது நிர்வகிக்கப்பட வேண்டும்.
3. வேளாண்மை அரசுத் தொழிலாக இருக்க வேண்டும்.
4. வயது வந்த ஒவ்வொரு குடிமகனுக்கும் அரசு காப்புநிதியளிக்க வேண்டும்.
5. நிலங்கள் கூட்டுப்பண்ணைகளாக்கப்படவும், அப்பண்ணைகள் கிராம மக்களிடம் சாகுபடிக்கு விடப்படவும் வேண்டும்.
6. நிலங்கள் சமஅளவில் உழைப்பைக் கோருவதால் சாதி சமய வேறுபாடுகளோ, நிலவுடமையாளர்- குத்தகைதாரர் வேறுபாடுகளோ இராது.
7. பாசனநீர், உழவுக்கருவிகள், உரம் முதலியன வழங்குவது அரசின் கடமையாகும் என்று கூறினார்.

நிதி ஒதுக்கீட்டில் இராணுவத்திற்கென அதிக அளவு ஒதுக்கப்படுவதைத் தவிர்த்து மக்கள் நலப்பணிகளுக்கு நிறைய நிதியை ஒதுக்க வேண்டும் என்றார். காஷ்மீர் பிரச்சனை இன்றைக்கு கூடுதலான கவனத்தை பெற்றிருக்கும் சூழலில் காஷ்மீரைத் தனியே பிரித்துக் கொடுத்து விடுவதே நல்லது என்றார்.

மதுவிலக்கு தேவையற்றது. பசியில் வாடுபவனா, குடிகாரனா? யாருடைய நலன் என்கிற கேள்வி வந்தால் நாம் பசியில் வாடுபவனின் பக்கமே நிற்க வேண்டுமென்றார்.

**சமூக மாற்றம் குறித்து:**

'இந்தியாவில் ஏன் சமூகப் புரட்சி நடக்கவில்லை என்ற கேள்வி ஓயாது என்னைத் துன்புறுத்தி வருகிறது. இதற்கு ஒரே பதில்தான் என்னால் தர முடியும். துயரமான நால்வர்ண முறையானது கீழ்மட்ட வர்ண இந்துக்களை நேரடி நடவடிக்கையில் இறங்காவண்ணம் முழுக்கவே தகுதியற்றவர்களாக்கி விட்டது. அவர்கள் ஆயுதம் ஏந்த முடியாது. ஆயுதம் ஏந்தாமல் கலகம் செய்ய முடியாது. இவர்கள் எல்லாம் உழவர்களாக இருக்கிறார்கள் அல்லது உழவர்களாக இருக்க நிர்பந்திக்கப்பட்டிருக்கிறார்கள். ஆகவே தங்கள் விளைச்சலை ஆயுதம் தாங்கியவர்களோடு பரிமாறிக் கொள்ள அனுமதிக்கப் பட்டிருக்கிறார்கள். அவர்களிடம் எந்த ஆயுதமும் இல்லை. ஆகவே மற்றவர்கள் அவர்களை ஆண்டு வருகிறார்கள். நால்வர்ண முறையின் காரணமாக அவர்களால் கல்வி கற்க முடியாது. தங்கள் மீட்சி குறித்து அல்லது அதற்கான வழிமுறை குறித்து அவர்களால் சிந்திக்க முடியாது. அவர்கள் கீழான நிலைக்குத் தள்ளப் பட்டிருக் கிறார்கள். இதிலிருந்து தப்புவதற்கான வழிமுறைகளை அறிந்திருக்கவில்லை. தப்புவதற்கான வழிமுறைகளையும் பெற்றிருக்கவில்லை. நிரந்தரமான அடிமைத்தனத்தோடு பிணைக்கப்பட்டது தங்களுடைய தப்பிக்க முடியாத தலைவிதி என்று அவர்கள் ஏற்றுக்கொள்ளும்படிச் செய்யப்பட்டிருக்கிறார்கள்.

ஆயுதம் தாங்கிய புரட்சி குறித்து அம்பேத்கர் எழுதியது வெறும் வெற்றுச் சொல்லாடல்கள் அல்ல. அதன் உள்ளீடாகத் தெரிவது வர்க்கப் புரட்சிதான். ஆனால் வர்க்கம் உருவாக இங்கே சாதி தடையாக உள்ளது. எனவே வர்க்கப் போராட்டத்தின் முன் நிபந்தனை சாதி ஒழிப்பாகும். சாதி ஒழிப்புதான் பாட்டாளி வர்க்கத்தை ஒன்று திரட்டும். எனவே சாதி ஒழிப்புதான் இந்திய சமூகத்தின் முதல் புரட்சியாகும். சாதி அமைப்பை நிலவுடைமையின் மேல்கட்டுமானம் என்கிற மார்க்சியர்களின் அணுகுமுறையிலிருந்து அம்பேத்கர் விலகும் புள்ளி இதுதான். வர்க்கப்புரட்சி என்ற ஒன்று நடந்தாலும் அப்போதும் சாதி இந்தியச் சமூகத்திற்குச் சவாலாகவே இருக்கும். எனவே, சாதி ஒழிப்பே இந்தியச் சமூகத்தின் மிக அவசியத் தேவையாகும்.

பயன்பட்ட நூல்கள்:

அண்ணல் அம்பேத்கர் நூல்தொகுப்புகள், என்.சி.பி.எச். சென்னை-98.

டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் வாழ்க்கை வரலாறு, ஆங்கில மூலம்: தனஞ்செய் கீர், தமிழாக்கம்: க.முகிலன், மார்க்சிய-பெரியாரியப் பொதுவுடைமைக் கட்சி, சென்னை-5. ●

பேச்சு

# பகுத்தறிவை மூடநம்பிக்கையாக்கும் புதிய பார்ப்பனர்கள்

கவிதாசரண்

***ஆசிரியர் குறிப்பு:***

'மண் மொழி' என்னும் தன் இதழில் இராசேந்திர சோழன் அவர்கள் 'பகுத்தறிவின் மூட நம்பிக்கைகள்' என்னும் தலைப்பில் கட்டுரைகள் எழுதுகிறார். இன்னும்கூடத் தொடர்வார் என்று தோன்றுகிறது. அந்தக் கட்டுரைகளின் தொனியும் பொருளும் ஒன்றுதான். 'இந்து மதத்தின் சில குறைகளுக்காக நாம் அதை இழிவு செய்துவிட முடியாது. விமர்சித்துக் கொண்டே இருக்கக் கூடாது. ஒரு ஜனநாயக இந்துவாக அதை அனுசரித்தே போகவேண்டும். பிற மதங்களை - குறிப்பாக இஸ்லாத்தைக் காப்பாற்றிக் கொண்டிருக்க முடியாது' என்பதே அக்கட்டுரைகளின் பேச்சு. அவருக்கு முட்டுகொடுப்பதற்காக 'பிரவாஹன்' என்னும் ஒரு பார்ப்பனர், பொது நியாயம் பேசுபவரைப் போன்றதொரு பாவனையில் பெரியார், மார்க்ஸ் போன்றவர்களை நக்கலாகக் கேள்விக்குட்படுத்துவதும் இந்து வாழ்வியல் அவர்களையெல்லாம் விட உயர்ந்தது என்றும் தீவிரப் பரப்புரை செய்கிறார். அவரையே விசாரித்ததில் தான் மட்டுமல்ல, தாங்கள் ஒரு குழுவாக இயங்குபவர்கள் என்கிறார். ஆக, அவர் ஒரு இயக்கவாதி. தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் சலித்தெடுத்து பார்ப்பன தர்மங்களை அவற்றின் உள்ளுறை அர்த்தங்களாகத் தேடி எடுத்து, வெளிச்சத்திற்குக் கொண்டுவந்து நியாயப்படுத்தும் இயக்கவாதி. இது தெரிந்தோ, தெரியாமலோ, இராசேந்திர சோழன் இந்துமதச் சுரணையை வளர்த்தெடுப்பதில் அவரோடும், தனித்தும் ஒரு சாமியாடியைப்போல் மறித்துமறித்துப் பேசிக் கொண்டே போகிறார்.

காஞ்சிபுரம் 'இலக்கிய வட்டம்' ஏற்பாடு செய்திருந்த விமர்சன அரங்கில் இக்கட்டுரை வாசிக்கப்பட்டது. இலக்கிய வட்டம் நாராயணன் உடனடியாக அதை வாங்கி இராசேந்திர சோழனைத் தன் இதழில் வெளியிடக் கோரினார். வெளியிடப்படவில்லை. இங்கே வெளியிடப்படுகிறது.

---

எல்லாருக்கும் வணக்கம். வீண் முகமன்களில் நேரத்தை விரயம் செய்யாமல் நேரடியாக விஷயத்திற்கு வருவோம். இன்றைய விவாதப் பொருளை உருவாக்கியவர்களில் பிரவாகன் நம்மில் பலரை, குறிப்பாக என்னை ஏமாற்றிவிடவில்லை. அவரிடம் எதை எதிர்பார்க்கலாமோ, அதை மிகுந்த கெட்டிக்காரத்தனத்தோடும் புத்திசாலித் தனத்தோடும் தனக்கான தர்க்க சாத்தியங்களோடு வழங்கியிருக்கிறார். என்னை ஒரு அசப்பில் ஏமாற்றி விடுகிறவர்களை, 'அவர்கள் சொல்வது உண்மை தானல்லவா?' என்று என்னைப் பொய் மயக்கில் தள்ளிவிடுகிறவர்களை நான் புத்திசாலிகளாகவே மதிப்பிடுகிறேன். அந்த வகையில் பிரவாகன் நல்ல புத்திசாலி. இந்த புத்திசாலித்தனம் ஒருவகை இரத்தப் புற்றுநோய் மாதிரி. சாதாரணமாக இரத்தப் புற்றுநோய் மனிதர்களைக் கொல்லும். ஆனால் இந்தப் புத்தி நோய் தன்னளவில் மார்க்கண்டேய பலம் பெற்றுப் பிறரைத் தின்று உமிழும். மண் புழு தின்றுமிழ்ந்த மண்ணைப் போலத் தான் உமிழ்ந்ததையே உரமாக்கிக் கொண்டு செழித்து வளரும்.

எனக்கு இவரையொத்த நண்பர்கள் சிலரோடு உரசலுண்டு. தஞ்சாவூரிலிருந்து மணிவண்ணன் என்றொரு நண்பர். மற்றொருவர் இடதுசாரி இயக்கத்திலிருந்து களைப்புற்று பார்ப்பனியக் கருத்தியலில் இளைப்பாறி மகிழும் பிரபல எழுத்தாளர் ம.ந. ராமசாமி. தலித்தியத்தில் புரண்டெழுந்து பெரியாரியத்தைக் கீறிப் பார்க்கும் ஹவி என்னும் போதி பாலன், இடதுசாரித் தலித்தியவாதி பாக்கி உமாநாத் போன்ற இளைஞர்கள். இவர்களோடுகூட, கடந்த நான்கு நாட்களாக– அதாவது 26–8–2008இலிருந்து எனக்கு இன்னொரு நண்பரும் கிடைத்திருக்கிறார். இவர் பக்திமான். பெயர் G.வெங்கட் ராமன். ஓய்வு பெற்ற ஆசிரியர். விருத்தாசலத்துக்காரர். 80 வயது முதியவர். சோற்றைப் பிசைந்து – மன்னிக்கவும், சாதத்தைப் பிசைந்து கஞ்சியாகத்தான் குடிக்க முடிகிறது. கீழ்த்தாடை நோகிறது. உள்ளங்கையால் ஏந்திப் பிடித்துக் கொண்டால் இதமாய் இருக்கிறது. மொழி வெறும் தகவல் பரிமாற்ற ஊடகம் மட்டுமே என்று திடமாய் நம்புகிறவர். "A language is an instrument through which we are expressing our thoughts and feelings. It is not god. நாம் (தமிழர்கள்) மொழியைக் கடவுள் நிகர் கொண்டுபோய்விட்டோம்" என்பன அவர் வாக்கியங்கள். ஆதிசங்கரனின் 'இரண்டல்ல' என்னும் தத்துவத்திற்குச் சற்றும் குறைந்ததல்ல இவரது நம்பிக்கை. ஆறாம் வகுப்பிலிருந்து 11ஆம் வகுப்பு வரை சமஸ்கிருதம் படித்தவர். கழக ஆட்சி அடைப்புக் குறியில் (கலக ஆட்சி) வந்து சமஸ்கிருதமோ இந்தியோ படிக்க முடியாமல் செய்து, தமிழாசிரியரைவிட அதிக சம்பளம் வாங்கிக் கொண்டிருந்த அந்த ஆசிரியர்களை தொடக்கப் பள்ளி ஆசிரியர்களாகக் கீழே தள்ளியதை இன்னும் மன்னிக்கத் தயாராயில்லாதவர். தகவலுக்கும் மேலாக சமஸ்கிருதத்தை நேசிப்பவர். 'இரண்டல்ல' என்று சொன்ன அந்த ஆதிசங்கரனே வேதத்தை பிராமணனே ஓத வேண்டும் என்று ரிவர்ஸ் கீரிலும் விதி வகுத்திருக்கிறானல்லவா. இந்த நண்பர் வள்ளலாரின் பக்தர். வள்ளலார் அவர் கனவில் வந்து 'பூணூலைக் கழற்றி எறி' என்று உபதேசித்ததில் கடந்த 30 ஆண்டுகளாகப் போடுவதில்லை. உறவுக்காரர்கள் வரும்போது மட்டும் போட்டுக் கொள்வதுண்டு. 'நீ ரோமில் இருக்கும்போது ரோமானியனைப் போல நட' என்பது வாசகமல்லவா? (அவர் நினைவுபடுத்திய வாசகம்தான்.) பின்னொருமுறை வள்ளலார் கனவில் வந்து 'புட்டபர்த்தி சாயிபாபாவைப் போய்ப் பார்' என்று கட்டளையிட்டிருக் கிறார். இவர் போய் தரிசித்தபோது இவரைப் பார்த்து "நான் கிருஷ்ணராய் இருந்தபோது நீ என் விளையாட்டுத் தோழன் ததியாண்டனாய் இருந்தவனல்லவா?" என்று சொல்லி அருள் பாலித்திருக்கிறார். காலையில் தினமலர் படிக்கிறார். "எனக்கு தங்களைப் போல் உள்ள good souls ஐப் பார்க்க, பேச Asai! இங்கு நல்ல பேச்சுப் பேச ஆளில்லை," என்று முடித்திருக்கிறார்.

எனக்கும் அவரைப் பார்க்க ஆசைதான். ஒரு பகல் பொழுது முழுவதுமாயினும் அவருக்கு ஆறுதலாக அவரோடு இருந்துவர ஆசைப்படுகிறேன்.

பிரவாகனுடைய எதிர்வினையின் மூலப்படி எனக்குக் கிடைத்த அன்றே ராமானுஜம் என்னும் மொழி பெயர்ப்பாளர் – எழுத்தாளர் என்னைப் பார்க்க வந்து, தான் எழுதிய "மனுதர்ம சாஸ்திரம் கட்டமைத்த பார்ப்பனிய உடல்கள்" என்னும் கட்டுரையைக் கொடுத்துப் படிக்கச் சொல்லிச் சென்றார். அக்கட்டுரையில் பேராசிரியர் உமா சக்கரவர்த்தியின் சில கருத்துகள் தொகுத்தளிக்கப் பட்டிருந்தன. அவை என் கருத்துகள் சிலவற்றைச் சரிபார்த்துக் கொள்ள உதவின.

அந்தக் கட்டுரையில் கீழ்க்கண்டவாறு ஒரு பகுதி: "மனு கட்டமைத்த ஒரு பார்ப்பனிய உடலுக்கு வரலாறு முக்கியமில்லை, மொழி முக்கியமில்லை, மதம் முக்கியமில்லை, நிலப்பரப்போடுள்ள உணர்வுபூர்வமான தொடர்பு முக்கியமில்லை. கொள்கைகள், கோட்பாடுகள், நியாயங்கள், அதர்மங்கள், நல்லது, தீயது அனைத்துமே அந்த உடலாகச் சுருங்கிவிட்டது. இந்த

உடலுக்கு வெளியே உள்ள அனைத்தும் இந்தப் பார்ப்பன உடலின் அதிகாரத்தையும் தனித் தன்மையையும் காப்பாற்றும் அடிப்படையிலேயே வகைப்படுத்தப்படுகிறது, கையாளப்படுகிறது. இந்தப் பார்ப்பனிய உடலின் உச்சகட்ட வளர்ச்சியாக நாம் ஆதி சங்கரனின் மாயாவாதக் கோட்பாட்டை முன்வைக்கலாம். வரலாறு மாயை, சமூகம் மாயை, மனித உறவுகள் மாயை, கலாச்சார வெளிப்பாடுகள் மாயை என்று அனைத்தும் நிராகரிக்கப்பட்டு 'அகம் பிரம்மாஷ்மி' என்று தன் உடலையே இந்தப் பிரபஞ்சத்தின் அனைத்திற்கும் மையமாக வைக்கிறது. இதைப் பார்ப்பன அகங்காரத்தின் உச்சகட்டமாகவே பார்க்கலாம்" என்று அந்தப் பகுதி முடிகிறது.

1997இல் நான் இதை என் மொழியில் எழுதியிருந்தேன்.

*"பார்ப்பனர்கள் ஆகாசத் தாமரை மாதிரி. நீர் வேண்டாம், நிலம் வேண்டாம். காற்றைக் குடித்தே வளர்வார்கள்; ஒருமையுற்றிருப்பார்கள். நம்மூர்ப் பார்ப்பனர்களை உதாரணத்துக்கு எடுத்துக் கொண்டால் அவர்கள் கள்ளக்குறிச்சியில் இருந் தாலும் கலிபோர்னியாவில் இருந்தாலும் ஒரே மொழியையே பேசுவார்கள் – பார்ப்பன மொழியை..."*

என்று வளர்கிறது அந்தக் கருத்து. அண்மையில் எழிலரசன்கூடத் தன் கட்டுரையில் தமிழ்நாட்டில் பார்ப்பனத் தமிழைத்தான் ஆட்சி மொழியாக்க வேண்டி வரும் என்பதாக இதை வெளிப்படுத்தியிருந்தார். இதன் திரண்ட வடிவம்தான் பார்ப்பன உடல் என்னும் வார்ப்பு.

என்னுடைய விருத்தாசலம் நண்பர் உடலாக ஒன்றியிராமல் உயிர்த்துவம் மிக்கப் பன்முகப் பரிமாணமாய் விரவியிருப்பார் எனில், நானும் அவரும் நல்லுயிர்களாய் கைகோர்த்து ஆறுதல் பெறுவது சாத்தியமாகலாம். நான் ஒன்றும் தொடர்பில்லாமல் இவற்றையெல்லாம் சொல்லவில்லை. இவற்றினூடே செல்லும் இழையை நீங்கள் அடையாளப்படுத்த முடிந்தால் அதுவே விடையை வடிவமைத்துச் செல்வதைப் புரிந்து கொள்ளலாம்.

*இப்பொழுதெல்லாம் நீங்கள் சௌம்ய நாராயண் களை, அதாவது பிரவாகன்களை எங்கும் காணலாம். இடதுசாரி அமைப்பிலோ, தீவிர மார்க்சிய – லெனினியக் குழுவிலோ தலித் இயக்கங்களிலோ, பெண்ணிய அமைப்புகளிலோ – எங்கு வேண்டு மானாலும் காணலாம். ஆனால் எல்லா இடங்களிலும் அவர்கள் அவர்களாகவே இருப் பார்கள் என்பதுதான் முக்கியம். எங்கேனும் புதிய தளிர்கள் பூத்தால் அவற்றைப் பொசுக்குகிறவர்களாக, புதிய கொம்புகள் முளைத்தால் அவற்றைத் தீய்க்கிறவர்களாக, புதிய கருத்துகள் எழுந்தால் அவற்றைப் பங்கப்படுத் துகிறவர்களாக, அல்லது பரிகசிப்பவர் களாக, அல்லது விமர்சிப்பவர்களாக, தாங்களே புதிதாகச் செய்வது என்னும் பெயரில் முன்பே வளர்த்தெடுத்த முட்செடிகளின்மேல் படிந்துள்ள புழுதியைப் புண்ணியா வாசன நீர் கொண்டு கழுவி வளர்த்து விடுகிறவர்களாக, அவர்கள் அவர்களாகவே தங்களைத் தக்கவைத்துக் கொள்வார்கள்.*

சிலப்பதிகாரத்தில் மாடல மறையோன் என்றொரு பாத்திரம் வரும். அவன் பார்ப்பனியப் பரப்புரையாளன், பார்ப்பனக் கலாச்சாரத் தூதுவன். அவன் எங்கேயும் இருப்பான். கணிகையர் வீதியிலும் சுற்றுவான். காடு மேடுகளிலும் அலைவான். அரசவையிலும் நுழைவான். ஆனால் அவன் தன் பணியில் மட்டும் குறியாயிருப்பான். கோவலனை நீர்ச் சுனையில் சந்தித்து மாதவியின் கடிதத்தைக் கொடுக்கும்போது அவனைக் 'கோபால' என்று அழைக்கிறான். கோபாலன் என்னும் பெயரின் தமிழ் வடிவம்தான் கோவலன். பின்னாளில் கம்பன் எல்லா சமஸ்கிருதப் பெயர்களையும் தமிழ் வடிவப்படுத்தினானே, அவனுக்கு முன்னோடிதான் இளங்கோ. கோவலன் படும் துன்பத்தைக் கண்டு மனம் வெதும்பி, "இம்மைச் செய்தது யானறி நல்வினை, உம்மைப் பயன்கொல்!" என்று சொல்லி, கோவலன் பார்ப்பனர்களுக்குச் செய்த நற்செயல்களையே தொகுத்தளிக் கிறான் மாடலன். பார்ப்பனன் அல்லாத ஒருவனுக்குக் கோவலன் செய்த ஒரே ஒரு உதவியும் விரயமானதைப் பட்டியலிடுகிறான். சேரன் செங்குட்டுவன் அரசவையில் நுழைந்து, சோழனும் பாண்டியனும் செங்குட்டுவனைப் பகடி செய்ததைக் கேட்டு வெஞ்சினம் கொள்ளும் குட்டுவனைப் பார்த்து, 'மன்னா, நீ இதுவரை மறக்கள வேள்விதான் செய்துள்ளாய். இது தருணம். அறக்கள வேள்வியில் உன் கவனத்தைத் திருப்பு' என்கிறான். அதாவது யாகம் செய்யச் சொல்கிறான். அந்த மடையனும் அப்படியே செய்கிறான். ஒருபுறம் கண்ணகி சிலைக்கு மங்கல நீராட்டு நடக்கிறது. மறுபுறம் வேத கோஷம் முழங்க வேதியர்கள் செய்யும் யாகத்துக்கான ஏற்பாடு நடக்கிறது. அதுதான் மாடலன் வெற்றி.

பேசாப் பொருளைப் பேசத் துணிந்ததாகப் பேர் பண்ணிக்கொண்டு மறித்துமறித்து, எதிர்த்துஎதிர்த்து, பின்னிப்பின்னி, பண்ணிப் பண்ணிக் கேள்விகளை அடுக்கித் தன்னைத் தானே காறித்துப்பிக்கொள்வதற்குச் சமமான ஒரு காரியத்தை வெகு விஸ்தாரமாகச் செய்து முடித்த சாங்கியனைக் கண்டதும் பிரவாகனையே திக்குமுக்காடச் செய்யும் ஆனந்தப் பிரவாகத்தை அவரது எதிர் வினையின் முதல் பத்தியிலேயே படித்துப் புல்லரித்துப் போகலாம்.

கட்டுரையில் பல இடங்களில் 'பகுத்தறிவின் மூட நம்பிக்கை எதிர்ப்பு' என்று சரியாகச் சொல்லும் ஒன்றைத்தான் தனது சுயமரியாதை உணர்வு கொப்பளிக்க, 'பகுத்தறிவின் மூட நம்பிக்கைகள்' என்று சுருக்குப் போட்டுக் கட்டுரைத் தலைப்பாக்கிவிட்டார் சாங்கியன். இதற்காகவே பிரவாகன் துள்ளிக் குதிக்கலாம் அல்லவா? "நீங்கள் இப்படிச் சொன்னதும் உங்களைத் தூற்றுமே ஒரு கூட்டம்? அதுதான் பகுத்தறிவு மூடநம்பிக்கையில் ஆழ்ந் திருக்கும்– ஆழ்த்தப் பட்டிருக்கும் கூட்டம்" என்கிறார் பிரவாகன். அதற்கு அடுத்து அவர் சொல்வதுதான் உச்சம். "திராவிட இயக்கம் அவர்களின் கோயில். அதன் கருவறையில் இருக்கும் பெரியார் அவர்களின் கடவுள். இதே பாணியில் மார்க்ஸ் மூலவர். பெரியார் உற்சவ மூர்த்தி என்று சொல்கின்ற இன்னொரு பிரிவும் உண்டு. இவ்விரு சாராரையும் விட சமூகம் மிகப் பெரியது" என்கிறார். இதில் 'சமூகம் மிகப் பெரியது' என்னும் பகுதியைத் தவிர்த்து மற்ற பகுதியை இராஜேந்திர சோழன் தன் பத்திரிகையில் வெட்டிவிட்டு வெளியிட்டிருக்கிறார். ஏன் என்று தெரியவில்லை. ஒருவேளை திடுதிப்பென்று தன்னைத் தோலுரித்துக் காட்டிக்கொள்ளக் கூச்சப்பட்டோ அல்லது தனது புதிய நண்பர் பிரவாகனைப் பொத்திக் காத்துக்கொள்வதற்காகவோ இருக்கலாம். எப்படி இருப்பினும் அவர்தான் பிரவாகன். நான் அவரால் இகழப்படும் கூட்டத்தில் ஒருவன். ஏதோ ஒரு புதிய தத்துவத்தைக் கண்டறிந்தவர் போல, "இவ்விரு சாராரையும் விட சமூகம் பெரியது. சமூக மாற்றம் அதைவிட முக்கியம்," என்கிறார். அப்படியென்ன பெரிய சமூகத்தையும் சமூக மாற்றத்தையும் குறிப்பிடுகிறார்?

*கார்ல் மார்க்ஸ் தன் எல்லாப் போதாமை களோடும் நிறைவின்மைகளோடும் கூடவே இந்த அகிலம் முழுவதையும் பாதித்தவர். அதைப் போலவே சாதியத் தமிழ்ச் சமூகத்தில் பெரியாரின் பங்களிப்பும். இருவருமே இன்றைக்கும் என்றைக்கும் மாற்றீடு செய்ய முடியாத சமூக மாற்றங்களைத்தான் கோரினர்; போராடினர். அவர்களுக்கும் மேலான சமூக மாற்றம் என்ன? விழ முடியாதபடி பார்ப்பான் மேலானவன், எழமுடியாத படி பறையன் கீழானவன் என்னும் எல்லைக்குள் சாதியால் படிநிலைப்படுத்தப்பட்ட சமூகத்தை*

*இல்லாத மதத்தின் பெயரால் மறு கட்டமைப்புச் செய்து ஜனநாயகப்படுத்திக் கொள்ளும் மாற்றமா?*

பிரவாகன் பரவாயில்லை, நான் எதிர்பார்த்ததை வழங்கினார் என்று சொன்னேன். ஆனால் ராஜேந்திரசோழன் 'என்ன முட்டாள்தனத்தை எதிர்பார்த்தாய்?' என்று என்னைக் கடிந்து கொள்ளுமளவுக்கு நவீன இந்துவாக அல்லது ஜனநாயக இந்துவாக வேடமிட்டு ஆடிக் களைத்து விட்டார். எனக்கு அஸ்வகோஷைக் கொஞ்சம் தெரியும். நல்ல படைப்பாளிகயாக என்னை ஓரளவு வசீகரித்தவர். எல்லாரும் கனியக்கனிய இனிக்கத்தானே செய்வர்? ஆனால் இவர் ராஜராஜசோழனின் அருமை மைந்தனாகத் தனக்குப் பட்டம் சூட்டிக் கொண்ட பின் தன் உடம்பையும் மனத்தையும் கட்டுப்படுத்த முடியாத அளவுக்கு ஒரு வித சட்டாம் பிள்ளைத்தனத்துக்கு ஆட்பட்டுத் தன் அறிவையும் உணர்வையும் சிதறடித்துக் கொள்கிறாரோ என்று மயிரைப் பிய்த்துக்கொள்ளத் தோன்றுகிறது.

இவர் இந்து மதத்தின் தீராத பீழைகளையும் தீர்க்க முடியாத துயரங்களையும் கனகச்சிதமாகப் பட்டியலிடுகிறார். அடுத்த கணமே, ஆனாலும், என்றாலும், இருந்தாலும் என்று கொக்கி மாட்டிக்கொண்டு இந்துமதத்தை இடைவிடாமல் தாக்கிக் கொண்டிருப்பது என்ன நியாயம்? என்று சமாதானப்படுத்த முடியாத சண்டைக்காரராகத் தன் குரலை உயர்த்திக் கொள்கிறார். அடுத்து, சிறுபான்மை மதத்தினர் என்னும் பெயரில் கிறிஸ்தர்களும் முஸ்லீம்களும், அதிலும் குறிப்பாக முஸ்லீம்கள் பண்ணும் 'அட்டூழியத்தை' இவரால் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. அந்த வகையில் இவர் நரேந்திர மோடிக்கு இணையான ஜனநாயக இந்துவாக இருக்கிறார் என்றுதான் சொல்ல வேண்டும். நரேந்திர மோடியை விட நல்ல ஜனநாயக இந்து வேறு யார் இருக்க முடியும் என்பதை இவர் விளக்கினால் நன்றாயிருக்கும்.

இவர் முன்வைக்கும் எல்லா தர்க்கங்களுக்கும் இவருக்கு விடை தெரியும் என்பதில் யாருக்கும் எந்த விதச் சந்தேகமும் தேவையில்லை. இவர் முன்வைக்கும் கேள்விகள் யாவும் ஒரு பி.ஜே.பி. கேட்கும் கேள்விகள்தாம் என்பதை ஒருமுறைக்கு இருமுறை தன் கட்டுரையில் ஒத்துக்கொள்கிறார். ஆனாலும் 'ஏன் அதை நான் கேட்கக் கூடாதா? கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டுமே தவிர இப்படிச் சொல்லித் தப்பிக்கக்கூடாது' என்றும் குறுக்குச் சட்டம் போடுகிறார்.

இவர் கட்டுரையின் சாரத்தை பெரும் பிரிவாய் இவ்வாறு பிரிக்கலாம்: 1. இவர் இந்து மதத்தை மட்டும் குறை சொல்லிக்கொண்டிருப்பதை – இந்து தெய்வங்களைப் பழிப்பதை அடியோடு வெறுக்கிறார். இதன் மறுதலை தேற்றம், இவர் இந்துவாக இருப்பதில் பெருமை கொள்கிறார். கோயில்களுக்குப் போய் இந்து மதத் தெய்வங்களை வணங்குவதில் குற்றவுணர்வு அற்றவராய் இருக்கிறார். 2. இவர் சிறுபான்மை மதத்தினருக்குத் தனிச் சலுகைகள் கொடுப்பதை, அம்மதங்களை விமர்சிக்க மறுப்பதை – குறிப்பாக முஸ்லீம் மதத்தை – கட்டோடு வெறுக்கிறார். இதன் மறுதலையாக எல்லாரும் பொதுச் சட்டத்துக்குள் அடக்கப்பட வேண்டும்; சமூகத்தின் பன்முகத்தன்மை ஒழிக்கப்பட வேண்டும் என்று விரும்புகிறார். மேலும் சில துணைத் தலைப்புகளில் தொகுப்பதெனில் 1. இவர் இந்து மதத்துக்கு ஒரு புதுப் பெயர் கொடுத்துப் புனிதப்படுத்த விரும்புகிறார். 2. தலித்துகள் இந்து மதத்தைவிட்டு வெளியேறுவதை வெறுக்கிறார். 3. 90 சதவீதம் மக்கள் தாமுண்டு தம் சாமியுண்டு என்று சாதி வித்தியாசம் பார்க்காத ஜனநாயக இந்துக்களாக இருக்கிறார்கள் என்று ஒரு அப்பழுக்கற்ற பொய்யை, ஒரு ஆர்.எஸ்.எஸ். காரன்கூட சொல்லக்கூசும் பொய்யைத் தன் தர்க்கங்கள் அனைத்துக்குமான அடிப்படை விஷயமாக வைக்கிறார்.

சாங்கியனின் கேள்விகளையும் நம்பிக்கைகளையும் ஒவ்வொன்றாய்ப் பரிசீலிக்கும்முன் மேலும் சில விவரங்களை உள்வாங்கிக்கொள்வது பொருத்தமாயிருக்கும்.

வரலாறு தொடங்கிய காலம் முதல் இந்திய வரலாறு பார்ப்பனக் கண்ணோட்டத்திலேயே விவரிக்கப்படுகிறது. இந்த வரலாறு பார்ப்பனரை மேல் எல்லையாய் வைப்பது என்னும் முன்நிபந்தனையைக் கொண்டது. இதை பௌத்தக் கண்ணோட்டத்தில் செப்பனிட்டால் அது இயல்பாகவும் நம்பகத் தன்மையோடும் இருக்கக்கூடும்.

பார்ப்பனியம் முன்வைக்கும் சமூகப் பிரிவுகள் பார்ப்பனர், சத்திரியர், வைசியர், சூத்திரர் எனில் பௌத்தப் பிரிவுகள் சத்திரியர், பார்ப்பனர், ககபதிகள் என்பதாகின்றன. பார்ப்பனப் பிரிவுகளில் வர்ணம், சாதி என்னும் பகுப்புகள் தென்படுகின்றன. பௌத்தத்தில் சாதி, குலம், கம்மா, சிப்பா, என்னும் பகுப்புகள் தென்படுகின்றன.

பார்ப்பனப் பிரிவுகளிலுள்ள வைசியர், சூத்திரர் என்பன பௌத்தத்தில் இல்லை. பார்ப்பன முதன்மையும் பௌத்தத்தில் இல்லை என்பது முக்கியம். சூத்திரர் என்பதற்கு பற்பல விளக்கங்கள் சொல்லப்பட்டாலும் யாரெல்லாம் பார்ப்பன மேலாண்மையை எதிர்த்தார்களோ, கலகம் செய்தார்களோ அவர்கள் சூத்திரர்களாக வைத்து எண்ணப்பட்டனர் என்பதே பெருவாரியான ஆய்வாளர்களின் முடிவாக இருக்கிறது. பௌத்த இலக்கியங்களில் தாசர்கள், கர்மகாரர் என்னும் பெயர்கள் பேசப்படுகின்றன. ஆனால் அவர்கள் மேல்குலத்தார்க்குச் சேவை செய்யக் கடமைப் பட்டவர்கள் என்னும் குறிப்பு எங்கும் காணக் கிடைக்கவில்லை. பௌத்த சாதியமைப்பில் படிநிலைத் தன்மையைக் காண முடியவில்லை. இந்தப் படிநிலையை மனுதர்மம்தான் சாஸ்திரமாக முன்வைக்கிறது. அது வர்ண சாதியமைப்பாக, மாற்றிக்கொள்ளமுடியாத படிநிலைப் பிரிவாக நிலைநிறுத்தப் படுகிறது.

'சாதிகள் இந்தியாவில் மட்டுமல்லாமல் ஜப்பான், ஆப்ரிக்கா, லத்தீன் அமெரிக்கா போன்ற நாடுகளிலும் இருந்துள்ளன. ஆனால் இந்தியாவில் போல சாதிகள் வேறெங்கும் படிநிலைப்படுத்தப்படவில்லை. கூடவே சாஸ்திரப்படுத்தப் படவும் இல்லை. ஆகவே, மற்ற நாடுகளில் தோன்றிய ஜனநாயக இயக்கங்கள் அங்கெல்லாம் சாதிகளை ஒழித்துக்கட்டிவிட்டன. ஆனால் இந்தியாவில் சாதிகள் இன்றுவரை செழிப்பாக வளர்ந்து இருக்கின்றன' என்று இராமானுஜம் தன் கட்டுரையில் தெரிவிக்கிறார். சாஸ்திரம் என்பது நடைமுறையில் உள்ளதைக் கட்டுப்படுத்தும் கலாச்சார வரைமுறையாகும்.

பார்ப்பனப் பகுப்பு முறையில் பார்ப்பன உடலை அங்கீகரிக்கும் பல்வேறு இனக் குழுக்களும் அதனதன் தளத்தில் சுதந்திரமாக இயங்குவதற்கான தன்மையைப் பார்ப்பனியம் இயல்பாக்கியது. ஆனால் இன்றைக்கு பார்ப்பனர்களும் ஒரு சாதிப் பிரிவாகச் சுருங்கிவிட்டதால் படிநிலைச் சாதி ஏற்பு பார்ப்பன மேலாண்மையை அரண் செய்யும் கோட்டையாக வலுப்பெற்றிருக்கிறது.

பார்ப்பனியம் தன் மேலாண்மையைத் தக்கவைத்துக் கொள்ள எதனோடும் உறவு கொள்ளும். எதற்கெதிராகவும் கிளர்ச்சி செய்யும். உதாரணத்திற்கு

*ஒரு கோயிலுக்குப் பறையர் அர்ச்சகரானால் பார்ப்பனர்கள் அந்தத் தெய்வத்தையே புறக்கணிக்கத் தயங்கமாட்டார்கள். இந்துக்கள் என்றால் சமூக சமத்துவக்காரர்கள் என்றொரு நடைமுறை சட்டம் வந்தால் பார்ப்பனர்கள் இந்து என்னும் பெயரையே புறக்கணிப்பார்கள். தெய்வமோ, மதமோ தங்கள் மேலாண்மையைப் பேணத்தானே தவிர, பிடுங்கி எறிய அல்ல என்பதுதான் அவர்களது மதம்.*

இந்தியாவில் எத்தனை சட்டங்கள் வந்தாலும் அவற்றை நடைமுறைப் படுத்துகிறவன் உயர்சாதிக்காரனாகவும் பெரும்பான்மை மதத்தினனாகவும் இருக்கும் வரை அவனை வழி நடத்துவது மனுதர்மம்தான். ஈழப்புலிகளுக்கு ஆதரவாகப் பேசினார் என்று வைகோ 517 நாட்கள் சிறை வைக்கப்பட்டார். அது இந்திய தண்டனைச் சட்டத்தைப் பின்பற்றி நடந்தது. ஆனால் ராமரை இழிவுபடுத்திப் பேசிவிட்டார் என்பதற்காகக் கருணாநிதியின் நாக்கை துண்டிக்கவும் தலையை வெட்டவும் வேதாந்தி பணயம் வைத்தார். 'நான் ஒன்றும் தவறாகச் சொல்லவில்லை. சாஸ்திரம் அனுமதிப்பதைத்தான் சொல்கிறேன். அதிலிருந்து நான் பின்வாங்கவில்லை' என்று மீண்டும் மீண்டும் சீண்டினார். கருணாநிதி தண்டிக்கப்படவில்லைதான். ஆனால் வேதாந்தி கைது செய்யப்படவில்லையே. எது அவரைக் காப்பாற்றியது? அல்லது எந்தச் சட்டம் இந்தியாவில் செல்லுபடியாகிக்கொண்டிருக்கிறது?

இந்தியாவில் படிநிலைச் சாதியமைப்புதான் இன்று பார்ப்பனியத்தைத் தூக்கி நிறுத்தும் பேரலகு. மதம் என்பது ஓர் ஒருங்கிணைவு. திரௌபதியின் ஐந்து குழந்தைகளும் கருகிக்கிடந்தபோது அவளது ஐந்து கணவர்களும் கல்லைப் போல் கலங்காமல் நின்றார்களே. எந்தக் குழந்தை எவனுக்குப் பிறந்தது என்னும் சந்தேகம் அங்கே கோலோச்சியது.

ஆனால் அவர்கள்தான் – அவர்கள் மட்டும்தான் அந்தக் குழந்தைகளின் தந்தையர்கள். மதம் என்பது அப்படிப்பட்ட தந்தையர்களின் கூட்டம். ஆனால் அபிமன்யூ இறந்தபோது அர்ச்சுனன் அழுதானே அழுகை! சாதி அத்தனை நெருக்கமானது. இந்தியாவில் ஒருவன், அதிலும் ஓர் இந்து தன் மதம் என்ன என்று தெரியாமல் வாழ்ந்துவிடலாம். ஆர்.எஸ்.எஸ். வளர்ச்சி பெறுமுன் குறிப்பாகத் தென்னாட்டில் அப்படித்தான் மக்கள் வாழ்ந்தார்கள். ஆனால் சாதி தெரியாமல் ஒருவன் வாழவே முடியாது என்பதுதான் இன்றுவரை முக்கால உண்மை.

இன்று சாதி அன்றாட வாழ்வைப் பாதிக்கும் காரணியாகவும், மதம் சமூக வாழ்வைப் பாதிக்கும் காரணியாகவும் மாற்றப்பட்டிருக்கின்றன. அதே நேரத்தில்

*இன்று மதம் ஒரு செலாவணிப் பண்டம் போலவும் அரசியல் களத்தில் செல்லுபடியாகிறது. கிழக்குப் பதிப்பகம், மருதன் எழுதிய 'விடுதலைப் புலிகள்' என்னும் புத்தகத்தை வெளியிட்டு விற்றுப் பணம் பண்ணுகிறது. கிழக்குப் பதிப்பகத்துக்கும், மருதனுக்கும், விடுதலைப் புலிகளுக்கும் என்ன சம்பந்தம், வெறும் லாப வணிகத்தைத் தவிர? அதே போலத்தான் மதமும் இன்று வணிகப் பண்டமாக விளையாட்டு காட்டிக் கொண்டிருக் கிறது. 'நாங்கள் பெரும்பான்மையானவர்கள்' என்னும் தெனாவட்டில் இந்து மதவாதிகள் விளையாடிக்கொண்டிருக்கிறார்கள்.*

மதத்தின் ஆத்மார்த்த பாவம் இன்று பிய்த்தெடுக்கப்பட்டுவிட்டது. இதை முதன்முதலில் செய்தவர், அல்லது முதல் ஆர்.எஸ்.எஸ். சாட்சாத் மகாத்மா காந்திதான். இது ஒன்றும் ஆச்சரியப்படக் கூடியதல்ல. அந்த ஆபத்தான விளையாட்டில்தான் அவர் உயிர் பறிக்கப்பட்டது.

1920–30களில் ஜார்ஜ் சோசப் என்றொரு காங்கிரஸ் செயல் வீரர் இருந்தார். கேரளத்துக்காரர். மதுரையில் வாழ்ந்தார். காந்திக்கு நெருங்கிய, நம்பகமான சீடர். காந்தி சிறையிலிருக்கும் காலத்தில் அவரது 'young India' பத்திரிகையை அவர்தான் பார்த்துகொள்வார். அவர் வைக்கம் போராட்டத்தில் கலந்து கொண்டபோது காந்தி அவரைக் குறைகூறி கடிதம் எழுதுகிறார்: 'நீங்கள் ஒரு கிறிஸ்தவராய் இருந்துகொண்டு எப்படி இந்துக்கோயிலில் நுழையலாம்?' என்பது அவர் குற்றச்சாட்டு.

*முஸ்லீம்களோடு குல்லாபோட்டுக் கொண்டு கஞ்சி குடிப்பதையெல்லாம் கடும் வெறுப்போடு கண்டனம் செய்கிறாரே சாங்கியன், அவர்கள் அப்படியொரு சமத்துவத்தை, அதுவும் பிறமதத் தினருக்குத் தருகிறார்கள். ஆனால், இந்து மதத்தில் பிற மதத்தினருக்குத் தருவதிருக்கட்டும், தன் மதத்தினருக்கே அப்படியொரு சமத்துவம் அளிக் கப்படுவதில்லை*

. காந்தி அந்த வேற்றுமையைக் கூர்மைப்படுத்தித்தான் கேள்வி கேட்டார். வைக்கம் போராட்டம் ஒன்றும் கோயில் நுழைவுப் போராட்டமல்ல. ஒரு குறிப்பிட்ட தெருவில் தாழ்த்தப்பட்டவர்கள் நுழைவதற்கு விதித்திருந்த தடையை எதிர்த்து நடத்திய போராட்டம். இந்த உண்மைகூட காந்திக்கு உணர்த்தப்படாத நிலை. ஜோசப் பதில் எழுதுகிறார். அத்தோடு அவர்களது புரிந்துணர்வு தகர்ந்துவிடுகிறது. தகர்ந்துபோகக் காரணமாயிருந்தவர் காந்திதான். இந்து மதம் இப்படித்தான் சிலுப்பிக்கொண்டு வளர்ந்தது. காந்தி தன் மத வேடத்தை சந்தேகத்திற்கு இடமாகும்படி கலைத்துக் காட்டியபோது இந்துமதம் சுதந்திர இந்தியாவில் அவரை முதல் பலியாகக் காவு கொண்டது.

பார்பனப் பகுப்பு முறையில் வர்ணப் பிரிவு நடைமுறை வாழ்வுக்குப் பொருத்தமாய் இருந்ததில்லை. பார்ப்பனர்கள் நிறம் சார்ந்து தங்கள் மேலாண்மையை நிறுவிக் கொள்ளவும் இனக் கலப்பைத் தவிர்க்கவும் செய்துகொண்ட பாகுபாட்டு முறை அது. இந்தப் பகுப்பு முறைகளில் தென்னாட்டுக்கும் வடநாட்டுக்கும் பெருத்த வேறுபாடுகள் இருந்தன. வடக்கே சூத்திரர்கள் என்போர் ஆகக் கீழானவர்கள். ஆனால் தெற்கே அவர்கள் பார்ப்பனர்களுக்கு அடுத்த நிலையில் வைத்து எண்ணப் பட்டவர்கள். தெற்கே சூத்திரர் என்பது ஆங்கிலேயன் கொடுத்தானே திவான் பகதூர், ராவ் பகதூர் என்றெல்லாம் அது போன்ற ஒரு பட்டப் பெயராகவே ஏற்றுக் கொள்ளப்பட்டது. வடக்கே சூத்திரர்கள் கல்வி பெற முடியாது. ஆனால் தெற்கே இவர்கள் சூத்திரப் பட்டம் பெறுவதற்கு வெகு காலத்திற்கு முன்பிருந்தே 'பிச்சை புகினும் கற்கை நன்றே' என்று வாழ்ந்தவர்கள். தென்னாட்டில் வர்ணப் பாகுபாட்டுக்கு வழியே இல்லை. ஆயினும் ஒரு பாண்டிய மன்னன்

> வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்
> கீழ்ப்பாலொருவன் கற்பின்
> மேற்பாலொருவன் அவன்கட் படுமே

என்று எழுதி வைத்திருக்கிறான். வேற்றுமையே தெரியாத ஒரு நிலையில் நாற்பால் பாகுபாட்டை அவன் ஏற்றுக் கொண்டிருக்கிறான். அரசர்களும் மற்றவர்களும் பார்ப்பன மேலாண்மையை ஏற்றுக்கொள்ளும் நிர்ப்பந்தம் எப்படி ஏற்பட்டிருக்கும் என்று பிரவாகன் கேள்வி எழுப்பியுள்ளாரே, பார்ப்பனர்களே ஆளாத ஒரு நிலப்பரப்பில் எப்படி என்று தெரியா விட்டாலும் ஏற்பட்டிருக்கிறது என்பது தெரிகிற தல்லவா? ஏற்பட்டது மாத்திரமல்லாமல் இராஜேந்திர சோழன் அப்பன் இருக்கிறானே இராஜராஜன், அவன் காலந்தொட்டே பொதுப் பள்ளிகளெல்லாம் திண்ணைப் பள்ளிக்கூடங்களாய்ச் சுருங்கிப் போக, வேதபாடசாலைகள் தங்கக்காசுகளை மாணாக்கர்களுக்குக் கல்வி மானியமாகக் கொடுத்து அரசாங்கப் பொறுப்பில் நடத்தப்பட்டன. தென்னாட்டில் வர்ணம் என்று ஒன்று இல்லையாதலால் வர்ணம் என்பது சாதியைக் குறிக்கும் சொல்லாகவே இன்றளவும் புழங்கப்பட்டு வருகிறது.

*சொந்தமாக ஒரு பெயர் வைத்துக் கொள்ளக்கூடத் துப்பில்லாத, இத்தனை கேடுகாலங்களையும் உள்ளடக்கிய இந்துமதத்தைத்தான் முடிந்தமட் டிலும் ஜனநாயகப் படுத்து வதாகவும் சமத்துவ நோக்குடையதாகவும் ஆக்கப்போவதாக சாங் கியன் சவடால் அடிப்பதும், 'இத்தகைய போக்குக்கு அதிகமும் இடந்தரக்கூடியதாக இந்து மதம் மட்டுமே உள்ளதாக' பிரவாகன் சான்றிதழ் வழங்குவதும் கடைந்தெடுத்த பொய்யுரை மட்டுமல்ல, அவர்கள் இருவரும் ஒரே படகில் சவாரி செய்யும் கள்ளப் பரிவர்த்தனைக்காரர்கள் என்பதும் தெள்ளத்தெளி வாகிறது. வரலாறு நெடுகிலும் இப்படி சேவை செய்யும் சாங்கியன் களும் அதை சிலாகித்துப் புளகாங்கிதமடையும் பிரவாகன்களும் குறைவில் லாமல் தென்படத் தான் செய்கிறார்கள்.*

'மதம் மாறும் தலித்துகள் அங்கேயும் தலித்துகளாய்த்தானே இருக்கிறார்கள்' என்று இந்துப் படகு சவாரிக்காரர்கள் பகடி செய்கிறார்கள். ஆமாம், இருக்கிறார்கள். ஆனால் இந்த நொள்ளைக்கண் மதச்சார்பற்ற அரசுக்கு இது தெரிய வில்லையே? இந்து தலித்துகளுக்கு வழங்கும் உதவிகளை கிறஸ்தவ, முஸ்லீம் தலித்துகளுக்கு வழங்க மறுக்கிறதே? அப்படியெனில் அதன் பொது சிவில் சட்டம் எப்படிப்பட்ட தாயிருக்கும்? பெரும்பான்மையான இந்து மதத்துக்குச் சாய்மானம் உள்ளதாகத்தானே இருக்கும்? அதை ஏற்க மறுக்கும், அல்லது அச்சம் தெரிவிக்கும் முஸ்லீம்களைக் கொச்சைப்படுத்திகிறாரே சாங்கியன்? அவர் எப்படிப்பட்ட இந்துவாய் இருப்பார்?

90 சதவீதம், அல்லது 80 அல்லது 70 சதவீதம் இந்துக்கள் தானுண்டு தன் சாமியுண்டு என்று, சாதி வித்தியாசம் பார்க்காமல் கோயிலுக்குச் சென்று கும்பிட்டுக் கொண்டிருப்பதாக ஒரு கடைந்தெடுத்த பொய்யைக் கூசாமல் சொல்கிறார் சாங்கியன். 70 சதவீதம் வேண்டாம் வெறும் 10 சதவீதம் இந்துக்கள் அப்படிபொரு பரந்த மனப்பான்மையைப் பெற்றுவிட்டால் இந்நேரம் சாதியே காணாமல் போயிருக்கும், அல்லது அதன் படிநிலை வேற்றுமை தகர்ந்து போயிருக்கும். அவர் சொல்வது எப்போது உண்மையாயிருக்கும் எனில் உரிமை கோராத தலித்துகளைக் கொண்ட பழைய அசைவில்லாத சமூகத்தில் அது சாத்தியப்படலாம்.

*உண்மையில் அவர் மனத்தில் என்ன ஓடுகிறது? "தலித்துகளுக்கு அடங்கிக் கிடப்பது புதுசா என்ன? அவர்களைக் குறுக்கே விட்டுக்கொண்டு ஒட்டுமொத்த சமூகத்தின் அமைதியையும் பெருமையையும் குலைத்துக் கொள்ள வேண்டுமா?" என்று கேள்வி கேட்பவராக இருக்கிறாரா?*

கடைசியாக 'ஜனநாயக இந்து'வைக் கொண்டுவந்து உள்ளே நுழைக் கிறார். இவர் என்ன, புதிய இந்து மதத்தை உருவாக்கும் தம்பிரான் பிள்ளையா அல்லது இருக்கும் மதத்துக்குப் புதிய பெயர் சூட்டும் பெரிய தனக்காரரா?

இந்தியாவானது நிலவுடைமைச் சமுதாயமாகத் திரண்டு, அதில் தலித்துகள் கூலிக்கு யாசித்து நிற்கும் தொண்டூழியச் சிறுபான்மையினராகக் கட்டமைப்புச் செய்யப்பட்டிருப்பது உலகிலேயே ஆகக் கொடியதும் உடைத்தெறிய எளிதல்லாததுமான திகைப்பூட்டும் அடிமைச் சாசனம். இதனோடு வாக்குரிமையில் மட்டும் சமத்துவத்தைக் கடைப்பிடிக்கும் ஜனநாயகமும் இணைந்துகொண்டது.

ஜனநாயகம் என்பது குடிகார நொண்டிக்குதிரை மாதிரி. அது விழுந்து விழுந்து எழுந்தாடும்; ஆனால் இடத்தைவிட்டு நகராது. நகர்ந்திருந்தால் 'விடுதலை பெற்ற இந்த 60 ஆண்டுகளில் தலித்துகளை மகிழ்ந்தேற்றுக்கொள்கிற 'ஜனநாயக இந்துக்களை' உருவாக்கியிருக்க வேண்டாமா?

'ஜனநாயக இந்து' என்னும் பதத்தை நல்லவிதமாகப் பயன்படுத்திப் பார்க்கவே விரும்புகிறேன். ஆனாலும் அது ஒரு 'நல்ல விதமான கழிசடைப் பத'மாகவே நம் முகத்தில் அறைகிறது. 'ஜனநாயக இந்து' என்பதன் ஆழ்ந்தகன்ற பொருளை பெ.மணியரசன்– இராசேந்திர சோழன் போன்றவர்கள்தாம் விளக்க வேண்டும். 3000க்கு மேற்பட்ட முஸ்லிம்கள் கொல்லப்பட்டதற்கு ஒரு சிறு வருத்தம்கூடத் தெரிவிக்காத மோடி அமோக வெற்றி பெற்று, மூன்றாவது முறையாக முதலமைச்சராகி விட்டார். அவர் ஒரு நல்ல ஜனநாயக இந்துவா, இல்லையா? இல்லை யென்றால் எப்படி? இந்துவை ஜனநாயகப்படுத்துவது வேறெப்படியாகும்?

கோயிலைப் புறக்கணிக்கக் கூடாது என்றால் அதனுள்ளிருக்கும் குருக்களையும்தானே. அவனோடு சேர்த்து வேதங்களையும், மனு தர்மத்தையும்தானே. கரையான் எடுத்த புற்று கருநாகத்தை வெளி யேற்றிய பிறகல்லவா கரையானுக்குச் சொந்தமாகும்?

வழிபாட்டுணர்வில் தமிழன் தமிழனாயிருக்கும் கணங்கள் அவன் நடுவீட்டுச் சாமியையும் குலதெய்வத்தையும் கொண்டாடும் வரைதான். அந்தக் கணங்களில் சாமியும் அவனும் ஒன்றுக்குள் ஒன்றாய் இருக்கிறார்கள். அந்த எல்லையைவிட்டு வெளியேறி, பெருந்தெய்வ வழிபாட்டுக்கு வரும்போது அவன் பார்ப்பனனால் 'நில்' என்றால் நிற்கவும், 'செல்' என்றால் செல்லவும் பழக்கப்படுத்தப்பட்ட நாய்க்குட்டி. நாய்க்குட்டியாவது சீற்றம் வந்தால் கடித்துக் குதறிவிட்டு அடிபட்டுச் சாகும். இவனோ தன்னைத்தானே கடித்துக்கொண்டு சாகப் பழக்கப்பட்ட தொழும்பன். அப்படிப்பட்ட ஒரு நல்ல இந்துவாகத்தானே, பெருந்தெய்வக் கோயிலுக்குள் பெயரற்றவனாக நுழைந்து, விழுந்து கும்பிட்டு, கையேந்தி, பிரசாதம் வாங்கி, புத்தி போட்டுக்கொண்டு வெளியேறுகிறான்?

பெ. மணியரசன்– இராசேந்திர சோழனுக்குப் பெரியார் மீது கேள்வியற்ற மரியாதை ஒன்றும் கிடையாது. சுயசிந்தனையைச் செழுமைப்படுத்திக் கொள்கிறவனுக்கு அது தேவையும் இல்லை. ஆனால் அவர்களது சுயசிந்தனை தமிழ்த் தேசியம் என்னும் பெயரில் நவீன இந்துத்துவ பெரியாரிஸ்டுகளாக அவர்களை வளர்த்தெடுக்குமோ என்னவோ. இந்தத் தமிழ்த் தேசியர்கள் 'மருத்துவர் ஐயா'வையும் உள்ளிழுத்துக்கொண்டு ஜனநாயகப்படுத்தப்பட்ட நல்ல இந்துக்களின் தென்னாட்டு பால்தாக்கரேக் களாக வடிவெடுப்பார்களாயிருக்கும். பால்தாக்கரேக்கு மண்முகமும் இந்துத்துவமும் ஒன்று. தமிழனுக்கு அவை இரண்டும் காந்தத் தண்டின் எதிர்த் துருவங்கள்போல. அவை ஒட்டாதவரைதான் அவன் தமிழன்.

மேலும், போராட்டக் களத்தில் முழக்கமிடும் லட்சியவாதி சாத்திய மானதைத்தான் கேட்க வேண்டும், ஏற்கவேண்டும் எனில், கிடைக்கப் போவது குதிரை தன் சிலுப்பலில் உதிர்க்கும் கடைசி வால்மயிராகத்தான் இருக்கும். 'கருப்பையை எடுத்தெறி' என்று ஒரு முழக்கம் வைத்தால் அதன் ஆகுபொருள் 'அதை நிரப்பிக்கொள்வதும் நிரப்பிக்கொள்ளாததும் என் அதிகாரத்தில் இருக்க வேண்டும்' என்று முன்மொழிவதற்கான பெண்ணுரிமைதான் அல்லவா! அல்லாமல், "சிருஷ்டியை ஸ்டாப் பண்ணன்னா சொல்றா. என்ன பேத்தல்" என்னும் திண்ணைக் கிழங்களின் பொழுதுபோக்கு விசாரங்களை அரசியல் தத்துவங்களாக்கிப் பார்த்தால் எப்படி?

இவையெல்லாம் எங்கே போய் முடிகிறதெனில், ஒரு தலித் தன் தொழில்முறை வசதிகளைப் பெருக்கிக் கொண்டு, தொழில் தர்மம் பேணும் நல்ல தலித்தாக சுதந்திரமாய் வாழலாம் என்னும் எல்லைக் கோட்டில்தான். நல்ல தலித் என்பவன் தன்னை எஜமான விசுவாசத்தாலும் அடிமை மோகத்தாலும் நிரப்பிக் கொண்டவன்தானே? இந்திய ஜனநாயகத்தில் ஜனநாயகப்படுத்தப்பட்ட இந்து இதைமட்டுமே அனுமதிக்கிறவனாய் இருப்பதுதானே? 'இந்தியாவில் இந்து மதத்தைவிட்டு வேறு எந்த மதத்துக்குப் போனாலும் ஒரு தலித் தலித்தாகவேதான் இருக்க நேர்கிறது என்பதால், அவன் பேசாமல் இந்து மதத்தில் இருந்து கொண்டே தன் உரிமைக்குப் போராடலாமே' என்பதொன்றே ஒரு ஜனநாயகப்படுத்தப்பட்ட இந்துவின் வெகு 'நியாயமான' ஆலோசனையாக இருக்கிறது. இதில் உள்ள சிறப்பு என்னவெனில், ஆலோசனை சொல்கிறவன் அறிந்தோ அறியாமலோ ஒரு தலித் இந்து மதத்தை விட்டு வெளியேறுவதை வெகு பதைப்புணர்வோடு எதிர்க்கிறான்; அதற்காக நியாயம் பேசுகிறான். அதே நேரத்தில்

*இந்திய மண்ணில் பரவிய எல்லா மதங்களையும் இந்து மதம் சீரழித்துவிட்டதற்காக அவன் வருத்தப் படவில்லை. அது அவனுக்கு முக்கியமான விஷயமாகவும் படவில்லை. ஆகவே, வெளிப்படை யான நடைமுறை இருப்பை ஒரு நியாயமான தீர்வாக முன்வைப்பதில் நிறைவடைகிறான். இந்துக்கள் எங்கே சிறுபான்மை யாகிவிடுவார்களோ என்ற அச்சத்தால் தான் தலித்துகள் இந்துக்களாக உள்வாங்கப் பட்டார்கள் என்பதோ, இந்திய மதங்களான பௌத்தம், ஜைனம், சீக்கியம் முதலானவை இந்து மதத்தின் அங்கங்களாகக் கற்பிக்கப்பட்டு அடையாளம் அழிக்கப்படுகின்றன என்பதோ அவன் கவனத்துக்கு வருவதில்லை. இந்துக்களில் தலித்துகள் சிறுபான்மை யினராய் இருப்பதுதான் அவர்கள் விடுதலைக்கு விடப்படும் முதல் அறைகூவலா யிருக்கிறது என்பதை அவன் மறந்துவிடுகிறான்.*

இந்து மதத்தினர் சிறுபான்மையினராகிவிட்டால் அதன் உடனடி எதிர்விளை வாக, சாதி ஏற்றத்தாழ்வுகளும் மனுதர்மங்களும் நொறுங்கிப் போவதும், இந்தப் புத்தாக்கத்தால் பிற மதங்களில் ஊடுருவியுள்ள சாதியப் பார்வைகள், அம்மதங்களின் உலகப் பெரும்பான்மையினரின் நெறுக்குதல் களால் துடைத்தெறியப்படும் என்பதும் தலித்துகளுக்கான விடுதலையை விளக்கப்படுத்தும் மாபெரும் அம்சமாயிருக்கும். ஒட்டுமொத்த மதமாற்றம் உடனடிச் சாத்தியமில்லை என்றாலும், தலித்துகளின் அலையலையான மதமாற்றம் இந்துக்களை வெறிகொள்ள வைக்கும் அதே நேரத்தில் மனிதர்களாய் இருக்கவும் நிர்ப்பந்திக்கும். புரட்சிகர சமூக மாற்றங்கள் உடனடிச் சேதாரங்களை நிகழ்த்தும். ஆனால் அடுத்துவரும் காலங்களில் தலித்துகள் தலித் அடையாளங் களைத் தொலைத்தவர்களாய்ப் பிறப்பார்கள். ஜனநாயகப்படுத்தப்பட்ட இந்துவுக்கு இது உடன்பாடாய் இருக்குமெனில் அவன் ஏன் இந்துவாக ஜனநாயகப்படுத்தப்பட வேண்டும் என்பது கேள்வியாகிறது. இவை யெல்லாம் சாத்தியமா என்று நகைக்கிறவன் அடிப்படையில் இந்துவாக இருக்கச் சபிக்கப்பட்டவன் எனபதைத் தவிர வேறென்ன? ●

கட்டுரை

# தமிழ்ச் சினிமாவும் மலைவாழ் பழங்குடி மக்களும் – சில குறிப்புகள்

குமரன்தாஸ்

தமிழ்ச் சினிமா பல்வேறு கற்பிதங்களை மக்கள் மனத்தில் தொடர்ந்து ஏற்றி வருகிறது. சினிமாவுக்கு முந்திய பல்வேறு இலக்கிய வடிவங்களான நாடகம், பாட்டு, கூத்து என்பனவும் கூட பல்வேறு விதமான தப்பிதங்களை மக்களிடம் உற்பத்தி செய்தன அல்லது மக்கள் உளவியலை கட்டமைத்தன எனலாம்.

அவ்வாறான பல்வேறு கற்பிதங்களில் மிகவும் குறிப்பிடத் தக்கவையாக பழங்குடி- மலையின மக்கள் பற்றிய தமிழ்ச் சினிமா பரப்பிய காட்சிகளையும் கருத்துகளையும் கூறலாம். தமிழ்ச் சினிமா மையப்படுத்திய சமவெளி மக்களையே (நகரம் + கிராமம்) பெரும்பாலும் பாத்திரங்களாகவும், பார்வையாளர்களாகவும் கொண்டு 90 சதவீத திரைப்படங்கள் அமைந்தன எனலாம்.

மிகமிகக் குறைவாகவே பழங்குடியினர் வாழ்க்கை தமிழ்ச் சினிமாவில் பேசுபொருளாயின. அவ்வாறு பேசும்போதும் சமவெளியினர் கண்ணோட்டத்தினடியாகவே பேசப்பட்டன என்பதே உண்மை.

பழங்குடியின- மலைவாழ் மக்கள் போன்றோரது வாழ்வு, பண்பாடு, பொருளாதார நிலைபற்றிய புரிதல் சிறிதளவும் இன்றி, அவர்கள் மீதான கரிசனம் சிறிதளவும் இன்றி காட்சிப்படுத்தப்பட்டதன் விளைவாகவே தமிழ்ச் சினிமா பழங்குடியினர் பற்றிய பல்வேறு அவதூறுகளை, இழிவுகளை பார்வையாளர்களுக்கு வழங்கின. இவை தமிழ்ச் சினிமாத் துறையினரின் அடிப்படையான கண்ணோட்டத்தை மீறியதில்லை என்பதும் குறிப்பிடத்தகுந்ததாகும். குறிப்பாக தமிழ்ச் சினிமாவின் பழங்குடியினர் பற்றிய கண்ணோட்டம் வெகுகாலமாகத் தொடரக்கூடியதும் அருவருப்பானதுமாகும்.

நரமாமிசம் தின்னும் பயங்கரமான அரக்கர்கள் என பழங்குடி மக்களைக் காட்டி வந்த துவக்க காலத் தமிழ்ச் சினிமா பின்பு படிப்படியாக நகைச்சுவைக் காட்சி சார்ந்தும் பாலியல் (உணர்வைத் தூண்டும் கவர்ச்சி ஆட்டத்திற்கான (sex) அடையாளக்) களமாகவும் பழங்குடி- மலையின மக்களைக் காட்டினார்கள்.

இவ்வாறு பாலுறவு சார்ந்த காட்சிக்கு பழங்குடி மக்களது அடையாளத்தை, கதாபாத்திரங்களைக் காட்டும் போக்கு தமிழ்ச் சினிமாவின் முன் மாதிரிகள்/சிறந்த இயக்குநர்கள் என்று போற்றப்படும் பாலுமகேந்திரா, மணிரத்னம், மகேந்திரன் போன்றோரிடமும் இருந்து வந்துள்ளது. இதற்கு அவர்களது திரைப்படங்கள் சாட்சியாக அமைகின்றன (ஜானி, மூன்றாம்பிறை, வண்ணவண்ணப் பூக்கள், மௌன ராகம்).

பழங்குடி- மலையின ஆண்களை நகைச்சுவைப் பாத்திரங் களாகவும், பெண்களைப் பாலுணர்வுப் பாத்திரங்களாகவும் காட்சிப்படுத்திய தமிழ்ச் சினிமா சகமனிதர்களுக்கான இடத்தை மட்டும் வழங்க மறுக்கிறது.

மேலை நாட்டினர் பண்டைக்கால இந்தியாவை 'பாம்பாட்டி களின் நாடு' என்று சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் நமது நாட்டில் சமவெளி மனிதர்கள் பழங்குடி- மலையின மக்கள்பற்றி கொண்டுள்ள கருத்தும் அப்படி ஒன்றும் உயர்வானதில்லை.

பொதுவாக மனிதர்களது அறிதல் திறன்/நேரடி அனுபவம் மிகக் குறுகியதுதான். இதனை அகண்டதாக்குவது ஊடகங்களே. ஆனால் இவ்வூடகங்களைக் கையாளும் அல்லது கைக் கொண்டுள்ள தனி மனிதர்களது அல்லது சிறு குழுவினது உலகக் கண்ணோட்டம் சார்ந்தே உலக நடப்புகளும், உண்மைகளும் படம் பிடிக்கும் கேமராவின் (லென்ஸ்) ஆடி வழியே வடிகட்டப்பட்டு அல்லது பூதாகரமாக உருப்பெருக்கப் பட்டு அல்லது உருமாற்றப்பட்டு பெரும்பான்மை மக்களுக்கு வழங்கப்படுகின்றன.

இவ்வாறு பெற்ற காட்சியும் அது உருவாக்கிய படிமங்களும் மக்களது ஆழ்மனங்களில் பதிந்து அதுவே உலகம் பற்றிய அவர்களது கண்ணோட்டமாக மாறி நிலைபெறவும், பரவவும் செய்கிறது. ஆகவே, காலம், எல்லை ஆகியவற்றைக் கடந்த, தனிமனித ஆற்றலை விரிவாக்குகிற சினிமாவைக் கையாள்பவர்களுக்கு பெரும் பொறுப்பும், சமூக அக்கறையும் தாங்கள் சமூக உளவியலைக் கட்டமைக்கிறோம் என்னும் விழிப்புணர்வும் எச்சரிக்கையும், அறமும் தேவைப்படுகின்றன. ஆனால்

தமிழ்ச் சினிமாவில் இன்று அங்கம் வகிப்பவர் களில் பெரும்பாலோர் சராசரி மனித மாண்பு கூட இல்லாத **பொறுக்கிகளாகவும்,** அறிவு நாணயமற்ற கழிசடை **வியாபாரிகளாகவும்,** தமிழ்ச் சமூக வரலாறு குறித்து அறியாத **மூடர்களாகவும்** இருக்கும்போது இச்சமூகத்தின் விளிம்பில் வாழும் பழங்குடி- மலையின மக்கள் குறித்து என்ன புரிதல் இவர்களுக்கு இருக்க முடியும்?

தனக்கு வெளியே உள்ள ஒரு பொருளைப்பற்றி/ ஓர் உயிரைப் பற்றிக் கருத்துக்கூற விரும்பும் ஒரு கலைஞன் அப்பொருளாகவே/ அவ்வுயிராகவே மாறிவிடும்போதே ஓர் உன்னதமான யதார்த்த கலை இலக்கியம் படைக்கப்படும். ஆனால் நமது சினிமாத்துறை இயக்குநர்களில் பெரும்பாலோர் குறைந்த பட்சம் ஓர் ஆய்வாளன் என்ற நிலையில் நின்றுகூட தான் கருத்துக்கூற விரும்பும் பொருள்/உயிர் பற்றித் தனது அறிதல் என்ன என்று சிந்திப்பதில்லை. மாறாக, கடந்த காலத்தின் மரபு வழி கிடைத்த தனது தப்பிதங்களையே காட்சிப் படுத்தி மக்கள்முன் வைக்கும் தைரியசாலிகளாக இருக்கின்றனர்.

பழங்குடி- மலையின மக்களது வாழ்வியல் கண்ணோட்டம் முற்றிலும் வேறானது. அவர்கள் சமவெளி மக்களைப்போல் சிந்திப்பதில்லை, செயல்படுவதுமில்லை. சமவெளி மக்களது ஏற்றத்தாழ்வு, போட்டி பொறாமை, காதல் மோதல், சூதுவாது,

ஊடல் கூடல், சூழ்ச்சி சுரண்டல் போன்ற அன்றாட வாழ்க்கை நிகழ்வுகளிலிருந்து அவர்களது இயற்கை சார்ந்த நிகழ்வுகள் முற்றிலும் வேறானவை.

அதுபோலவே பாலியல் குறித்து சமவெளி மனிதர்கள் கொண்டுள்ள பல்வேறு கற்பிதங்களிலிருந்தும் அவர்களது கண்ணோட்டம் வேறுபட்டது. அவர்களது ஆடை புனைவு அல்லது ஆடைக்குறைப்பு அல்லது ஆடையின்மை, பாலியல் உணர்வு சார்ந்து குறைத்த அல்லது கைவிடப்பட்டவை அல்ல. அது இயல்பானது. ஆனால் தமிழ்ச்சினிமா, சமகாலப் பார்வையாளனுடைய பெண்ணுடல் பற்றிய ரசனையை மனதில் கொண்டே கேமராவின் கோணங்களை அமைக்கிறது.

இக்கோணங்களின் கட்டத்திற்குள் பொருளாக (object) மலையினப் பெண் வைக்கப்படும்போது மலைவாழ் பெண்களின் ஆடை குறித்து சமவெளி மனிதர்களின் மன வெளிகளில் பதிந்துபோயுள்ள பிம்பங்களை நனவாக்கி சமவெளி ஆணாதிக்கக் கோணத்தில் சுட்டு, திரையில் காட்சியாக விரித்து ஆண்களின் காமப் பசிக்கு தீனியாக்கு கிறார்கள்.

இவ்வாறான திரைப்படங்களால் தமிழ்த் திரைப் பார்வையாளர்களுக்குப் புற உலகு பற்றிய சரியான அறிதல் எதுவும் கிட்டப்போவதில்லை. 'எங்களுக்கு மக்களது பொழுதபோக்குதான் நோக்கமே தவிர புற உலகு பற்றிய புரிதலை உருவாக்குவதல்ல' என்று சில இயக்குநர்கள் சொல்லலாம். நீங்கள் கற்பனை, பொழுதுபோக்கு என்று சொல்வதும்கூட மக்களிடம் சில பதிவுகளை ஏற்படுத்தத்தான் செய்கின்றன. எனவே இதில் சமூக நலன், அக்கறை என்பது ஒவ்வொரு படத்திற்குமே அவசியமானதாகிறது.

இது ஒரு நுட்பமான விசயமும் கூட. தனக்குப் புறத்தே உள்ள மற்றவைகளின் அகம், உயிர்/உணர்வு குறித்து எவ்வித அக்கறையும் அற்ற, தனது தேவையை மட்டுமே நிஜமானதாகக் கருதி அதற்காகப் புற உலகு அனைத்தையும் தன் ஆற்றலுக்கு ஏற்ற அளவில் சுரண்டும், சூறையாடும், கட்டுப்படுத்தும் அல்லது பயன்படுத்தும் முதலாளிய மனோ பாவம் இங்கு ஒவ்வொரு மனிதருக்குள்ளும்– குளுக்கோஸ் (சலைன் Trip) சொட்டு வலியில்லாமல், உணர்வற்று இரத்தத்தில் கலப்பதுபோல ஏற்றப்படுகிறது.

நல்ல இலக்கியத்தின் அடிப்படைப் பண்பாகிய (உடல் அளவிலான) மதனிதர்களை (உள்ள அளவிலும்) மனிதர்களாக மாற்றுவது அதாவது மனிதாயப்படுத்துவது என்ற இலக்கணம் தமிழ்ச் சினிமாவிற்கும் பொருத்தப்பட வேண்டும். ஆனால் இதுவரை தமிழ்ச் சினிமா எத்தனை சதவீதம் மக்களை மனிதர்களாக மாற்றியிருக்கிறது?

**மனிதகுல விரோத சாதித் தீண்டாமை, வர்க்க ஏற்றத்தாழ்வு, ஆணாதிக்க வன்முறை போன்ற வற்றைத் தனது வாழ்நிலை/மரபு வழியே கடந்த காலத்தில் இருந்து பெற்று ஒழுகி வந்த மனிதர் களை, தனது படச்சுருளில் இருந்து வெண்திரையில் விரித்த காட்சியின் மூலம் அதிரடித்து, தன் தவறுகளுக்காக கதறவைத்து, இனி ஒருபோதும் இதுபோல் மனித விரோதியாக வாழ மாட்டேன் என்று கருதுமாறு எத்தனை லட்சம் மனிதர்களை தமிழ்ச் சினிமா மாண்புறச் செய்திருக்கிறது?**

தாழ்த்தப்பட்டவர்கள் சாதியாதிக்கவாதிகளின் அடிமைகளாக– விசுவாசிகளாக இருக்க வேண்டும், ஆதிக்கசாதிப் பெரிய மனிதர்களின் கால்களில் விழுந்து வணங்க வேண்டும் என்று போதித்திருக்கிறது. பணக்கார வீட்டுப் பிள்ளைகளின் குடி, கும்மாளம், கூத்து, திமிர், பொறுக்கித்தனத்தை ரசனைக்குரிய ஒன்றாக மாற்றியிருக்கிறது. பெண்களைத் துரத்தித்துரத்தி கேலிசெய்யவும், வக்கிரமாகப் பாட்டுப்பாடி இழிவுபடுத்தவும், குற்றவுணர்வு சிறிதுமின்றி வன்கொடுமையில் ஈடுபடவும் கற்றுத் தருகிறது. பெரிய லட்சியவாதியாகவும் குடி, புகை போன்ற பழக்கங்கள் இல்லாத அறம் காக்கும் ஒழுக்கவாதியாகவும் காட்சிதந்த எம்.ஜி. ராமச்சந்திரன் இவ்விசயத்தில் பெண்களைத் துரத்தித் துரத்திப் பாலியல் தொந்தரவு செய்வதில் கைதேர்ந்த நடிகராக (உரிமைக்குரல், ...) இருந்தார்.

குறிப்பாக, திருநங்கைகள் (அரவாணிகள்) என்றாலே கேலிப் பொருட்கள் என்று பொதுப்புத்தியில் ஆணி அடித்ததே தமிழ்ச் சினிமாதான். சாதிப் பெருமிதம் கொள்ளவும் (பாரதிராஜா படங்கள்) உயர்வர்க்கத்தவருக்குக் கீழ்ப்படிந்து போகவும், கிராமப் பண்பாட்டை உயர்வானதாக நம்பவும், பெண் மறுமணத்தை எதிர்க்கவும் கற்றுக் கொடுத்து வருவதும் தமிழ்ச் சினிமாதான்.

அதுபோலத்தான் பழங்குடி– மலையின மக்களைத் தமிழ்ச் சினிமா தொடர்ந்து இழிவு படுத்திவருகிறது. மலையின மக்களைத் தொடக்க காலத்தில் அரக்கர்கள், பயங்கரவாதிகள் என்று காட்டிய நிலையிலிருந்து, நகைச்சுவை + பாலுணர்வு காட்சிக்கானவர்களாக மாற்றிய தமிழ்ச்சினிமா, அவர்களை முட்டாள்கள் என்ற நிலையிலிருந்து மூடர்கள்/தாதாக்கள்/ ரவுடிகள் என்ற நிலைக்கு மாற்றிக் காட்சிப்படுத்துகிறது.

இதன் காரணமாகத்தான் மலையின மக்களை, அதிகார வர்க்கமானது மனிதர்களுக்கும் கீழான மிருகங்கள் எனக் கருதி அடித்துவிரட்டவும், துன்புறுத்தவும், மலையினப் பெண்களை பாலுறவுப் பயன் பொருளாகக் கருதி வன்புணர்ச்சியில் ஈடுபடவும் செய்யும் போது தமிழ்ச் சமூகம் எவ்வித அதிர்ச்சியும் இன்றி மௌனம் காக்கிறது.

இவர்கள் தமிழ்ச் சமூகம் பெற்றெடுத்த பிள்ளைகள் அல்ல. கழிசடைத் தமிழ்ச் சினிமா பெற்றுப்போட்ட சுயமரியாதை அற்ற மூடக் குழந்தைகள்.

ஒரே நொடியில் இதுபோன்ற குழந்தைகளைத் தமிழ்ச் சினிமாவும், சின்னத்திரையும் உற்பத்தி செய்து கொண்டிருக்கும் போது நாம் திரைக்கு வெளியே நின்று இதைத் தடுப்பது அல்லது மாற்றுவது எப்படியெனச் சிந்தித்துக் கொண்டிருக்கிறோம்.

அதே சமயம் சமகாலத் தமிழ்த் திரைக்குள் நுழைந்து நல்ல, மாறுபட்ட தமிழ்ச் சினிமாவை உருவாக்கும் முயற்சியில் ஈடுபட்டவர்களது உழைப்பெல்லாம் கடலில் கரைத்த பெருங்காயமாகிப் போனதையும் பார்த்துவிட்டோம்.

**தமிழ்ச் சினிமாவின் நாசகாரச் செயலை அப்படியே பெருகவிட்டு, அது ஏற்படுத்தும் தீமைகளை பிரச்சாரத்தின் மூலம் சரிசெய்துவிடலாம் என்று கருதினால் அது மடத்தனம் என்றே படுகிறது. சினிமாவின் ஆற்றலுக்கு முன் வேறு எந்தப் பிரச்சார வடிவமும் செல்லுபடியாகாது. அவ்வாறா யின் என்னதான் மாற்றுவழி?**

ஒன்று தமிழ்த் திரையில் நல்ல, சமூக அக்கறை கொண்ட கலைஞர்களின் எண்ணிக்கை சரிபாதியாளவிலானதாகப் பெருக வேண்டும். அல்லது வெளியே இருந்து தமிழ் சினிமாவின் மீது ஆதிக்கம் செய்து கட்டுப்படுத்தும் அதிகாரம் வேண்டும்.

இதில் முதல் வழி சாத்தியமற்றது என்பது நிரூபனம். நுழைந்த சிறுபான்மையினரும் சந்தர்ப்பவாதிகளாகவும், பிழைப்பு வாதிகளாகவும், சமரசவாதிகளாகவும் மாறித் தங்களை நிலைநிறுத்திக்கொண்டதும், உறுதியானவர்கள் வெளியேற்றப் பட்டதுமே கடந்தகால வரலாறு.

இரண்டாவது வழியான சினிமாவின் மீது ஆதிக்கம் செய்வது, கட்டுப்படுத்துவது என்பதை இன்று மேற்கொள்பவர்கள் முற்போக்காளர்கள் அல்ல. மாறாக பிற்போக்கு பாசிஸ்ட்டு கள். அவர்கள் இன்று சமூகத்தில் அதிகாரம் மிக்கவர்களாக இருக்கின்றனர்.

ஒரு திரைப்படத்தின் பெயரிலிருந்து கருத்துவரை இந்துமத வெறியர்களது விருப்பத்திற்கு மாறாக எதுவும் இன்று இந்தியா முழுதும் இருந்துவிட முடியாது என்பதே யதார்த்தம். அவ்வாறாயின் ஒரு விசயம் தெளிவாகிறது. சமூக அரசியல் அரங்கில் யாருடைய கை ஓங்கி இருக்கிறதோ அவர்களது செல்வாக்கே திரைத்துறையிலும் ஓங்கி நிற்கும் என்பதே அது.

தமிழ்த் திரைத்துறை என்பது சமூகம் என்ன கச்சாப் பொருளை வழங்குகிறதோ அதையே வண்ண வண்ணப் பண்டங்களாக உற்பத்தி செய்து திரும்பவும் சமூகத்திற்கு வழங்கிவிடும் என்பதே உண்மை.

இவ்வாறு தமிழ்த்திரை உற்பத்தி செய்து வழங்கும் பண்டங்கள் சமூகத்தின் மூலப்பொருளை மேலும்மேலும் வலுவாக்கும், விரிவாக்கும். இது ஒரு தொடர்சுழற்சி. ஒன்றிலிருந்து ஒன்றைப் பிரிக்கவியலாத தொடர் சங்கிலி.

இன்றைக்குத் தமிழ்த்திரை உற்பத்தி செய்துகொண்டிருக்கும் கிராமப்புற மேட்டுக்குடி சாதியாதிக்கப் பெருமிதம், நகர்ப்புற மேட்டுக்குடி கால்செண்டர் கலாச்சாரம், காலனியாதிக்க அந்நிய மோகம், இந்துப்பாசிச வெறி, இசுலாமியச் சிறுபான்மையினர் மீதான வெறுப்பு, தீவிரவாதம் குறித்த பிதற்றல் போன்றவையனைத்தும் சமூக அரசியல் அரங்கில் கோலோச்சிக் கொண்டிருக்கும் சமகால நிலவரங்களாகும்.

இவற்றைத்தான் தமிழ்த்திரை ஊதிப் பெருக்கி, இசை, பாலியல் கவர்ச்சி,நகைச்சுவை, நடனம், வண்ணம் என்னும் போதைகள் கலந்து வண்ணக் கலவையாக்கி மறுசுழற்சியில் சுடச்சுடத் திருப்பித்திருப்பி வழங்கிக்கொண்டிருக்கிறது.

சமூகத்தில் அரசியல் அரங்கில் நிலவுகின்றவற்றை கூர்ந்து கவனிக்கும், அல்லது அச்சு ஊடகத்தில் வாசித்து அறியும் ஆற்றல் அற்ற, நேரமற்ற சாதாரண மக்கள் திரையில் காட்சியாக இவற்றைப் பார்த்து ஆளுவோருக்கான கருத்தை தங்களுக்குள் உருவாக்கிக்கொள்ளும்போது அடிமைத் தன்னிலைகள் பெருகி விடுகின்றன.

ஆளும் வர்க்கத்திற்கு எதிரான தன்னிலைகள் இந்த அடிமைத் தன்னிலைகளுக்கும் எதிரானவர்களாக வலம் வரவும் தனிமைப்படவும் வேண்டியுள்ளது. அடிமைத் தன்னிலை களை ஒவ்வொருவராக அணுகி மாற்ற முனைவது காரிய சாத்தியமற்றது. எனவே

தமிழ்த்திரை புறக்கணிக்கும், இழிவுபடுத்தும் ஒவ்வொரு சமூகக் குழுவும் தங்களுக்கான பங்கைத் தமிழ்த் திரையில் பெறப் போராட வேண்டும் அல்லது இயக்கம் அமைத்துக்கொள்ள வேண்டும். அதே நேரத்தில் வெளிவரும் ஒவ்வொரு திரைப் படத்தையும் அல்லது காட்சியையும் எதிர்த்துக் குரல் எழுப்ப வேண்டும்; நீக்க நிர்ப்பந்திக்க வேண்டும்.

இந்த விழிப்புணர்வும் சுயமரியாதையும் அடித்தட்டு அல்லது ஒடுக்கப்படும் சமூகக் குழுவினரிடத்து போதிய அளவு இன்னும் வளரவில்லை. அதனால் பாசிஸ்டுகள் சமகாலத் தமிழ்த்திரையை ஆட்டிப் படைத்துக்கொண்டிருக்கிறார்கள்

எடுத்துக்காட்டாக, அம்மா என்ற திரைப்படத்தின் துவக்கவிழா விளம்பரத் தட்டிகள் இந்து முன்னணி ராமகோபாலன் எதிர்ப்பின் காரணமாக அகற்றப்பட்டதுடன் அத்திரைப்படத் துவக்க விழாவும் ஒத்திவைக்கப்பட்டது இங்கு குறிப்பிடத்தக்கதாகும். மேலும் அவ்விளம்பரத் தட்டியில் ராமன், அனுமன் வேடமிட்டவர்கள் சிறுநீர் கழிப்பது போன்ற புகைப்படங்கள் அச்சிடப்பட்டிருந்ததே இந்து முன்னணியின் எதிர்ப்பிற்கான காரணங்கள் என்பதோடு நிற்காமல், 'அப்படத்துவக்க விழாவில் சுப. வீரபாண்டியன், சீமான், தமிழ்முழக்கம் சாகுல் ஹமீது கலந்து கொள்கிறார்கள் –இசுலாமியர், கிருத்துவர், நாத்திகர் மூவரும் சேர்ந்து இந்துக்கடவுள்களை இழிவுபடுத்தும் திரைப்படத்தைத் துவக்கி வைக்கிறார்கள் – எனவே இப்படப் பிடிப்பை நடத்தவிடமாட்டோம்' என ராமகோபாலன் அறிக்கைவிட்டார். அதேபோல் கமலஹாசனின் தசாவதாரம் சைவ–வைணவ மோதலை படம்பிடித்துக் காட்டியது என்று கூறியும் எதிர்த்தார்கள்.

ஆனால் தங்களைப் பற்றித் தனது படங்களில் தொடர்ந்து நச்சைக் கக்கி வந்துள்ள விஜயகாந்தை அழைத்து ரமலான் விருந்து கொடுத்ததோடு 'விஜய்கான்' என்று பட்டமும் வழங்கும் இசுலாமியர் களையும், கரசேவைக்கு ஆள் அனுப்பிய ஜெயலலி தாவுக்கு இப்தர் விருந்து கொடுக்கும் இசுலாமியர் களையும் நாம் இங்கு பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

இதேபோல் தாழ்த்தப்பட்டோர், திருநங்கைகள், பழங்குடியினர், மீனவர்கள், நாவிதர், சலவைத் தொழிலாளர் குறித்த தவறான சித்தரிப்புகளையும், இழிவு படுத்தல்களையும் காட்சிப்படுத்திய தமிழ்த் திரைப்படங்கள் அனேகம். இவையெல்லாம் எவ்வித எதிர்ப்பும் இன்றியே கடந்து போய்விட்டன.

தங்களைப் பற்றிய உயர் மதிப்பீடும், சுயமரியாதை உணர்வும், பிறரது இழிவுபடுத்தும் முயற்சிகளை எதிர்த்த கோபமும், போராட்டமுமே உயர்வையும் சமூக விடுதலையையும் பெற்றுத்தரும். எனவே, இனிவரும் ஒவ்வொரு தமிழ்த் திரைப்படத்தையும் அடித்தட்டு சமூகக் குழுக்கள் 'இது தங்களுக்கு, சமூக நலனுக்கு ஏற்றதா, இல்லை எதிரானதா' என்று பார்த்து அதன் மீது எதிர்வினை செய்யும் நிலை வரவேண்டும்.

இவ்விடத்தில் கருத்துச் சுதந்திரம் பற்றிச் சிலர் கவலைப் படலாம். தற்போதுள்ள தணிக்கைத்துறை எவ்வாறு செயல்படுகிறது என்பது பற்றிய தெளிவும், பாசிச சக்திகளின் கருத்துகளை எதிர்த்து உண்மைகளைப் பேசும் சுதந்திரம் இங்கு மறுக்கப்பட்டுள்ள நிலையையும் சற்றுச் சிந்தித்துப் பார்த்தால் அடித்தட்டு மக்கள் நலனுக்கு விரோதமான கருத்துகளைப் பேசும் திரைப்படங்களுக்கு எதிராக வினையாற்றுவது ஒன்றும் தவறானது அல்ல என்பது தெளிவாகும். ●

கட்டுரை

# இந்தியாவின் வடகிழக்குப் பகுதியில் அரங்கம்

## உரையாடலுக்கான சில புள்ளிகள்

–அ.மங்கை, நாடகவியலாளர்



அரங்கம் நேரடித் தொடர்புடைய வடிவம். பார்வையாளர்களை ஓரிடத்தில் குறிப்பிட்ட காலவரையறைக்குள் ஒன்றிணைக்கும் வடிவம். ஒரு இனக்கூட்டத்தின் கூட்டு நனவிலி மனதின் படிமங்களைத் தொட்டெழுப்பும் வலுக் கொண்ட வடிவம். இன்று இக்கணம் நிகழும் நிகழ்வுகளோடு நம்மைப் பிணைக்கும் வடிவம். அந்த வகையில், அரங்கத்தின் வீச்சு, அதன் மரபின் தொடர்ச்சியிலும் சமகாலத்தின் பொருத்தப்பாட்டிலும் தங்கியுள்ளது. இந்தப் புரிதலோடு இந்தியாவின் வடகிழக்கு மாநிலங்களில் நடக்கும் அரங்கச் செயல்பாடுகளை அணுகும்போது நம்முன் எழும் விவாதங்களைக் கோடிட்டுக் காட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

அருணாசலப்பிரதேசம், அசாம், மணிப்பூர், மேகாலயா, மிசோரம், நாகாலாந்து, திரிபுரா, சிக்கிம் ஆகிய மாநிலங்களின் தொகுதி வடகிழக்குப் பகுதி எனப்படுகிறது. ஆரிய, திராவிட இனக்கூறுகளில் இருந்து வேறுபட்ட மங்கோலியக் கூறுகள் கொண்ட மக்கள் வாழும் பகுதி இது. தென்கிழக்கு ஆசிய நாடுகளின் தன்மைகள் கொண்ட பகுதி. ஒவ்வொரு மாநிலத்திலும் பல்வேறு மொழிபேசும் இனக்குழு (Clan) மக்களைக் கொண்ட பகுதி.

ஒருபுறம் மெயின் லாண்ட் எனப்படும் இந்திய நாட்டுடனான உறவு, மறுபுறம் இம்மாநிலங்களுக்கிடையேயுள்ள உறவு, அவற்றைவிட முக்கியமாக ஒவ்வொரு மாநிலத்திற்குள்ளும் வாழும் இனக் குழுக்களுக்கு இடையே நிலவும் மோதல்கள் என நாளாந்தம் சிக்கலான நெருக்கடிகளுக்கு முகம் கொடுத்து வரும் பகுதி. பல்வேறு தனித்தன்மைகளுடன், சமவெளிப் பகுதிகளிலிருந்து விலகியுள்ள பண்புகள் காரணமாக இந்திய அரசோடு தொடர்ந்து முரண்பட்டு வரும் இம்மாநிலங்கள் பிரிவினை கோருபவையாகக் கருதப்படும் பார்வை பொதுப்புத்தியில் உறைந்துபோன ஒன்று. அரசு விழாக்களில் இப்பகுதியின் ஆதிவாசித் தன்மைகளை ஆராதிக்கும் போக்கில் நடனங்களுக்கு இடமளித்துத் தனது பெருந் தன்மையைக் காட்டும் இந்திய அரசின் பண்பாட்டு மேலாதிக்க உணர்வு நமக்குப் பரிச்சயமான ஒன்று. தொடர்ந்த இராணுவ இருப்பு, இனக்குழுக்கள் தத்தம் உரிமைக்கென அமைத்துள்ள போராளிக்குழுக்கள் என அன்றாடம் அச்சத்தின் பிடியில் நகரும் வாழ்க்கையில் அரங்கத்துறையின் செயல்பாடுகள் குறித்து அணுகும்போது அதன் தீவிரத்தை உணர வேண்டியது அவசியம்.

வடகிழக்குப் பகுதியின் சமகால அரங்க முயற்சிகள் குறித்த முழுமையான புரிதலுக்கான வாய்ப்புகள் மிகக்குறைவு. எனவே இக்கட்டுரையின் தகவல்கள் முழுமையானவையல்ல என்பதைக் கணக்கில் கொள்ள வேண்டும்.

மணிப்புரி அரங்கம் இந்திய அரங்கின் மிக முக்கியப் போக்குகளில் ஒன்றாக உருவாகி உள்ளது. சுமார் இருபது நவீன அரங்கக்குழுக்கள் இயங்கும் மாநிலம் இது. பல தேசிய நாடகப்பள்ளி கலைஞர்களைக் கொண்டுள்ளது. மணிப்புரி பல்கலைக்கழகம் நிகழ்த்து கலைத்துறை, பயிற்சி, ஆய்வு ஆகியவற்றில் ஈடுபட்டு வருகிறது.

அசாமில் அகோம் இனத்தின் சத்ரியா நடனம் செவ்வியல் மதிப்பைக் கோரி நிற்கிறது. பல்கலைக்கழகங்களில் நாடகம் ஒரு துறையாக அறிமுகப்படுத்துவதற்கான முயற்சிகள் தொடங்கி உள்ளன. மொபைல் அரங்கம் எனப்படும் ஆண்டில் ஆறு மாதங்கள் அசாம் மாநிலம் முழுதும் பயணம் செய்து, இரண்டாயிரம் பேருக்கு மேல் பார்க்கக்கூடிய கொட்டகைகள் அமைத்து, இரு மேடைகள் அமைக்கப்பட்டு, காட்சி மாற்றங்களை மின்னல் வேகத்தில் நிகழ்த்தும் குழுக்கள் முக்கிய பொழுதுபோக்கு வடிவமாகத் திகழ்கின்றன. தேசிய நாடகப் பள்ளியில் நாற்பதுக்கும் மேற்பட்டவர்கள் பயிற்சி பெற்றுள்ளனர்.

ஷில்லாங்கில் உள்ள வடகிழக்கு மலைப்பகுதிப் பல்கலைக் கழகத்தில் (NEHU) நிகழ்கலைத்துறை முதுகலை ஆய்வுப் படிப்புகளை வழங்குகிறது.

தேசிய நாடகப்பள்ளி கடந்த ஐந்தாண்டுக்குள் நாகாலாந்து, அருணாச்சலப் பிரதேசம், சிக்கிம் பகுதிகளில் நாடகப் பட்டறைகளை நடத்தியுள்ளது. நாடக விழாக்களும் நடத்தி யுள்ளது. சங்கீத நாடக அகாதமி பல்வேறு கருத்தரங்கங்கள் மற்றும் நிகழ்ச்சிகளை நடத்தியுள்ளது.

மேற்கூறிய தகவல்கள், இந்திய அரசின் பண்பாட்டு நிறுவனங்கள் இப்பகுதியின் முக்கியத்துவத்தை உணர்ந் துள்ளன என்பதைக் குறிக்க உதவும். அதோடு, இப்பகுதிவாழ் கலைஞர்கள் தமது கலைகளின் தனித்துவத்தைக் காப்பதில் கொண்டுள்ள அக்கறையையும் இவை காட்டுகின்றன. (இதனோடு ஒப்பிடுகையில் தமிழகத்தின் மெத்தனப் போக்கு அதிர்ச்சியளிக்கக் கூடியது.)

இந்திய அரங்கத்துறையில் மணிப்புரி அரங்கிற்கான தனி இடத்தை உருவாக்குவதில் கனையாலால், ரதன்தீயம் ஆகியோருக்கு முக்கியப் பங்குண்டு. இவர்களிருவரோடு லோகேந்திர ஆரம்பம், ஹாரோக், சாம் ஈபோடொம்பி ஆகியோர் எண்பதுகளின் முக்கிய அரங்கத் துறையாளர் களாக உருவாகியுள்ளனர்.

ரதன்தீயத்தின் சக்கரவியூக், உத்தரபிரியதர்ஷினி போன்ற நாடகங்கள் நவீன இந்திய அரங்கத்தின் மைல்கற்கள் எனப் போற்றப்படுகின்றன. மணிப்புரி அரசியலை நேரடியாகப் பேசிய இம்பால், இம்பால், இம்பால் கரூஸி (இம்பாலுக்குப் போவோம்) நாடகங்கள் தேசிய மேடைகளை எட்டவில்லை. மணிப்புரி மொழி, மணிப்புரி அரசியல் என்பதால் அவை தேசிய அரங்கத்திற்குள் சேரவில்லை என ரதன்தீயம் குறிப்பிடுகிறார்.

கனையாலால் சமகாலச் சிக்கல்களை நேரடியாகப் பேசுவதில்லை. மனித குலத்தின் அகவயப்பட்ட பயணத்தை, மனித உடலின் பல்

பரிமாணங்கள் மூலம் தேடும் அரங்கத்தை அவர் தொடர்ந்து முயல்கிறார். அவரது துணைவியாரும், இந்தியாவின் தலைசிறந்த நடிகையுமான சாவித்ரி தேவி அவரது காட்சிகளுக்கு உருவம் கொடுத்து வருகிறார்.

லோகேந்திர ஆரம்பம் மாக்பெத் நாடகத்தைப் படகுக்குள் நிகழ்த்தினார். இரத்தமேடை என்ற பெயரில் வழங்கப்பட்ட இந்நாடகம் தேம்ஸ் நதியிலும் நிகழ்த்தப்பட்டது.

இவர்களது அரங்க மொழி காட்சிப் படிமங்களை மனதில் தக்கவைத்து, மேடையை உலகப் பொதுவான தளத்தில் இயங்க வைக்கின்றன. கன்னடத்தில் பி.வி.காரந்த், கேரளத்தில் நாராயண பணிக்கர் ஆகியோர் குறிப்பிட்ட வடிவத்தை, செழுமையான அரங்கப்போக்கை நிலை நிறுத்தியது போலவே மணிப்புரி அரங்கமும் நிலைபெற்று நிற்க இவர்களது மேடைமொழி உதவியுள்ளது. அதே சமயம் அத்தகு வடிவத்தை இறுக்கமான வகையில் உறுதிப்படுத்தியுள்ளது.

சமகாலச் சிக்கல்களை நேரடியாகப் பேசுவதில் உள்ள சிக்கல், அன்றாடம் எதிர்கொள்ளும் உயிர் அபாயம், பெருகிவரும் பொருளாதாரச் சிக்கல்கள் ஆகியவற்றை தேசிய அளவில் வெளிப்படுத்தும் முயற்சிகள் வரவில்லை என்பது வருத்தத்திற்குரியது. அழகியல் கூறுகள் பொங்கிவழிந்து, எதார்த்தத்தின் குரூரங்களையும் அழகாக்கிவிட்ட கொடுமை இங்கு நிகழ்ந்துள்ளது எனலாம். மணிப்புரி அரங்கம் குறித்த தனி இதழ் ஒன்றை ஸீகல் தியேட்டர் குவாட்டர்லி 1997 இல் வெளியிட்டது.

இந்தப் பின்னணியில், தொண்ணூறுகளில் இருந்து அரங்கத் துறையில் இயங்கிவரும் ரபோஜிதா கோகோய் (RABOJITHA GOGOI) என்ற அசாமைச் சேர்ந்த பெண் இயக்குநரின் முயற்சிகள் முக்கியத்துவம் பெறுகின்றன.

ஜிர்சாங், தியேட்டர் குழுவின் அமைப்பாளர்; தேசிய நாடகப்பள்ளிப் பட்டதாரி; வடகிழக்குப் பகுதியின் அரசியல் மற்றும் பண்பாட்டு வெளிப்பாடுகளில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்.

2007 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் அவரைச் சந்தித்தபோது எடுக்கப்பட்ட செவ்வி அடிப்படையில் பின்வரும் தகவல்களை முன்வைக்கிறேன்.

அசாம் மாநிலத்திற்குள் உள்ள பல்வேறு இனக்குழுக்களுக்கு இடையே உள்ள மோதல்கள் சிரத்தையாக அணுகப்பட வேண்டியவை. போடோ இனப்போராட்டம் குறித்து நாம் நன்கறிவோம். அசாமின் ஒரு பகுதியில் வாழும் கார்பி (Karbi) இன மக்கள் மத்தியில் வாழ்ந்த அனுபவம் காரணமாக, அவர்களது பண்பாட்டு வெளிப்பாட்டில் அக்கறை கொண்ட ரபோஜிதா அவர்களது மொழியில் (கார்பி யோலோங்) அவர்கள் மத்தியில் புழங்கும் நாட்டார் கதையை நாடகமாக்கினார்.

கார்பி மொழியில் மேடையேறிய முதல் நாடகம் **ரங்க ஃபார்பி ரங்பீ (2001)** என்ற நாடகம். கார்பி இனத்தைச் சேர்ந்த அரசி அவர்களைக் காப்பாற்ற மேற்கொண்ட முயற்சியே இங்கு நாடகமாயிற்று. அதிகாரம் கொண்ட பிற இன அரசுகள் கார்பி இனத்தாரை அடக்கி ஆள பல வகைகளில் முயன்றனர். அவர்களது விளைபொருளான இஞ்சியிலிருந்து வெள்ளி வரை பேரம் பேசப்பட்டன. ஒருமுறை டிமாசாவில் வசித்துவந்த அரசன் வளர்த்து வந்த புலிக்குட்டி நோய்வாய்ப்பட்டது. மருத்துவர்கள் ஆலோசனைப் படி முலைப்பால் கொடுக்க முடிவு செய்யப்பட்டது. முலைப் பால் வழங்கும் பொறுப்பு கார்பி இனத்திடம் வந்து சேர்ந்தது.

ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு குடும்பத்தைச் சேர்ந்த இளம்தாய் புலிக்குட்டிக்குப்பால் கொடுக்க வேண்டும் என்ற முடிவை ரங்க ஃபார்பி மீறினாள். அதற்காக அவளைப் பிடிக்க வந்த போர்வீரர்களைக் கையில் இருந்த கோடாரியால் விரட்டினாள். அச்சமுற்ற கார்பி இன மக்களிடம் அஞ்சிஅஞ்சி சாவதை விட, இதிலிருந்து மீள்வதற்கு வழி தேட வேண்டும் என அறிவுறுத்தினாள். அவளது ஆலோசனைப்படி அரசனின் படை இவர்களைப் பிடிக்க முடியாதபடி பாதைகளை மறித்து, மாற்றி அமைத்துவிட்டு மக்கள் தப்பியோடினர்.

கார்பி இன வரலாறாக, கதைப்பாடலில் வரும் கதைத் தலைவியை பாத்திரமாக்கியது இந்நாடகம்.

அசாம் மாநிலத்திற்குள் உள்ள பல்வேறு இனக்குழுக்களின் அடையாளத்தை முன்னெடுப்பதன் அவசியத்தை முன்வைத்து இந்நாடகத்தை இயக்கியதாக ரபோஜிதா தெரிவித்தார்.



தேசிய நாடகப் பள்ளியின் பயிற்சி முகாம் ஒன்று நாகாலாந்தில் 1999 இல் நடைபெற்றது. அதில் **நிஷேலி** என்ற நாடகம் தயாரானது. பதினான்கு நாகா இனக் குழுக்களைச் சேர்ந்த பிரதிநிதிகளைக் கொண்டு இந்நாடகம் உருவாக்கப்பட்டது. சேமநாகா இனத்தில புழங்கும் நாட்டார் கதை நிகழ்த்தப்பட்டது. நாகாலாந்து இனக் குழுக்கள் இடையே உருவாக்கப் பட்டு வரும் நாகாமிஸ் மொழியில் இது நிகழ்த்தப் பட்டது.

தேசிய நாடகப்பள்ளியின் தயாரிப்பாக மேம்ஸாகேப் பிரித்வி என்ற நாடகம் 2006 இல் இந்தியில் தயாரிக்கப்பட்டது. தண்ணீருக்காக பலியாக்கப்படும் பெண் குறித்த ராஜஸ்தானி கதையை கதைக்கூற்றாகக் கொண்டு மணிப்புரியில் இரண்டாயிரம் ஆண்டிலிருந்து உண்ணாவிரதப் போராட்டம் நடத்தும் **ஷர்மிளா சானு,** மணிப்புரியின் பெண்கள் அமைப்பான **மெய்ரா பைபீ** குழுவின் போராட்டங்கள், பண்பாட்டு நிகழ்வுகளைப் பொட்டலமாகக் கட்டி வெளிநாடுகளில் நிகழ்த்த முன்வரும் உலக மயமாக்கலின் பண்பாட்டு நிகழ்வுகள், ஆயுத பேரம் என பல கதைகள் ஊடும்பாவுமாக வெளிப்படுத்தப்பட்டன. இந்நாடகத்தின் தலைப்பு உல்ஃபா இயக்கத் தலைவர்களில் ஒருவரான மெகன் கச்சோரியின் கவிதையிலிருந்து எடுக்கப்பட்டது.

வடகிழக்குப் பகுதியின் மிக முக்கியச் சிக்கலான இராணுவச் சிறப்புப் படையின் ஆக்கிரமிப்பு மற்றும் ஆயுதப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ள குழுக்களின் அடி நீரோட்டமாகக் கொண்ட முக்கிய படைப்பாக இந்நாடகத்தைக் கொள்ளலாம்.

இந்நாடகம் இந்தி மொழியில் தேசிய நாடகப் பள்ளியின் கலைஞர்களால் நிகழ்த்தப்படுவது குறிப்பிடத்தக்கது. ஒருபுறம் அடையாள அரசியலின் அங்கமாக கார்பி, நாகாமிய மொழிகளில் நாடகங்களை இயக்கியுள்ள ரபோஜிதா இந்தியில், டெல்லி நகரில் வடகிழக்குப் பகுதியின் அரசியல் சிக்கல்களை மையமாகக் கொண்ட நாடகத்தை மேடையேற்றியது முக்கிய நிகழ்வாகும்.

**மஞ்சயாத்ரா** எனும் நகரும் அரங்க நிகழ்வை ஜிர்ஸாஸ் குழு 2007 இல் மேற்கொண்டது. முதல்கட்ட பயணம் ஏப்ரல் 21 முதல் மே 12 வரையில் நடைபெற்றது. இரண்டாம் கட்ட பயணம் ஜூன் 20 முதல் ஜூலை 5 வரை நடைபெற்றது. வடகிழக்குப் பகுதி முழுவதும் பயணிக்க முற்பட்ட அரங்க முயற்சி இது. பல்வேறு அமைப்புகளின் உறுதுணையோடு, முதன்முதலாக இம்முயற்சி மேற்கொள்ளப்பட்டது. வடகிழக்குப் பகுதியினர் தமக்குள் உரையாடுவதற்கான வாய்ப்பை இம்முயற்சி தொடங்கி வைத்தது. காதா– முதல்பாடம் என்ற இந்நிகழ்வு பல பனுவல்களை இணைத்த முயற்சி. அரசியல், பொருளாதாரம், பண்பாடு என அனைத்துத் தளத்திலும் நடக்கும் ஆதிக்கத்தை வெளிப்படுத்திய நிகழ்வாக இது அமைந்தது. வணிகமயமாக்கும் போக்கிற்கெதிரான கனவுகளைக் காணும் அறைகூவல் இந்த யாத்திரை.

ரபோஜிதா கூறுவது: ‘வடகிழக்குப் பகுதிச் சிக்கல்கள் என்னுடைய சிக்கல்கள்; அவை எனக்கு மிக முக்கியத்துவம் வாய்ந்தவை. எனது தலைமுறையைச் சேர்ந்த பலர் இறந்துள்ளனர்; ஆயுதக் குழுக்களில் இணைந்துள்ளனர்; ஆயுதங்களைக் கைவிட்டு அரசிடம் பணிந்துள்ளனர்; அவர்களில் பலர் என்னோடு படித்தவர்கள் என் நண்பர்கள். இது எனக்குரிய சிக்கல்.’

மொழி, அரங்கவடிவம், கதைக்கரு, அரங்கப் பார்வை யாளர்கள், உலகளாவிய மனித உரிமை, ஆழமும் வீரியமும் மிக்க வெளிப்பாடு என அனைத்து வகையிலும் நம்மை உலுக்கக்கூடிய பல கேள்விகளைக் கேட்டபடி ரபோஜிதாவின் அரங்கமுயற்சிகள் தொடர்கின்றன. மேலும் தொடரும் என நம்புகிறோம். ●

அஞ்சலி:

நம் உரையாடலில் இடம் பெற வேண்டியவர்கள்

# கமில் வி.சுவெலெபில் எனும் திராவிட இயல் ஆராய்ச்சியாளன் (1927–2009)



**வீ.அரசு**

பேராசிரியர் கமில் வாக்லேவ் சுவெலெபில் (Kamil Vaclave Zuelebil) செக்கோஸ்லேவிய நாட்டின் பராக் (Prague) நகரில் 1927ஆம் ஆண்டு நவம்பர் ஏழாம் நாள் பிறந்தவர். கடந்த சனவரி மாதம் பதினேழாம் நாளில் (17–1–2009) பாரிசுக்கு அருகில் உள்ள ஒரு குக்கிராமத்தில் மறைந்தார். திராவிட இயல்/தமிழியல் ஆய்வுக்குப் பெரும்பங்களிப்புச் செய்த பெருமகனை நினைவுகூர்ந்து போற்றும் கடமை நமக்குண்டு. இவர் தமிழியல் ஆய்வில் செய்துள்ளவற்றை நினைவுபடுத்திக் கொள்வதே நாம் அவருக்குச் செய்யும் அஞ்சலியாக அமையும். இவரது ஆய்வுகளை நமது புரிதலுக்காகக் கீழ்க்கண்டவாறு பாகுபடுத்திக்கொள்ளலாம்.

–தமிழ்ச் செவ்விலக்கியங்களை இவர் எப்படி அணுகியுள்ளார்? அவ்விலக்கியங்களைப் புரிந்துகொள்ள இவரது அணுகுமுறை எத்தகைய பரிமாணத்தை உருவாக்கியுள்ளது?

–தமிழ் இலக்கிய வரலாற்றை உலகுக்கு எப்படி அறிமுகப் படுத்தியுள்ளார்? ஐரோப்பிய சமூகம் தமிழ் இலக்கியங்களைப் பற்றி அறிந்துகொள்ள இவரது இலக்கிய வரலாற்று நூல்கள் எவ்வகையில் உதவுகின்றன?

–திராவிட மொழி/மொழியியல் ஆய்வுகளைப் பேராசிரியர் நிகழ்த்தியுள்ள பரப்பை எப்படி அறிவது? திராவிட மொழிக் குடும்பம் குறித்து ஐரோப்பிய சமூகம் புரிந்துகொள்ள இவரது ஆய்வுகள் எவ்வகையில் உதவுகின்றன?

–மொழியர்ககம், தொன்மவியல், சிற்பவியல், நவீன இலக்கி ஆய்வுகள் ஆகிய பிற துறைகளில் இவரது பங்களிப்புகள் எவையெவை?

இவை போலும் பல கேள்விகளுக்கு விடையறியும் கடமையும் தேவையும் நமக்குண்டு. மேற்குறித்த பல்துறைகள் தொடர்பான இவரது ஆங்கில நூல்தொகுதிகளைத் தொகுத்துக்கொள்வதன் மூலம் சுவெலெபில் அவர்களைப் புரிந்துகொள்ள முயலலாம். தமிழியல் ஆய்வில் ஈடுபட்ட பிற ஐரோப்பிய /அமெரிக்கர் களைவிட இவர் எங்கே தனித்துச் செயல்பட்டார் என்பதை யும் அறிந்துகொள்ள முடியும். இந்தப் புரிதல் இவரை நமது நெஞ்சில் நிறுத்தும். தமிழியல் தொடர்பான ஆய்வுகளுக் குள் செயல்படும் எவரும் புறக்கணிக்க முடியாத மனிதராக இவர் இருக்கிறார் என்பதையும் அறிந்துகொள்ள முடியும்.

தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் தொடர்பாக இவரது இரண்டு ஆய்வு நூல்கள் உள்ளன. தமிழ் இலக்கிய வரலாற்று நூல்களிலும் செவ்விலக்கியம் தொடர்பான விரிவான பதிவுகளைச் செய்துள்ளார்.

Thirumurugan (1981), Literary conventions in Akam poetry (1986) என்னும் இவரது இரண்டு சிறு நூல்கள் செவ்விலக்கியத் தமிழ் மரபு குறித்த உரையாடல்களை முன்வைக்கின்றன. 'அகப்பாடல்கள் வழி பெறலாகும் இலக்கிய மரபுகள்' எனும் நூல் உரையாடலுக்கு உட்படுத்தும் செய்திகளைப் பின்கண்ட வாறு நாம் தொகுக்கலாம்.

2382 சங்கப் பாடல்களில், 1862 பாடல்கள் அகம் சார்ந்தவை. அதாவது, மொத்த சங்கப் பாடல்களில் நான்கில் மூன்று பங்கு அகப்பாடல்களாக உள்ளன. அவற்றிலும் 'பாலை' குறித்த அகப்பாடல்கள் 531. இவை எண்ணிக்கையில் அதிகம். ஏன் இவ்வளவு அதிகமான பாலைப் பாடல்கள் உள்ளன? சங்கப்பாடல்களில் பேசப்படும் பிரிவிற்கும் பாலைப் பாடல்களுக்குமான உறவுகளை எப்படிப் புரிந்துகொள்வது? ஆகிய பல உரையாடல்களை சுவெலெபில் முன்வைக்கிறார். இடமும் வெளியும் (Time &Space) முதற்பொருளாகவும், சூழலும் உயிரினங்களும் (Fauna & Flora) கருப்பொருள் களாகவும், உணர்வுகள் (Emotions) உரிப்பொருளாகவும் அமைக்கப்பட்ட கவிதை மரபே அகம்-புறமாக வடிவமைக்கப் பட்டுள்ளது. இதில் அகமரபே முதன்மையாகவும் பெரும்பான் மையாகவும் இடம் பெற்றிருக்கிறது என்று கூறுகிறார். இத்தன்மையை ' there is a spontaneous identification of human reality with objects of Nature ' என்றும், ' the realities of human life in an undifferentiated relationship with the life' எனறும் பேசுகிறார். 'இயற்பொருளும் உயிரும் வேறல்ல' எனும் 'Hylozoistic' கோட்பாட்டை அடிப்படை யாகக்கொண்டு செவ்விலக் கியங்களை மதிப்பீடு செய்கிறார். நற்றினை 35, 47, அகநாநூறு 371 ஆகிய பிற பாடல்கள் மூலம் மேற்குறித்த தன்மையை விளக்குகிறார். தன் துணையை இழந்த மான் உணவு உண்ணாமல் இருத்தல், பெண் யானை கொல்லப் பட்டதால் ஆண் யானையும் குட்டி யானையும் அடையும் துன்பங்கள், புன்னை மரத்தைத் தனது தங்கையாகக் கருதும் பெண் ஆகிய பிற நிகழ்வுகள் சார்ந்து மேலே குறிப்பிட்ட செய்திகளை உரையாடலுக்கு உட்படுத்து கிறார். செவ்விலக்கிய மரபுகளின் வளத்தை இதன்மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

தமிழில் பேசப்படும் 'களவு' மரபிற்கும் சமசுக்கிருத 'கந்தர்வ' மரபுக்கும் தொடர்பில்லை என்று கூறுகிறார். பிற்கால வைதிக வளர்ச்சிகளை செவ்விலக்கிய மரபுகளோடு இணைத்துப்பேசுவதை இவர் ஏற்கவில்லை. நச்சினார்க்கினியர், பரிமேலழகர் அகியோர் எழுதியுள்ள உரைகளைக்கொண்டு செவ்விலக்கிய மரபுகளைப் புரிந்துகொள்ள முடியாது என்றும் விவாதிக்கிறார். ஆரிய மயமாதல், பார்ப்பனிய மயமாதல் ஆகியவற்றை வெவ்வேறு தளங்களில் வைத்துப் புரிந்துகொள்ள வேண்டுமென்கிறார். இம்மூன்றையும் ஒரே அடிப்படையில் அணுகுவதால் ஏற்படும் சிக்கல்கள் குறித்தும் சுவெலெபில் விவாதித்துள்ளார். சமசுக்கிருத மயமாதல் மற்றும் பார்ப்பனிய மயமாதல் ஆகிய நிகழ்வுகளுக்கு முற்பட்டது முருகன் மற்றும் கொற்றவை தொடர்பான சங்க இலக்கியப் பதிவுகள் என்பது இவரின் கருத்தாகும்.

சங்க இலக்கியத் தொகுப்பு முறைகளில் இடம் பெற்றுள்ள அடிக்குறிப்புகள், திணைத் துறைகள், உரைகள் ஆகியவை பிற்கால இலக்கண நூல்களான இறையனார் அகப்பொருள், நம்பியகப்பொருள் ஆகியவற்றை உள்வாங்கிச் செயல்படுத்தப் பட்டிருப்பதைப் பேராசிரியர் சுட்டுகிறார். இதனால் செவ்விலக்கியங்கள் அவற்றின் மூலத்தை இழந்துவிடாது, அவை தம்மளவில் பாதுகாத்துக்கொள்ளும் தன்மை பெற்றுள்ளன

என்று கூறுகிறார். செவ்விலக்கியங்கள் காலந்தோறும் வாசிக்கப்படும் முறைமைகளால் அவற்றின் அடிப்படைகள் மேலும்மேலும் செழுமையுறுவதை மேற்குறித்த குறிப்பின் மூலம் அறிந்துகொள்ள முடியும். சங்க இலக்கியப் பாடல்கள் வாய்மொழி மரபைச் சார்ந்தவை என்று கூறுவது அவ்வளவு சரியாக இருக்க முடியாது. இவற்றில் வெகுமக்களின் வழக்காறு கள் இடம் பெறவில்லை. இவையனைத்தும் சபை சார்ந்த (Court Literature) இலக்கியங்களாகவே கருத வேண்டும். இப்பின்புலத்தில் இவற்றைச் “சான்றோர் செய்யுள்” என்று கூற முடியும் என்கிறார். செவ்விலக்கியங்களில் உள்ள கூற்று மரபை இதற்கு ஆதாரமாகக் கொள்கிறார்.

அகப்பாடல்களின் இலக்கிய மரபைக் குறித்து விவாதித்ததைப் போல் செவ்விலக்கியங்களில் பேசப்படும் முருகன் குறித்த உரையாடலைத் ‘திருமுருகன்’ நூலில் முன்வைக்கிறார். வீரன், இளைஞன், அழகன், வேலன் ஆகிய பலபொருளில் முருகன் குறித்த செய்திகளை விவாதிக்கிறார். ‘சுப்ரமண்யன்’ எனும் கருத்தாக்கம் பதினொன்றாம் திருமுறைக் காலத்திற்குப் பிற்பட்டது என்கிறார். தெய்வானை மணம், அசுரனைக் கொல்லுதல், சுட்ட பழம்- சுடாத பழம் கதை, ஆறுமுகச் சிற்பங்கள் ஆகியவை தமிழ் மரபல்ல என்பது சுவெலெபில் வாதமாகும். இவ்விவாதத்தை ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வுச் சிற்பங்கள், புதிய கற்காலப் பொருட்கள் ஆகிய பிற அடிப் படையில் நிகழ்த்துகிறார். மலைவாழ் மக்களின் தொன்மமாக முருகன்-வள்ளி கதையைத் தெளிவுபடுத்துகிறார். சூர் மற்றும் கொற்றவை தொடர்பான செய்திகளை முருகனோடு இணைக் கிறார். சுப்ரமண்யன் வள்ளி-தெய்வானையோடு இருக்கும் சிற்பம் பதினோராம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டது என்று கூறுகிறார். ‘திருமுரு காற்றுப் படை’ மூலம்தான் முருகன் தொடர்பானவை பார்ப் பனிய மயமாக்கப்பட்டன என்கிறார். நக்கீரன் எனும் பார்ப்பனக் கவிஞன் இதற்கு அடிப்படையாக அமைவதாகவும் கூறுகிறார். முருகன் பின்னர் சுப்ரமண்யன் ஆக்கப்பட்டதற்கான காரணங்கள் பலவற்றைத் தெளிவு படுத்துகிறார். ஆரியர்கள் தொடர்பான தொன்ம உருவாக்கம், சமசுக்கிருத மொழியின் மேன்மை கட்டப்படுதல், சடங்கு களைத் தரப் படுத்துதல், பின்னர் உருவான சாதியக் கூறுகள் ஆகிய பிறவும் முருகனை சுப்ரமண்யன் ஆக்கின என்பது சுவெலெபில் அவர்களின் வாதமாகும். முருகன்- வள்ளி எனும் மரபு முழுக்கமுழுக்கத் தமிழ் மரபு. இதனை வைதிக மரபு உள்வாங்கியது என்கிறார். ‘முருக-ஸ்கந்த இணைப்பு’ குறித்துப் பேசும் பேராசிரியர் நா.வானமாமலை இதனை இரு மரபுகளின் இணைப்பு என்று கூறுவார். ஆனால் அம்மரபுகள் எந்தத் தேசிய இனத்திற்கு உரியவை என்னும் உரையாடலை அவர் முன்னெடுக்கவில்லை. இவ்வகையில் சுவெலெபில் தமிழ்த் தேசிய மரபாக முருகன்-வள்ளியை அடையாளப் படுத்துகிறார்.

செவ்விலக்கியம் சார் இலக்கிய மரபையும் அதில் காணப் படும் தொன்மங்களையும் சமூக வரலாற்றைக் கட்டமைப்பதற்கு எவ்வகையில் உள்வாங்குவது என்பதனைப் பேராசிரியர் சுவெலெபில் செவ்விலக்கிய ஆய்வில் கவனப்படுத்தியிருப்பதைக் காண்கிறோம். தேசிய இனங்களின் வரலாற்றுத் தரவுகளைப் பதிவு செய்வது என்பதும் தேசிய இன ஈடுபாடு என்பதும் வெவ்வேறு தளத்தில் நடைபெற வேண்டும். இவ்வகையில் சுவெலெபில் ஆய்வுகள் தமிழ்த் தேசிய இன வரலாற்றுக்கு அரிய தரவுகளை அடையாளப்படுத்துவதைக் காண்கிறோம்.

பேராசிரியர் கமில் சுவெலெபில் எழுதியுள்ள தமிழ் இலக்கிய வரலாறு தொடர்பான நூல்கள் பின்வருவன:

- Tamil Literature: A History of Indian Literature -1974
- Tamil Literature (Leiden) - 1975

Companion Studies to the History of Tamil Literature - 1992

- The Smile of Murugaa: on Tamil Literature of South India (Leiden)-1993
- Lexicon of Tamil Literature
- Introducing Tamil Literature

பேராசிரியர் சுவெலெபில் தமிழ் இலக்கிய வரலாறு குறித்துப் பல நூல்கள் எழுதியுள்ளார். ஐரோப்பியர்களுக்குத் தமிழ் இலக்கிய வரலாற்றை மிக விரிவாக அறிமுகம் செய்தவர் இவர்தான். தமிழியல் குறித்த ஆய்வில் ஈடுபடும் ஐரோப்பியர், சுவெலெபில் அவர்களின் தமிழ் இலக்கிய வரலாற்று நூல்களைப் படித்துத்தான் தமிழ் குறித்த புரிதலைப் பெறுகின்றனர். இந்நூல்கள் குறித்து விரிவாக எழுதும் தேவையுண்டு. இந்நூல்களைப் புரிந்துகொள்ள-Tamil Literature (Leiden) - 1975 எனும் நூலில் உள்ள செய்திகளைக் கீழ்க்காணுமாறு தொகுத்துக்கொள்ளலாம்.

1. தமிழ்ச் செவ்விலக்கியங்களின் மீள்கண்டுபிடிப்பு, 2. தொகுப்பு மரபுகள், 3. தமிழ் இலக்கியங்களைக் கால ஒழுங்கில் பாகு படுத்தல், 4. கால ஆய்வுகள், 5. வரலாற்றுக்கு முந்தைய தமிழ் இலக்கிய மரபு, 6. பாணர் மரபு, 7. செவ்விலக்கிய பிற்காலம் (கிபி 250–600), 8. பக்தி இலக்கியம் (கிபி 600–900), 9. முன் இடைக்காலம் (கிபி 900–1200), 10. பின் இடைக்காலம் (1200–1750) பகுதி 1, 11. பின் இடைக்காலம் (1200–1750) பகுதி 2.

வரலாற்றுக்கு முந்தைய காலம் தொடங்கி பதினெட்டாம் நூற்றாண்டு முடிய உரையாடலுக்கு உட்படுத்தப்பட்டுள்ள இந்நூல் தமிழ் இலக்கிய வரலாற்றை அணுகும் முறை வழக்கமான முறைகளிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாகும்.

ஓலைச்சுவடிகளிலிருந்த தமிழ் இலக்கியம் அச்சு வடிவம் பெறும்போது உருவாகும் பரிமாணங்களையும், தமிழ் இலக்கிய வரலாற்றைப் புரிந்துகொள்ள உதவும் அடிப்படைகளையும் முதன்நிலையில் விரிவாக விவாதிக்கிறார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைக்காலம் வரை தமிழ் செந்நெறி மரபு உலகம் அறியாத மரபாகும். காலனியச் செயல்பாடுகளும் அச்சுக் கருவியும் தமிழ்ச் செவ்விலக்கிய மரபை வெளிக்கொண்டு வருவதில் முதன்மையான காரணிகள். இக்காரணிகள் தொடர் பான விரிவான விவரணங்களை இந்நூல் முன்வைக்கிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைக்காலம் தொடங்கி, தமிழ்ச் சமூக இயங்குதளத்தில் ஏற்படத் தொடங்கிய மாற்றங்கள், செவ்விலக்கியக் கண்டுபிடிப்புகளுக்கு அடிப்படையாக அமைந்தன. இக்கண்டுபிடிப்பில் செயல் பட்டவர்களின் நோக்கங்கள், பின்புலங்கள் எவ்வகையில் இருந்தன? ஆகியவை குறித்த உரையாடல்கள் இடம் பெற்றுள்ளன. சுவடிகளில் கிடைத்த பாடங்கள் எவ்வகையில் இருந்தன? அப்பாடங்களை எவ்விதம் அச்சுக்கு மாற்றினர்? ஆகிய பிற செய்திகள் குறித்த விவரணங்களைத் தொகுத்து வழங்குகிறார். இவ்விதம் தமிழில் உள்ள நூல்கள் குறித்து உருவாக்கப்பட்டுள்ள தரவு நூல்களைப் (Catalogues) பேராசிரியர் பட்டியலிட்டுள்ளார். இவர் கொடுத் துள்ள 22 பட்டியல் நூல்கள் (Bibliographies and Catalogues) தமிழின் வளத்தைப் புரிந்துகொள்ள உதவுகின்றன. இந்நூல்கள் இலண்டன் அருங்காட்சியக நூலகத்தில் இன்றும் உள்ளன. இவற்றில் ஒருசில பட்டியல் நூல்களே இங்கே உள்ளன. தமிழின் வளங்களை அறிய நாம் இலண்டனுக்குத்தான் செல்ல வேண்டும். இப்பட்டியலில் உள்ளவை அனைத்தும் இணைக்கப்பட்ட பட்டியல் நூல் இதுவரை உருவாக்கப் பட்டதாக அறிய முடியவில்லை. சுவெலெபில் குறிப்பிடும் இந்நூல்களைப் பார்த்த தமிழியல் ஆர்வலர்கள் ஒரு சிலரே இருக்கக் கூடும். அதுவும் ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்தவர் களால் மட்டுமே இயலும். தமிழ்நாட்டில் இருந்துகொண்டு தமிழியல் ஆய்வு செய்வதன் பின்புலத்தை இதன்மூலம் புரிந்துகொள்ள முடியும். இந்நூல்கள் குறித்த விரிவான விவரங்களை விரிவு கருதி தவிர்க்கிறேன்.

செவ்விலக்கியங்களின் காலத்தொடர்ச்சிக்கும் இலக்கியப் பிரதிகளுக்குமான உறவு என்பது அப்பிரதிகள் பல பரிமாணங்களில் வளர்ந்து செல்ல உதவும். ஒவ்வொரு காலச் சூழலிலும் ஒவ்வொரு வகையான வாசிப்பும் அதனைச்

சார்ந்த பிரதியாக்கமும் நடைபெறும். இலக்கிய வரலாறு எழுதும்போது இதனை எவ்விதம் பதிவு செய்வது என்ற உரையாடலை இந்நூலின் இரண்டாம் இயலில் விவாதித்திருப்பதைக் காண்கிறோம். தமிழ் இலக்கிய வகைமைகளை எவ்விதம் வகைப்படுத்திப் பேசுவது? என்பது சிக்கலான ஒன்றாகும். இச்சிக்கல் குறித்த உரையாடல் இந்நூலில் விரிவாகச் செய்யப்பட்டிருப்பதைக் காண்கிறோம். தமிழ் இலக்கியங்களின் காலம் பற்றிய கணிப்பு என்பது தம்முள் பல சிக்கல்களைக் கொண்டிருப்பதை இந்நூல் விரிவாக விவாதிக்கிறது. நூல்கள் உருவாக்கம் என்பதைக் குறிப்பிட்ட காலமாகக் கொள்வதா? மரபு உருவாக்கத்தைக் கால எல்லைக்குள் எப்படி அடக்குவது? மேற்குறித்தவை தமிழ் இலக்கிய வரலாறு எழுதுவோர் முன் எழும் சிக்கல்கள். இவற்றை சுவெலெபில் விரிவான உரையாடலுக்கு உட்படுத்துகிறார். இதன் மூலம் 'இலக்கியத்தின் காலம்' குறித்துக் காட்டமைக்கப் படும் அரசியலுக்கும் தேசிய இன அடையாளங்களுக்குமான உறவுகளைப் புரிந்துகொள்ள முடியும்.

மொழியின் அமைப்பிலிருந்து அம்மொழியிலுள்ள இலக்கியங் களின் காலத்தை அறியும் முறை குறித்தும் இந்நூல் பேசுகிறது. இலக்கிய வரலாற்றை மொழி வரலாறு மூலம் கட்டமைக்கும் முறைமைகளை இந்நூல் தெளிவு படுத்தும் முறை புதிய அணுகுமுறையாகும். மொழி, இலக்கியம் ஆகியவற்றின் இணைவு மற்றும் உறவு ஆகியவற்றை இதன்மூலம் புரிந்துகொள்ள முடியும். தமிழ்ச் செவ்விலக்கிய மரபின் பாணர் மரபை அடிப்படையாகக் கொண்டு தமிழ் இலக்கிய உருவாக்கத்தைப் பேராசிரியர் பேசுகிறார். இம்மரபு குறித்த மிக விரிவான விவரணங்களை இந்நூல் ஆவணப் படுத்தியுள்ளது. சிலப்பதிகாரம், மணிமேகலை, களவழி நாற்பது உள்ளிட்ட கீழ்க்கணக்கு நூல்கள், முத்தொள்ளாயிரம் ஆகிய நூல்களின் உருவாக்கப் பின்புலத்தைப் இந்நூல் உரையாடலுக்கு உட்படுத்தியுள்ளது. வைதிக மரபுகள் எவ்வகையில் தமிழ் பக்தி இலக்கியங்கள் உருவாகப் பின் புலமாக அமைந்தன என்ற விவாதத்தை நூல் முன்வைக்கிறது. திருமுறைகளும் வைணவப் பிரபந்தங்களும் எவ்வகையில் அமைந்துள்ளன, அதில் இசையின் இடம் எத்தகையது, என்ற விவரங்களை நூல் விவாதத்திற்கு உட்படுத்தியுள்ளது.

தமிழில் பாரத நூலின் தாக்கம், சமண மரபுகளின் தொடர்ச்சி, கம்பன் உருவாக்கம், சாத்திர நூல்கள் உருவாக்கம், உரையா சிரியர்கள் உருவாக்கம் ஆகிய பிற செய்திகள் முன்இடைக்காலத் தமிழ் இலக்கிய வரலாறாக அமைகிறது. பிற்பகுதியில் தமிழ்ச் சமூகத்தில் அரச நிர்வாகங்களில் ஏற்பட்ட இலக்கிய மாற்றங் களுக்கும் இலக்கிய உற்பத்திக்குமான உறவுகளைப்பற்றி நூல் பேசுகிறது. இவ்வகையில் தமிழ்ச் சமூக வரலாற்றின் ஒரு பகுதியாக தமிழ் வரலாறு அமைவதை பேராசிரியரின் நூல் தெளிவுபடுத்துகிறது. ஐரோப்பியத் தமிழியல் ஆய்வாளர் களின் கையேடாக இந்நூல் அமைகிறது. பேராசிரியரின் பிற இலக்கிய வரலாற்று நூல்கள் வெவ்வேறு தேவை சார்ந்தவை. இந்நூல் விரிவான தளத்தில் தமிழ் இலக்கிய வரலாற்றைப் பதிவுசெய்திருக்கிறது.

பேராசிரியர் கமில் சுவெலெபில் அவர்களின் மொழி/ மொழியியல் சார்ந்த நூல்கள் பின்வருமாறு:

- Comparative Dravidian Phonology (1970)
- Introduction to the Historical Grammar of Tamil Language (1970)
- Classical Tamil Prosody: An introduction (1989)
- Dravidian Linguistics: An introduction (1990)
- Tamulica et Dravidica: A selection of papers on Tamil and Dravidian Linguistics (1998)

மொழியியல் குறித்து இந்நூல்கள் மட்டுமின்றி பல்வேறு இதழ்களிலும் கட்டுரைகளை எழுதியுள்ளார். "Tamil culture" "Journal of Tamil studies" ஆகியவை அவ்வகையில் குறிப்பிடத் தக்க இதழ்கள். இதழ்களில் எழுதப்பட்ட கட்டுரைகள் அனைத்தும் தொகுக்கப்படவில்லை. இப்பின்புலத்தில் திராவிட மொழியியல் குறித்து மிக விரிவாகவும் எண்ணிக்கை அளவில் கூடுதலாகவும் ஆய்வை மேற்கொண்டு நூல்களையும் கட்டுரைகளையும் கமில் சுவெலெபில் எழுதியுள்ளார். திராவிட மொழியியல் ஆய்வில் ஐரோப்பியப் பேராசிரியர்களில் இவரையே முதன்மையானவராகக் கருத இயலும்.

திராவட மொழிகள் குறித்து பிரிட்டானிக்கா கலைக்களஞ்சி யத்தில் மிக விரிவான கட்டுரையைப் பேராசிரியர் எழுதி யுள்ளார். "One hundred years of Dravidian Comparative Philology" (Tamil culture. vol. ix: No.2: 1961) எனும் கட்டுரையை இராபர்ட் கால்டுவெல் *(7.5.184--26.8.1891)* நூலை அடிப்படையாகக் கொண்டு எழுதியுள்ளார். அக்கட்டுரை யில் இவர் தரும் விவரங்களைத் தொகுத்துப் பார்க்கும்போது, திராவிட மொழியியலுக்கு இவரது பங்களிப்பை நாம் புரிந்துகொள்ள முடியும். 1856இல் கால்டுவெல் நூல் வெளிவந்தது முதல் 1961 வரை திராவிட மொழியியல் கிறித்தவத் தொண்டூழியம் செய்ய வந்தவர்களாலும், காலனிய ஆட்சியின் நிர்வாகத்திற்கு வந்தவர்களாலும், சுதேச ஆய்வாளர்களாலும் எப்படி யெல்லாம் படிப்படியாக முன்னெடுக்கப்பட்டது என்பதைப் பதிவு செய்துள்ளார். இப்பதிவுகளின் தொடர்ச்சியாக, 1950கள் முதல் சுவெலெபில் செய்த மொழி சார்ந்த ஆய்வுகளை மேலே கொடுத்துள்ள நூல்கள் மற்றும் கட்டுரைகளின் மூலம் நாம் விளங்கிக் கொள்ள முடியும். Tamil culture (1951-1963) இதழ்களில் பேராசிரியரின் கட்டுரைகள் தொடர்ச்சியாக வெளியிடப்பட் டுள்ளன. அவற்றைத் தொகுப்பாக வாசிக்கும் போது இவரது பணியின் பெருமையைப் புரிந்துகொள்ளலாம்.

பாரதியாரின் கவிதைகள் முதல் இருபதாம் நூற்றாண்டின் பல்வேறு புனைகதைகள் வரை இவர் கவனத்தில் கொண்டு செயல்பட்டார். இவற்றில் பலவற்றை ஐரோப்பிய மொழிகளில் மொழியாக்கம் செய்துள்ளார். தொ.மு.சி.ரகு நாதன் அவர்களின் 'பஞ்சும் பசியும்' நாவலை 1960களில் செக் மொழியில் பெயர்த்துள்ளார். தொல்காப்பிய எழுத்து மற்றும் சொல்லதிகாரங்களை "Journal of Tamil studies" என்ற இதழில் மொழிபெயர்த்து வெளியிட்டார். சங்கப் பாடல்கள், திருக்குறள், மணிமேகலை, இக்காலக் கவிதைகள், புனை கதைகள் ஆகியவற்றிலிருந்து தெரிவு செய்யப்பட்ட பகுதிகளை ஆங்கிலம் மற்றும் செக் மொழியில் மொழி பெயர்த்துள்ளார். உ.வே.சாமிநாத அய்யரின் 'என் சரித்திரத்தை' ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

நாட்டார் வழக்காற்றியல் துறையிலும் ஈடுபாடு உடையவர். தோடர், இருளர் குறித்த ஆய்வுகளைச் செய்துள்ளார். அவை நூலாக வெளியிடப்பட்டுள்ளன. பழங்குடி மக்களின் வாழ்க்கை மற்றும் மொழி குறித்த ஆய்வுகளைச் செய்துள்ளார். சிற்பத்துறை சார்ந்த ஆய்வுகளையும் மேற்கொண்டுள்ளார். 'சிவனின் ஆனந்த தாண்டவம்' குறித்து அவர் எழுதியுள்ள நூல் சிற்ப மரபிற்கும் இலக்கிய மரபிற்குமான உறவுகள் குறித்துப் பேசுவதாகும். இவ்வகையில் தமிழியல் ஆய்வை மேற்கொண்டு ஐரோப்பிய அறிஞர்களிடத்தில் தமிழ் குறித்த புரிதலை உருவாக்கியதில் இவருக்குத் தனித்த இடமுண்டு. "தமிழணங்கை ஓர் ஐரோப்பி ஆங்கிலத் தேரில் ஏற்றி அனைத்துலக உலா விட்டால்தான் பாருலகம் வியந்து மகிழ்ந்து போற்றும். மதிக்கும். இதனைச் செய்துள்ள டாக்டர் கமில் சுவெலெபிலுக்கு ஒரு காலத்தில் சென்னைக் கடற்கரையில் சிலை எழுப்பப்பட்டாலும் தவறில்லை." *(1974)*

பேராசிரியர் ந.சஞ்சீவி அவர்களின் மேற்குறித்த கூற்று பேராசிரியர் கமில் சுவெலெபில் அவர்களை அடையாளப் படுத்துவதாகவே அமைந்திருக்கிறது. ●

# த.மலர்ச்செல்வன் கவிதைகள்

## புனைவுக்காலத்து எரிநெருப்பில் வாழும் குறளிக்குஞ்சன்

புனைவுகள் மெல்ல எழத் தொடங்கிவிட்டன.
நட்சத்திரங்களின் எரிப்பில்
பிணம் அவியுமென்ற
காலங்கடந்த நூற்றாண்டுப் பேச்சு
இன்று
கடிவாளம் பூட்டிக்கொண்டு
புதுக்குதிரையில் வந்துள்ளது.
நான்
புரவிகளின் புழுதியுடன் வாழ்ந்தவன்.
குளம்பொலிகளின்
பேரோசையில் கண்ணயர்ந்தவன்.
சாவின் பிளிறலில் கைகோர்த்தவன்.
எந்தப் புனைவிலும்
நான் வாழ்வேன்.

நீ என்ன செய்வாய்?
புனைவுகளைப் பெருக்கிக்கொண்டு
காலத்தின் கோடுகளை மட்டுமே
அழிக்க முடியும்.
அல்லது
கடலின்மீது நடந்து
கதையளப்பாய்— பின்
நீ வென்றதாய் புகழ் பாடுவாய்—
இதுதான் நீ கற்றது.

நாம் நாமாகவே இருக்கின்றோம்.
இன்னும் விட்டுப்போகாத
நம்பிக்கையுடன்
காத்துக்கொண்டு....
உங்கள் புனைவுகள்
எம்மை ஏதும் பண்ணா.
எந்தப் புனைவிலும்
நான் வாழ்வேன்.

காலம் எம்பக்கமும் வீசும்
புனைவுகளை நாமும்
உற்பவிப்போம்.
நீ?....
சிறகுகளை வளர்த்தெடுத்து
எந்தக் கடல் தாண்டுவாய்
சொல்.
சொல்.

இன்று
சிறகுகள் தொலையும் காலத்தில்
நான் எரிநெருப்பில் வளர்கிறேன்.
நான்
நான்
பிடுங்கப்பட்ட சிறகுகளுடன் வாழ்வேன்
நீ என்ன செய்வாய்?
●

## நான் நெருப்பு

சாவின் முடிச்சுகள்
இறுக்கப்பட்ட வியூகத்திற்குள்
மெல்ல நகர்கின்றன.
ஆயிரம் கோட்டைகளைத் தகர்த்து
இரத்த ஆற்றில் பாய்ந்தவனுக்கு
இந்தச் சின்னஞ்சிறு குட்டை
பெரும் இமயமா?
ஒரு நொடிப்பொழுதிலே
தகனப் பொறியாகும்
ஒரு வெறுமைக்கு
நீங்கள் இத்தனை காலம்
ஆனது
வெட்கம்.

நான் அசைக்க முடியாத
பெரும் முடி.
ஆயிரமாயிரம் சேனைகளை வைத்துக்கொண்டு
.....................................................................
"ச்சா(ய்)"
ஒருநொடிப்பொழுதில்
வீழ்த்துவதை விட்டுவிட்டு
இத்தனை காலம் ஆனது ஏன்?

நான் பெருவெளி.
எனக்குத் தெரியும்
ஒன்றுமேயில்லாத வெறுமையை
நீங்கள் இத்தனை காலமும்.......
நான் பெரும் முடி.
ஏதுவாகவும் தோன்ற முடியும்.
"சொல்வதைக் கேளுங்கள்"
ஒன்றுக்குள்ளேதான் வாழ்வு.
எனக்குத் தெரியும்
எதைஎதை எப்படி......

நான் நெருப்பு.
நான் காற்று.
●

## கனக்கும் கணத்தில் தெரிகின்ற உனது மொழி

சொரியலாய் இரைகிறது—
'ஆள் இரை'.
எல்லாம் கடந்து
வெறுமையின் மனத்தை
உசுப்ப முடியாது
மண்டியிட்டு நிற்கின்றான் போர்வீரன்.

தூசு படர்ந்த இராச்சியத்தின்
படர்ந்துகிடந்த சிறுகொடியாய்
ஒவ்வொரு கணத்தையும்
வெற்றிகொண்டு
குளிர்விறைப்பில்
ஆவி பறந்து
விறைப்பற்றுக் கிடந்த உடலுக்கு
சொரியலாய் இரைகின்ற 'ஆள் இரை'
ஒருபொருட்டா?

எங்கும் கடந்து
எதிலும் படர்ந்து
எனக்குத் தெரியும் உனது மொழி.
எனது மொழி
உனக்குப் புரியா.
நான் வாழ்வின்
கூர்விளிம்பில்
நடப்பவன்.
நீ.....
பாசி படர்ந்த
பாறைகளின் பின் ஒழிப்பவன்.

எனக்குத் தெரியும்
உனது மொழி.

Registrar of Newspaper of India Dis.5479/90
**KAVITHAASARAN**